# முருகன் பாடல்
# பத்தாம் பகுதி

தெட்சணத்தார் வேளாளர் மகமை
பரிபாலன சொசைட்டி லிமிட்டெட்
98, ஜிந்துப்பிட்டி தெரு
கொழும்பு-11, இலங்கை

உரிமை பதிவு
யுவ ஆவணி
திருவள்ளுவராண்டு 2026
1995 ஆவணி

ஆறு பகுதிகள் கொண்ட ஒரு
தொகுதியின் விலை.

இலங்கையில் : ரூபா 2700|-
இந்தியாவில்: ரூபா 1200|-
பிறநாடுகளில் அமெரிக்க டாலர் 60|-

பாட்டு முதற் குறிப்பு அகராதி
பாட்டுடைக் கோவில் அகராதி
பாட்டுத் தலைப்பு அகராதி
ஆசிரியர் அகராதி
என்பன
பன்னிரண்டாம் பகுதியில்
இறுதிப் பக்கங்களாக உள.
தொகுப்பின் பொருளடக்கம்
முழுமையும் எல்லாப் பகுதிகளிலும்
முன் பக்கங்களில் உள.

ஒளிஅச்சுக்கோப்பு, அச்சிடல்:
காந்தளகம், 4, முதல்மாடி, 834, அண்ணாசாலை,
சென்னை-600 002. தொலைபேசி: 834505, 8250050.



இரத்தினகிரி
அருள்மிகு பாலமுருகன் கோவில்

# பொருளடக்கம்

## ஒன்பதாம் பகுதி



## பத்தாம்பகுதி

## பதினோராம் பகுதி



## பன்னிரண்டாம் பகுதி

உ

# செல்வச் சந்நிதிக் கந்த நாம பஜனை

ந. சுப்பிரமணியம்

## கந்தா வா வா வா!

சந்நிதிவாழ் கந்தனே வா வா வா
சாந்திநிறை ஆறுமுகா வா வா வா
சிங்காரத் திருமுருகா வா வா வா
சீர்தொண்டை மானாற்றோய் வா வா வா
சுந்தரவேல் பிடித்தவனே வா வா வா 5
சூரனையும் வென்றவனே வா வா வா
செல்வச்சந் நிதிவேலா வா வா வா
சேவற்கொடி கொண்டவனே வா வா வா
சைவர்களின் தெய்வமேநீ வா வா வா
சொக்கநாதன் 'திருமகனே வா வா வா 10
சோதிவடி வானவனே வா வா வா
சௌக்கியவாழ் வளிப்பவனே வா வா வா
சச்சிதானத் தம்மருள்வாய் வா வா வா
வா வா வா கந்தா வா வா வா
நீ வா வா கந்தா வா வா வா 15
மா லோன் மருகா மயில் வா கனனே
வா வா கந்தா வள் ளி மணாளா
ஓம் ஓம் கந்தா உமை யாள் மகனே
கந் தா கந்தா கதிர் வேற் கந்தா
ஓம் கந்தா ஓம் கந்தா
ஓம் ஓம் கந்தா 21



## வா வா கந்தா தேர் மேல் வா

பச்சைமயில் வாகனனே வா வா வா
பார்வதியின் திருமகனே தேர் மேல் வா
பிறர்துயரந் தீர்ப்பவனே வா வா வா
பீதாம்ப ரங்கட்டித் தேர் மேல் வா
புகழ்செல்வச் சந்நிதியோய் வா வா வா 5
பூத்தெய்வ யானையொடு தேர் மேல் வா
பெருந்தொண்டை மானாற்றோய் வா வா வா
பேசரிய அற்புதங்கள் செய் வோய் வா
பைத்தியனின் திருமகனே வா வா வா
பொற்சேவற் கொடியோனே வா வா வா 10
போர்வேலைக் கரத்தேந்தித் தேர் மேல் வா
பௌத்தர்களும் தொழுபவனே வா வா வா
பப்பாளி முலைவள்ளிப் பா கா வா
வா வா வா கந்தா தேர் மேல் வா
தேர் மேல் வா கந்தா வா வா வா 15
மா லோன் மருகா
மயில் வா கனனே
வா வா கந்தா
வள் ளி மணாளா
ஓம் ஓம் கந்தா 20
உமை யாள் மகனே
கந் தா கந்தா
கதிர் வேற் கந்தா
ஓம் கந்தா
ஓம் கந்தா
ஓம் ஓம் கந்தா. 26

செல்வச் சந்நிதிக் கந்த நாம பஜனை முற்றிற்று

உ

# செந்தில் முருகன் வழிநடைப் பாட்டு

## தமிழண்ணல்

வண்ணமுறக் காண்பதற்கே செந்தில்வாழ் முருகா
வழிநடந்து வருகின்றோம் எந்தையே முருகா
கண்ணிறையக் காட்சிதரும் கவினுருவே முருகா
களிப்பருள வேண்டுகின்றோம் தந்தருள்வாய் முருகா! 1

வள்ளிதெய்வ யானையுடன் செந்தில்வாழ் முருகா
வழிநெடுகத் துணையாகி வருபவனே முருகா
துள்ளுமத வேலெமக்குத் துணைதருவாய் முருகா
துயர்களைய மயிலமர்ந்து வந்தருள்வாய் முருகா! 2

நீலநிறக் கடலலையின் மேலெழுந்து வருவாய்
நிகரற்ற செஞ்சுடராய்ப் பேரொளியைத் தருவாய்
கோலமயில் மீதிருக்கும் குமரனுனைக் காண்போம்
கொடுந்துயரம் பறந்தகல விரைந்துநடை நடந்தோம்! 3

வாழ்க்கைஒரு நடைப்பயணம் என்பதனை உணர்ந்தோம்
வழிநடந்து வழிநடந்து வருவதென விரைந்தோம்
சூழ்ந்திருக்கும் வளங்களெலாம் வழிப்பயணக் காட்சி
சுடர்வேலன் திருவடியை அடைவதுநம் மாட்சி! 4

வளங்கொழிக்க வரம்தருவாய் வேலவனே முருகா!
கடைக்கணித்தால் பொன்குவியும் மாலவனின் மருகா!
நினைத்ததெலாம் நடக்கவைக்கும் வேலவனே முருகா!
அனைத்தையுமே எமக்களிக்கும் மாலவனின் மருகா! 5



ஆணவத்தை விட்டுவிட்டுப் புறப்பட்டோம் முருகா
அறியாமை மும்மலத்தை அகற்றிவிட்டு வந்தோம்
காணுமுன்னிற் கலப்பதற்கே கடுகிநடை நடந்தோம்
காவடிகள், பாற்குடங்கள் தோள்ஏந்தி விரைந்தோம்! 6

வாயில்வழி தேடிவரும் அடியரெமைப் பார்ப்பாய்
தாயனையாய் எம்சோர்வைத் தாங்கிவர வழைப்பாய்
பனிபடர்ந்த சோலையில்உன் பசுமையினைக் காண்போம்
கனிநிறைந்த காவிலுன்றன் கருணையினைக் காண்போம்! 7

இருள்நிறைந்த வழியில்நீ ஒளியாகி வருவாய்
இடர்மிகுந்த பாதையில்நீ துணையாகி வருவாய்
வெயில்நிறைந்த போதினிலே நிழலாகி நிற்பாய்
வேட்கைமிகும் போதில்நீர்த் தடமாகி நிற்பாய்! 8

காலைஒளி ஆகிவரும் காவலனே முருகா
வேலின்ஒளி நண்பகலில் விளைப்பவனே முருகா
மாலைஒளி ஆகிவரும் மாலவனின் மருகா
மதியிலும்உன் தண்ணருளை வடித்தளிக்கும் முருகா! 9

ஏர்திகழும் கார்முகிலின் எழிலுருவே முருகா
பார்புரக்கும் வயற்பரப்பின் பசுஞ்சுடரே முருகா
உன்னடியை நாடிவந்தோம் ஓங்கார முருகா
பொன்னடியைத் தந்தெம்மைப் புரந்தருள்வாய் முருகா! 10

செந்தில் முருகன் வழிநடைப் பாட்டு முற்றிற்று

உ

# முருகன் பாட்டு

## சுப்பிரமணிய பாரதியார்

ராகம்-நாட்டைக்குறிஞ்சி தாளம்-ஆதி

பல்லவி

முருகா-முருகா-முருகா

சரணங்கள்

வருவாய் மயில்மீ தினிலே
வடிவே லுடனே வருவாய்
தருவாய் நலமுந் தகவும் புகழுந்
தவமுந் திறமுந் தனமுங் கனமும். (முருகா) 1

அடியார் பலரிங் குளரே
அவரை விடுவித் தருள்வாய்
முடியா மறையின் முடிவே! அசுரர்
முடிவே கருதும் வடிவே லவனே! (முருகா) 2

சுருதிப் பொருளே, வருக.
துணிவே, கனலே, வருக.
கருதிக் கருதிக் கவலைப் படுவார்
கவலைக் கடலைக் கடியும் வடிவேல் (முருகா) 3

அமரா வதிவாழ் வுறவே
அருள்வாய்! சரணம், சரணம்!
குமரா, பிணியா வையுமே சிதறக்
குமுறும் சுடர்வே லவனே, சரணம். (முருகா) 4



அறிவா கியகோ யிலிலே
அருளா கியதாய் மடிமேல்
பொறிவே லுடனே வளர்வாய், அடியார்
புதுவாழ் வுறவே புவிமீ தருள்வாய். (முருகா) 5

குருவே, பரமன் மகனே,
குகையில் வளருங் கனலே,
தருவாய் தொழிலும் பயனும், அமரர்
ஸமரா திபனே, சரணம் சரணம். (முருகா) 6

## முருகன் பாட்டு

வீரத் திருவிழிப் பார்வையும்-வெற்றி
வேலு மயிலுமென், முன்னின்றே-எந்த
நேரத் திலுமெனைக் காக்குமே;-அன்னை
நீலி பராசக்தி தண்ணருட்-கரை
யோரத்தி லேபுணை கூடுதே;-கந்தன்
ஊக்கத்தை யென்னுள நாடுதே;-மலை
வாரத்திலேவிளை யாடுவான்-என்றும்
வானவர் துன்பத்தைச் சாடுவான்.

வேடர் கனியை விரும்பியே-தவ
வேடம் புனைந்து திரிகுவான்;-தமிழ்
நாடு பெரும்புகழ் சேரவே-முனி
நாதனுக் கிம்மொழி கூறுவான்;-சுரர்
பாடு விடிந்து மகிழ்ந்திட-இருட்
பார மலைகளைச் சீறுவான்;-மறை
யேடு தரித்த முதல்வனும்-குரு
வென்றிட மெய்ப்புக ழேறுவான். 2

தேவர் மகளை மணந்திடத்-தெற்குத்
தீவி லசுரனை மாய்த்திட்டான்;-மக்கள்
யாவருக் குந்தலை யாயினான்;-மறை
அர்த்த முணர்த்துநல் வாயினான்;-தமிழ்ப்

பாவலர்க் கின்னருள் செய்குவான்;-இந்தப்
பாரி லறமழை பெய்குவான்;-நெஞ்சின்
ஆவ லறிந்தருள் கூட்டுவான்;-நித்தம்
ஆண்மையும் வீரமு மூட்டுவான். 3

தீவளர்த் தேபழ வேதியர்-நின்றன்
சேவகத் தின்புகழ் காட்டினார்;-ஒளி
மீவளருஞ் செம்பொ னாட்டினார்-நின்றன்
மேன்மையி னாலற நாட்டினார்;-ஐய,
நீவள ருங்குரு வெற்பிலே-வந்து
நின்றுநின் சேவகம் பாடுவோம்-வரம்
ஈவள் பராசக்தி யன்னைதான்-உங்கள்
இன்னரு ளேயென்று நாடுவோம்-நின்றன்
(வீரத் திருவிழிப்) 4

முருகன் பாட்டு முற்றிற்று



உ

# வேல் பாட்டு

## குகஸ்ரீலஸ்ரீ அருணாசல அரணடிகள்

சீர்மேவும் எட்டுக்குடி வாழும் வேல்வேல்
தெய்வயானை தன்னுடைய செல்வனே நீ வாவா
பார்புகழும் சிந்துதமிழ் பாட வேல்வேல்
பன்னிருகை யாண்டியு நீ முன்னருளவாவா
எச்சரிக்கை என்றிடும்பன் கூற வேல்வேல்
இருபுறங் காவடிகள் நின்றிடுதே வாவா
பச்சைமயி லேறுகின்ற பாலா வேல்வேல்
பக்ஷம்வைத்து என்கலியைத் தீர்த்திடவும்வாவா
அன்பான சந்நிதியில் வந்து வேல்வேல்
ஆறுமுக வேலவனே ஆதரிக்கவாவா
நாதமொடு கீதங்களும் முழங்க வேல்வேல்
நாதாந்த மெய்ப்பொருளை நம்பினேனேவாவா
காணிக்கை கொண்டு வெகுகோடி வேல்வேல்
காத்திருக்கார் சுவாமிமலை ஆண்டவனேவாவா
மச்சங்களின் காவடிகளதுவும் வேல்வேல்
மகிழ்ச்சியாய் வந்திருக்கு கண்டிடவும்வாவா
ஆற்றுமணல் சர்க்கரையு மாக வேல்வேல்
அன்பான காவடிகள் வந்திருக்குவாவா 10
எத்தனை அலகுகளோ பூண்டு வேல்வேல்
எண்ணிறந்த காவடிகள் வந்திருக்குவாவா
வெள்ளிரதக் காவடிகள் கோடி வேல்வேல்
வெகுவாக வந்திருக்கு கண்டிடவும்வாவா
மெய்முழு தலகுகளும் பூண்டு வேல்வேல்
மேதினியோர் நெருங்கிட வந்திருக்குவாவா
அலகுமேல் காவடிகள் நிறுத்தி வேல்வேல்
ஆலவட்டம் பறக்குதே ஐயனேநீவாவா

கானமயில் காவடிகள் கோடி வேல்வேல்
கொண்டுவந்து நின்றிருக்கு கண்டிடவும்வாவா
பூந்தேரும் ரதங்களும் வருதே வேல்வேல்
பூமிமுழு தாடுமயில் வாகனனேவாவா
அபிஷேக சாமான்க ளெடுத்து வேல்வேல்
ஆடிவருங் காவடிகள் கண்டி வும்வாவா
தேவர்கள் நெருங்கி வரக்கூடி வேல்வேல்
தேசங்களி லுள்ளவர்கள் தெரிந்திடவேவாவா
வேதியர்கள் ஒருபுறமுங்கூடி வேல்வேல்
வீதிகளில் வேதங்களும் முழங்குதே நீவாவா
தங்கரத காவடிகள் உந்தன் வேல்வேல்
சந்நிதியில் வந்துவிளை யாடுதிதோவாவா
ஆலவட்டம் சாமரங்கள் பிடித்து வேல்வேல்
அசைந்தாடுங் காவடிகள் வந்திருக்குவாவா 20
எத்தனை விதக் காவடிகள் வருதே வேல்வேல்
எண்ணிடவும் முடியுமோசொல் புண்ணியனேவாவா
அன்பான சந்நிதியின் முன்னே வேல்வேல்
அடியார்கள் வந்திருக்கார் ஐயனே நீவாவா
மூல கணபதிக் கிளையோனே வேல்வேல்
முப்பொருளு மானசிவ சற்குருவேவாவா
ஆண்டிமக னாண்டி மலையாண்டி வேல்வேல்
ஆண்டிசிலை யாண்டிமக னாண்டி யேநீவாவா
மந்திரஞ்சேர் மெய்ப்பொருளே உன்னை வேல்வேல்
வாலையம்ம னீன்றெடுத்த மாமுனியேவாவா
அன்பருள மேவுகின்ற மணியே வேல்வேல்
ஆராரோ ஆறுமுக தெய்வமே நீவாவா
உம்பர்குலம் வாழவந்த நாதா வேல்வேல்
ஓம்நம சிவாயகுரு தேசிகனேவாவா
தென்பொதிகை அகஸ்தியரும் பணிய வேல்வேல்
சிவசிவா எங்களுட செல்வனே நீ வாவா
பூரணமாய் நின்றபரம் பொருளே வேல்வேல்
பூரிப்புடன் இச்சமயம் புண்ணியனேவாவா
நாடுகின்ற மெய்ப்பொருளே சுவாமி வேல்வேல்
நாதாந்த லட்சணியாள் பாலனேவாவா 30
தேடுகின்ற மெய்ப்பொருளே ஐயா வேல்வேல்
சிவசிவா சின்மயனே செல்வனே நீவாவா



துப்பையனே சுவாமிமலை நாதா வேல்வேல்
துதித்திடும்உன் னடியார்க்கு அருள்புரியவாவா
ஆடுகின்ற நாதாந்தப் பொருளே வேல்வேல்
அடிமையைக் காத்தருள ஐயனே நீவாவா
கோலமயில் மீதினிலே குமரா வேல்வேல்
குழகனேஉன் னருள் கொடுக்க வள்ளியுடன் வாவா
ஈராறு பன்னிருகை வேலா வேல்வேல்
இருவினைகள் நீங்கிடவும் வந்தருளவாவா
அரகரா திருச்செந்தூர் வேலா வேல்வேல்
ஆறுமுக தேசிகனே ஐயனே நீவாவா
சரவண பவகுரு நாதா வேல்வேல்
சுவாமிமலை மீதமர்ந்த சற்குருவே வாவா
பொன்னுமணி உன்னழகைக் கூற வேல்வேல்
மன்னுமாதி சேடனாலும் முடியுமோ நீவாவா
கண்டவர்கள் கன்மவினை யோட வேல்வேல்
அண்டர்களும் வந்திருக்க ஐயனே நீவாவா
கார்த்திகையில் வந்துனது பாதம் வேல்வேல்
கண்டவர் துயரமது நீங்கிடவும் வாவா
சித்திரை பருவமதில் காண வேல்வேல்
சீர்பெறவும் வந்திருக்கார் ஐயனே நீவாவா
பங்குனி உத்திரத்திற் காண வேல்வேல்
தங்கியிருக் கிறாருந்தன் சந்நிதியில்வாவா
அபிஷேகம் நடப்பதனைப் பார்க்க வேல்வேல்
அனைவோர்கள் வந்திருக்கார் ஐயனே நீவாவா
எலுமிச்சை நாரத்தம் பழங்கள் வேல்வேல்
ஏகமாகப் பன்னீரது வந்திருக்குவாவா
சந்தனாபி ஷேகமதைக் காண வேல்வேல்
சர்வஜனங் கூடிவிட்டார் சற்குணனே வாவா
விபூதி அபிஷேகமதைப் பார்க்க வேல்வேல்
விஞ்சையர்கள் கூடிவந்து நிற்கிறார்கள் வாவா
காவிவஸ் திரமிடையி லுடுத்தி வேல்வேல்
கண்டத்தில் ருத்திராக்ஷமாலைக் காணவுமேவாவா
கையினில்வே லாயுதத்தின் காட்சி வேல்வேல்
கண்டிடவும் தேவர்களும் வந்திருக்கார்வாவா
எட்டுக்குடிச் சந்நிதியைப் பார்க்க வேல்வேல்
இந்திரலோகங் கயிலைமலை ஈடல்லவேவாவா

இடும்பன் சந்நிதியினிலே வந்து வேல்வேல்
இறங்கிடுங் காவடிக்கு இடமில்லையே வாவா 50
பரம சற்குரு வடிவேலா வேல்வேல்
பரமனுடை யதிரு பாலகனே வாவா
தென்பொதிகை வாழுங்குரு முனிக்கு வேல்வேல்
தெரியஉப தேசமதைச் செய்தவரே வாவா
அண்டர்கள் கிடுகிடென நடுங்க வேல்வேல்
அசுரர்களை வேரறுத்த ஐயனே நீ வாவா
தேவர்கள் சேனாதிபதியும் நீயே வேல்வேல்
தெய்வயானையு மகிழ்ந்திடும் செல்வனும் நீயே
முக்கனி சர்க்கரை பாலுடனே வேல்வேல்
முனிவர்கள் கூட்டத்துடன் வந்திருக்கார்வாவா
முத்துக்கும ரேசமுரு கையா வேல்வேல்
முப்புர மெரித்தவரின் புத்திரனே வாவா
ஆறுபடை வீடதனில் மேவும் வேல்வேல்
ஆறுமுகத் தையனே நீ அன்புடனே வாவா
சத்துரு சங்காரவடி வேலா வேல்வேல்
சாமிமலை மீதமர்ந்த சற்குருவே வாவா
ஆதிசிவ ரூபமய மான வேல்வேல்
அகண்ட பரஞ்சுடரே ஐயனே நீவாவா
ஏரகத்தமர்ந்த குரு சுவாமி வேல்வேல்
எங்கள்வினை தீர்த்திடவே எழுந்தருளிவாவா 60
காவியுடை தண்டுகமண் டலமும் வேல்வேல்
கையில்வடி வேலுடனே் காட்சிதரவாவா 61

வேல்பாட்டு முற்றிற்று



# வேலன் பாட்டு

## சுப்பிரமணிய பாரதியார்

ராகம்-புன்னாகவராளி தாளம்-திஸ்ர ஏகம்

வில்லினை யொத்த புருவம் வளைத்தனை,
வே லவா !- அங்கொர்
வெற்பு நொறுங்கிப் பொடிப்பொடி
யானது, வேலவா!
சொல்லினைத் தேனிற் குழைத்துரைப் பாள்சிறு
வள்ளியைக்-கண்டு
சொக்கி மரமென நின்றனை தென்மலைக்
காட்டிலே.
கல்லினை யொத்த வலிய மனங்கொண்ட
பாதகன்-சிங்கன்
கண்ணிரண் டாயிரங் காக்கைக் கிரையிட்ட
வேலவா!
பல்லினைக் காட்டிவெண் முத்தைப் பழித்திடும்
வள்ளியை-ஒரு
பார்ப்பனக் கோலந் தரித்துக் கரந்தொட்ட
வேலவா! 1

வெள்ளலைக் கைகளைக் கொட்டி முழங்குங்
கடலினை-உடல்
வெம்பி மறுகிக் கருகிப் புகைய
வெருட்டினாய்.
கிள்ளை மொழிச்சிறு வள்ளி யெனும் பெயர்ச்
செல்வத்தை-என்றும்
கேடற்ற வாழ்வினை யின்ப விளக்கை
மருவினாய்.

கொள்ளைகொண் டேஅம ராவதி வாழ்வு
குலைத்தவன்-பானு
கோபன் தலைபத்துக் கோடித் துணுக்குறக்
கோபித்தாய்.
துள்ளிக் குலாவித் திரியுஞ் சிறுவன்
மானைப்போல்-தினைத்
தோட்டத்தி லேயொரு பெண்ணை மணங்
கொண்ட வேலவா! 2

ஆறு சுடர்முகங் கண்டு விழிக்கின்ப
மாகுதே;-கையில்
அஞ்சலெ னுங்குறி கண்டு மகிழ்ச்சியுண்
டாகுதே.
நீறு படக்கொடும் பாவம் பிணிபசி
யாவையும்-இங்கு
நீக்கி யடியரை நித்தமுங் காத்திடும்
வேலவா!
கூறு படப்பல கோடி யவுணரின்
கூட்டத்தைக்-கண்டு
கொக்கரித் தண்டங் குலுங்க நகைத்திடுஞ்
சேவலாய்!
மாறு படப்பல வேறு வடிவொடு
தோன்றுவான்-எங்கள்
வைரவி பெற்ற பெருங்கன லே,வடி
வேலவா! 3

வேலன் பாட்டு முற்றிற்று



உ

# ஆய்க்குடி முருகன் பிள்ளைத் தமிழ்

## ஸ்ரீமான் சிவராமலிங்கம் பிள்ளை

### விநாயகர் காப்பு

#### வெண்பா

பிள்ளைக் கவியாம் பெரியபிர பந்தமதை
வெள்ளைக் கவியாய் விளம்புதற்கே—துள்ளுமத
வாரணத்தா னுன்னை வணங்குதுநல் வாக்கருளுங்
காரணத்தா லுள்ளங் கனிந்து. 1

பாடற் கினிமைதரும் பத்திக்கு வித்தாகும்
நாடற் கினிமைதரு நற்குகனைக்—கூடற்குப்
பங்கமிலா ஞானப் பரிசளிக்கும் பாரினிலே
சங்கரன்றன் பிள்ளைத் தமிழ். 2

### அவையடக்கம்

பாலினீர் பிரித்துப் பருகும் புட்போல்
நூலி னுட்ப னுகரும் புலவர்கள்
மாலி னுக்கு மருகன் பிள்ளைத்தமி
ழாலின் னூலையன் பாகக் கையாள்வரே. 3

தேமேவு மாய்க்குடிவாழ் தேசிகன்பிள் ளைத்தமிழைப்
பாமேவு செந்தமிழாற் பாடவே—நாமேவும்
வாணியாள் வாலை மனோன்மணியா ளென்மனதில்
காணியாய் நின்றருள்வாள் காண். 4

## ஆய்க்குடி முருகன் பிள்ளைத்தமிழ்

காப்புச்செங் கீரையொடு கைத்தாலஞ் சப்பாணி
யார்ப்பமுத்தம் வாரானை யம்புலியே—பார்ப்பவளர்
சிற்றிற் சிறுபறைதேர் சேரும் பருவமுடன்
முற்றும்பத் தாகவரு முன்.

### 1. காப்புப் பருவம்

#### திருமால் வணக்கம்

தெய்வப் பிடியைக் குறமாதைச்
சேரும் பெருமா னயிற்பெருமான்
நீரா வினைதீர்த் தருள்புரியுஞ்
செவ்வேட் பெருமான் சிவபெருமான்
கைவைத் தெடுத்து முகத்தணைக்கக்
கௌரி முலைப்பா லமுதருந்திக்
களிப்பாய் ஆயர் குடிவாழுங்
கந்தப் பெருமான் றனைக்காக்க
மையிட் டழுத்தும் விழியுமையாள்
வாழ்த்துந் தமய னாகவந்த
வள்ளற் பெருமான் றிருவின்மண
வாளப் பெருமா னருட்பெருமான்
சைவத் துறைமே லோங்கிடத்தற்
காற்கும் பெருமான் சகப்பெருமான்
சத்து சித்தா னந்தமுறத்
தந்து வந்தாள் பெருமாளே. 1

#### சிவபெருமான் துதி

தினகர னனைய வொளிவளர் கருணை
செயமுன மருவு விடைபாகன்
சிவசம யமுமே பெருகவு மமணர்
திறமதை யொழியப் புரியோகன்
திருவடி பணிய வரகர வெனவே
துதிசெய வளரு மதிமோகன்
செகமுழு வதுமே புகழவு மமரர்
சிறைவிட வருவோ மெனுந்தியாகன்



மனமது வுருகி நினைபவ ரகமே
மருவிய சிவமா யுறைநீதன்
மருவிய கயிலை யிறையவ னெனவே
வளர்குரு ஞான மருள்நாதன்
மலைமக ளிமய குமரியை மருவி
மனமகிழ் வுறவாழ் மறைபோதன்
மருளினை யகல வருள்வது கடமை
மழவிடை யாயுன் சரணாமே. 2

சினமது பெருக வருமசு ரரையே
செயமுற வடிவேல் விடுவோனை
திடுதிடு வெனமுன் னவுணர்கள் பதறச்
செகமதி லமரே புரிவோனை
தினமயில் முதுகிற் பவனியும் வரவே
திருமலை வாயி லமர்வோனை
திருமரு கனுமாங் குறமகள் கொழுநன்
சிறியனைப் பாட வருள்வோனை
அனவர தனைமுன் னமரர்க ளுயவே
யருள்விட மமுதாய்க் கொளவேதா
னதுமிட றுறவே வமலையு முடனே
யதையமு தாகச் செயவேதான்
அருள்புரி கருணை யதுமிக வுதவி
யகமகிழ் வுறவே யதுவேளை
யறுமுக குமர சரவண பவனை
யாய்க்குடி வளர்முரு கையனைக் காக்கவே. 3

#### உமையவள் துதி

சிந்தா மணிக்கதிர் விரித்திலகு மேனியுஞ்
சித்திரத் தெழுத வொண்ணாச்
சிகரவரை போலிலகு திண்புயத் தழகுடன்
செம்பொற் பதக்க மார்புந்
தந்தா மரைக்கையுறு சதுர்வேத முறைமையுந்
தானோங்கு கல்வி வியனுந்
தானாய் விளங்கவரு கோனாகு மாய்க்குடிச்
சண்மு கவனைக் காக்கவே
செந்தா மரைத்தேவி யுன்றாள்கள் சதமெனச்
சேவிக்க வந்த செல்வி

திருவருளின் மகிமையா லருள்பெருகு கருணையால்
சேயேனை யிதுசு மயமே
வந்தா தரித்திடுவ துன்பார மலதினி
மறுவுதவி யில்லை யதனால்
மலையரையன் மகளான நிலைமையுறு முமைநினது
மலரடி யிறைஞ்சு வாமே. 4

### திருமகள் துதி

திங்கட் குடையுஞ் செங்கோலுந்
திறமாய் நடத்துஞ் சீர்மையினால்
திருமால் மருகன் பெருங்கருணை
சிறந்த முகச்செந் தாமரையுஞ்
செங்கை யதனில் வடிவேலுஞ்
சேவற் கொடியுந் தான்பிடித்துச்
சீரா ராயர் குடிச்சுப்பிர
மண்யத் தெய்வந் தனைக்காக்க
மங்கைப் பருவ முதலாக
மாலை மணந்த தேவியென
வழங்கு மெண்ணான் கறந்தழைக்க
வையத் தொளிருந் திருமகளாய்த்
தங்குந் தயாள குணநிதியே
தவமே யுருவாய்த் தானிலகுந்
தகுதி யுடைய சௌந்தரியே
தமியே னுனது சரணாமே. 5

### பராசக்தி துதி

ஆதியிரு ளந்தகா ரத்திலறி வசைவாகி
யதிலோசை யொளிவெளியுமாய்
அருளான விருண்டுவி லலியாய்ப்பெண் ணாணதா
யயனாகி யரியரனுமாய்
சோதியாய் விஞ்சையுப தேசித்த சத்தியாய்
சுதனாய் விநாயகனுமாய்
சுப்பிரமண் யக்கடவு ளாகியாய்க் குடிவளர்
தோன்றலைக் காத்திடுகவே
சாதிபல பேதமா யோதிவரு மக்களாய்
சரவசர வஸ்துமுதலாஞ்



சகமும் படைத்திலகு முத்தொழில் புரிந்துவரு
தற்பரைநீ யிதுவரையிலுஞ்
சேதியென் னாவெனச் சேமமா யென்றுனது
திருவாய் திறந்ததிலையே
சேயினைத் தாய்தள்ள நீதியோ நவிலுவாய்
சிற்பரா சக்தியுமையே. 6

### நாமகள் துதி

திருமால் புகழ்மகள் செயமோங் கிடுமகள்
செந்தமிழ் கொண்டமகள்
செகமெச் சிடுமக ளருளுற் றிடுமகள்
தீர மிகுந்தமகள்
மருவிய மகளுமென் னாவினி லுறைமகள்
வாணியு மதுரகவி
மழைமா ரிகளென வேபொழி யருள்மொழி
மாமக ளைப்பணிவாம்
குருபர னாயருள் தருமக னாய்வளர்
குமரக் கடவுளனாங்
குகமெய்ப் பரமனென் னகமொத் திடவருள்
கோமான் சீமானாங்
கரும மறிந்திது சமயமெ னாமறை
கழறுந் தேசிகனாங்
கங்கை மிகுந்திடு மாயர் குடிவளர்
கந்தனைக் காத்திடவே.

### பிரமன் துதி

அண்ட சராசர மெண்டிசை யாள
மந்தரர் முனிவோரும்
மசுரர் நிசாசரர் வசுதே வதைகளு
மன்பொடும் வந்தனமாய்த்
தெண்ட னிடும்பல தொண்டர் புகழ்ந்து
தினந்துதி செய்திடவே
சிவசுப் பிரமணி யனையாய்க் குடிவளர்
சேவல னைக்காக்க
பண்டய னைச்சிறை வைத்தவ னின்றொழில்
பரிந்து படைத்துடனே

பண்புகொ ளும்படி நண்பொடு மருவிய
பரிசும் பார்த்தவர்கள்
கண்டுநின் சன்னதி யண்டையில் வந்து
கசிந்து கசிந்துருகி
காத்திட வேகண் பார்த்திட வேயருள்
கவிகள் தழைத்திடவே. 8

### வள்ளி தெய்வானை துதி

வள்ளிதெய் வானை மணவாளா
மாமயி லேறுங் குணவாளா
வானவர் போற்றுங் கோமானே
வையக மேத்துஞ் சீமானே
மெள்ளவு வந்தருள் குமரேசா
மேவின வர்க்கருள் பரமேசா
விகசித ரத்தின மணிவோனே
மேவலர் தமைவெலத் துணிவோனே
கள்ள மனத்தினர்க் ககல்வோனே
களங்க மிலாமறை புகல்வோனே
கங்கையி லூற்றிட வந்தோனே
கலிதீர்த் தருளது தந்தோனே
புள்ளிக் கலபத் திவர்வோனே
புண்ணிய மாந்துதி பகர்வோனே
புகழு மாய்க்குடி வளர்குமரா
பூவைய ரிருவரைக் காத்தருளே. 9

### பலதேவர் துதி

கின்னரர் வயிரவ ரிந்திரர் நாரதர்
கிம்புரு டாதியருங்
கிருபை பொருந்து நவக்கிர காதிபர்
கெருடர்சித் தாதியரும்
வன்ன மிகுந்தரு ளுஞ்சத் தியர்களும்
வானவர் தானவரும்
மலரய னரனரி யிம்பர்க ளன்பர்கள்
மாமுனி வோர்களுமே
சொன்னல மிஞ்சிய சூரியர் சந்திரர்
துதிசொலு நால்வர்களும்



தும்பி முகன்குக னைம்பூ தத்தர்கள்
தொண்டர்க ளண்டர்களுங்
கன்னலின் முக்கனி யென்ன வருட்கவி
வாணரும் நாவலருங்
கருணை மிகுந்தரு ளாய்க்குடி முருகனைக்
காத்து முவந்திடவே. 10

### குமரகுருபரன்றுதி

சரவண பவகுக வறுமுக குருபர
சண்முக னேகாக்க
தருண மறிந்துமுன் னருண கிரிக்கருள்
தற்பர னேகாக்க
பிரணவ முறைதனை யரனிட மோதிய
பெம்மா னேகாக்க
பேதைய ரிருவோர் தம்மை மணந்திடு
பெருமா னேகாக்க
அரவணை துயில்பவ னரிமரு மகனே
வறுமுக னேகாக்க
அந்தரர் கந்தரு வாதியர் போற்றிடு
மையனே நீகாக்க
சிரவண முறுமனு பூதியர் துதிசெய்
சேவல னேகாக்க
திருவள ராய்க்குடி முருகனைக் காத்தருள்
சின்மய குருபரனே. 11

## 2. செங்கீரைப் பருவம்

நினைத்தது முடித்திட வருத்திய குகக்கடவு
ணீங்காத வேதமுடிமேல்
நீலக் கலாபமயில் மிசையேறி னாயன்பர்
நெஞ்சமொரு குடிசையாக
மனத்தினி லிருத்தியு மமைத்தமது ரக்கவிகள்
வாயார வாழ்த்துமகிபர்
மங்காத பேரன்பு பொங்கிவரு மானந்த
மாகடலை நீந்தியென்றுஞ்
சினத்தினை விடுத்திடச் சாத்வீக நிலையினைத்
தெரிந்துமெஞ் ஞானவீட்டில்

சென்றுநின் றுண்டான சிவஞான போதனை
செப்புசற் குருவதாய்நற்
றினத்தினை மதித்தருள் வரத்தினை யளித்தவா
செங்கீரை யாடியருளே
திங்கள்முக முங்கருணை தங்குமாய்க் குடிமுருக
செங்கீரை யாடியருளே. 12

கானல்நீ ரெனுமுலக பாசபந் தத்திலே
கட்டுண்ட சீவரெனவுங்
கானவன் கண்ணியி லகப்பட்ட மான்போற்
கலங்கும்வா னோர்க்கிரங்கி
கூனலம் பிறையணி சடைக்கடவுள் விழியினிற்
குலவிவரு பொறியாறையுங்
கொண்டுகால் வன்னியுஞ் சரவணையி லிட்டிடக்
கோகனக மீதுதித்தே
பானல்வாய்க் குழவியா யறுமாதர் திருமுலைப்
பாலினை யருந்தியும்பின்
பசியடங் காதழப் பார்வதி யெடுத்தினிய
பாலினை யருந்தவமுதத்
தேனுண் டுதைந்தருட் சிறுமுறுவல் கொண்டவா
செங்கீரை யாடியருளே
சித்திர மிகுத்திடு மாயர்குடிச் செல்வனே
செங்கீரை யாடியருளே. 13

பரவவரு திருவடியர் புகழ்பெருகு மகிமையும்
பாவாண ரோதும் வியனும்
பங்கயந் தன்னிலுறை செங்கணன் மருகனே
பாலசிவ சுப்பிர மண்யா
புரவலர்கள் திறமிகுதி யுளவசுரர் கிளையறப்
போரில்வெல வந்த புதல்வா
புள்ளிமயில் வாகனக் கடவுளென வள்ளியைப்
புணரவே சென்ற மகிபா
சரவசர வஸ்துவைத் தான்படைத் தேழுலகு
தான்போற்ற வருளு மதிபா
சரவண பவாவெனப் பலர்கள்துதி யோங்கவே
தான்வ ளர்சக நாயகா



சிரவண மிகுந்துமறை யுணரவருள் சித்தனே
செங்கீரை யாடி யருளே
தெங்குகள் நெருங்குமாய்க் குடிவளரு முருகனே
செங்கீரை யாடி யருளே. 14

ஆதிநா யகனெனவு மோதிய தபோதனர்க்
கத்துவித மானந்தமாய்
ஆவியுடல் பொருளெனக் கற்பணம தாகவரு
மன்பருக் கனுகூலமாய்
சோதிநா யகனல்ல சாதிநா யகனெனத்
தோன்றுமயில் வாகனனுமாய்
சூட்சாதி சூட்சமாய்ச் சொரூபஞா னம்பரவு
சுகானந்த நிலையுமாகி
வாதிநா யகனெனவும் வாதிக்க வருகின்ற
வல்வழக் கென்னநவில்வாய்
மலையரசன் மகளான குமரியருள் வாய்பதில்
வளர்கருணை கொண்டுவந்து
சேதியென் னாவெனக் கேட்டுதவு சிறுவனே
செங்கீரை யாடியருளே.
தெண்டனிடு தொண்டர்புகழ் கொண்டதாய்க் குடிமுருக
செங்கீரை யாடியருளே. 15

முந்தைநற் சரவணப் பொய்கையினி லாறுபொறி
முக்கணன் விழிக்க ணுற்று
முகமாறு குழவியா யறுமாதர் பாலுண்டு
மும்மல மகன்றி டாமல்
நொந்துநொந் தேயழக் கடைவாயின் னமுதொழுக
நுட்பமது கண்டு நொடியில்
நுதல்விழிகள் சுழியவரு மதலையே யென்றுபால்
நுகருவா யென்ற ணைக்க
தந்தைதா யிவர்கருணை கொண்டுமோ ருருவதாய்த்
தானு வகையாய் மடியினில்
தானுதைந் தேமுறுவல் கண்டிடவ் விருவருந்
தாலாட்டி வோராட் டியே
சிந்தையா னதுபொங்க வந்துவளர் கந்தனே
செங்கீரை யாடி யருளே
சிந்துரத் திலதமிடு மாயர்குடி வேலனே
செங்கீரை யாடி யருளே. 16

நீறேறு திருமேனி வேல்விழிகள் குழையாட
நித்திலச் சுட்டி யாட
நீண்டபுய வலியாட வாண்டகையுன் மார்பிலணி
நீலப் பதக்க மாடச்
சோறேறு மனவலியர் துன்பமது தானாடத்
துலங்குபூ ணூலு மாட
தொண்டர்களு நின்றாட வண்டர்புகழ் கொண்டாட
சுடர்ஞான வொளியு மாட
யேறேறு பவனாட மயிலாடச் சேவலு
மிசைந்த காவலரு மாட
யெந்தையா டத்தனது தந்தையா டத்தினமு
மிசைவா யரம்பை ரம்பை யாடச்
சேறேறு நிலவளஞ் செறியுமாய்க் குடிமுருக
செங்கீரை யாடி யருளே
திமிரமல மகலவருள் சிவசுப்பிர மண்யனே
செங்கீரை யாடி யருளே. 17

ஒருகொம் பொடித்தெழுதி வைத்தவர்க் கிளவலாய்
யோங்குபுகழ் கொண்ட குமரா
ஒன்னலரை மாய்த்தமர ரின்னலது தீர்த்தின்ப
முறவருள் புரிந்த முருகா
இருகொம் புடைத்தான மாதர்கண் சிக்கவே
யெங்கும்விளை யாடு மதிபா
யீராறு கையுமுன் னோரராறு வதனமு
மிலங்கவரு மயில் வாகனா
அருகொன் பதாமணி யழுத்தியபொற் சுட்டியு
மழகான தண்டை கொலுசும்
அரும்புஞ் சிலம்பினொலி யார்த்திடவும் விளையாடும்
மையனாய் வந்த மகிபா
திருகுகொம் புடையசெம் மான்வள்ளி கணவனே
செங்கீரை யாடி யருளே
சிந்தனை தவிர்த்தருளு மாய்க்குடிவாழ் முருகனே
செங்கீரை யாடி யருளே. 18

**சந்தம்**

சிந்தித் திடுபவர் பந்தத் தையுமிகல்
செய்யும் வேலவனே



தீரத் தொடுவளர் வீரத் தொடுவரு
தெய்வ சிகாமணியே
சந்தித் தருள்பிர பந்தக் கவியது
தந்தருள் சண்முகனே
தானவர் வானவ ராதியர் புகழும்
தனயா தற்பரனே
முந்திக் கனியுண வந்தற் புதமொடு
முன்னே சென்றவனே
முக்கண னுக்கொரு சற்குண வானாய்
முறுவல் புரிந்தவனே
சிந்துத் துதிசொல முந்தி வருங்குக
செங்கோ செங்கீரை
தெங்குநெ ருங்குமாய்க் குடிவாழ் முருகா
செங்கோ செங்கீரை. 19

தண்டைக் காலுங் கிண்கிணி யொலியோய்
சாற்றுக செங்கீரை
சரவண பவகுக வறுமுக குருபர
சாற்றுக செங்கீரை
பண்டைப் புலவர்கள் கொண்டுற் றிடுமொழி
பகர்வாய் செங்கீரை
பத்தி மிகுந்தவர் சித்தத் துறைவோய்
பகர்வாய் செங்கீரை
கண்டுற் றிடுமொழி தந்தக் கரையொடு
கழறுக செங்கீரை
கானக வேடுவர் குறமகள் கணவா
கழறுக செங்கீரை
செண்டினை யொத்த தனத்தியர் நாயகா
செங்கோ செங்கீரை
தென்றல் மிகுந்தரு ளாய்க்குடி முருகா
செங்கோ செங்கீரை. 20

குமரக் குருபர சிகரிக் கிறைவா
கூறுக செங்கீரை
கோமளை யாள்சுத னாகிய குமரா
கூறுக செங்கீரை

தமரக் கடல்விட முண்டவன் சுதனே
சாற்றுக செங்கீரை
சண்முக மாகிய கண்ணின் மணியே
சாற்றுக செங்கீரை
சமரத் தினில்வடி வேல்விட் டவனே
சாற்றுக செங்கீரை
சஞ்சல மகலவு வந்தருள் பவனே
சாற்றுக செங்கீரை
திமிர மலக்கட் டவிழ வருங்குக
செங்கோ செங்கீரை
தென்றல் வலங்கொளு மாய்க்குடி முருகா
செங்கோ செங்கீரை. 21

## 3. தாலப் பருவம்

நித்தம் பணிவோ ருள்ளமதி
னிறைந்த விளக்கே யருள்விளக்கே
நிமல விளக்கே மெஞ்ஞான
நெறிதந் திடுநன் னலைவிளக்கே
சித்தத் திருளை யகற்றுஞ்சிவ
போக விளக்கே திருவிளக்கே
செகமெய் விளக்கே யானந்தந்
தேக்கும் விளக்கே பூரணமாஞ்
சுத்த விளக்கே சுகவிளக்கே
துரிய விளக்கே பிரமமெனுஞ்
சொரூப விளக்கே சுழிமுனையிற்
றோன்றும் விளக்கே யெந்நாளும்
அத்தர்க் கருமைப் பொருள்விளக்கே
அமலா தாலோ தாலேலோ
அன்பர் குடிகொள் ளாய்க்குடிவா
ழரசே தாலோ தாலேலோ. 22

கொண்டல் மருவுங் குணமணியோ
குணத்திற் சிறந்த குலமணியோ
கூடு மடியார்க் கின்பமெலாங்
கொடுக்கு மணியோ சுழிமுனையிற்



கண்ட மணியோ ஆனந்தக்
கரும்பா மணியோ கதிமணியோ
கலியைத் தவிர்த்தாட் கொண்டருளுங்
கருணை மணியோ தினைமாவை
யுண்ட மணியோ வுண்மைமறை
யுரைக்கு மணியோ மதுரகவிக்
குகந்த மணியோ வடியருளத்
துறையு மணியோ முன்னாளில்
அண்ட மளந்தோன் றன்மருகா
அறுமா முகனே தாலேலோ
அடியார் துதிசெய் யாய்க்குடிவா
ழரசே தாலோ தாலேலோ. 23

செம்பொற் சிலையோ வலதுமணித்
திரளோ திரளிற்றெளித்தெடுத்த
சிலம்போ சிலம்பிற் றிகழ்மணியோ
........................
பைம்பொற் கமலத் தாயுளத்துட்
படிந்து சிவந்து படர்மணியோ
பரமன் றிருநேத் திரத்துதித்துப்
பாரில் விளங்கும் பரமணியோ
தம்பொற் பாதம் பணிவோர்கள்
தமக்குட் செறிந்த தவமணியோ
சத்து சித்தா னந்தமெனத்
தயங்கு மணியோ அறியேனே
அம்பொற் குவட்டைக் குடைபிடித்த
வரியோன் மருகா தாலேலோ
அன்பர் பெருகு மாயர்குடிக்
கரசே தாலோ தாலேலோ. 24

சிந்தா குலத்துக் கொருமருந்தே
தேவர் புகழ்சே னாபதியே
தித்திக் குஞ்செந் தமிழ்த்தேனே
திகழ்பா வலருக் கருள்விருந்தே
தந்தா யமுதந் தானருந்தச்
சத்தா யுதித்த தனிமுதலே

சதுர்வே தத்தி லுண்மைதனைத்
தானாய்க் காட்டுஞ் சண்முகனே
வந்தா தரிக்குந் துணையாக
மயில்வா கனத்தி லேறிமுனம்
வள்ளி தெய்வ யானையொடு
மகிழ வரும்வே லாயுதனே
செந்தா மரைத்தே னெனத்தமிழைச்
செப்பும் வாயாய் தாலேலோ
தென்றல் வலங்கொள் ளாய்க்குடிவாழ்
செல்வா தாலோ தாலேலோ. 25

பண்டைக் கொடிய விருவினையின்
பயனால் மாயை யினிலுதித்து
பாரில் வந்த நாள்முதலாய்
பாழாய் நாளை வீண்போக்கி
கொண்டத் துயராங் கடல்மூழ்கிக்
குழறி வுளறி யேதிரிந்து
கூடு மதியைக் காமமெனக்
கோரும் பாம்பு தான்விழுங்கத்
தொண்டத் தொகையிற் சேராத
சுரும்ப னெனினு மாதரிப்பாய்
தோன்றாத் துணையாய் முன்னுவந்து
சுதனைக் காத்தல் கடமையன்றோ
தண்டை யணியுந் திருத்தாளாய்
தாலோ தாலோ தாலேலோ
சங்கு முழங்கு மாயர்குடித்
தலைவா தாலோ தாலேலோ. 26

சங்குக் குழையி லணிவயிரந்
தளத மென்னப் பவழவிதழ்
தானா யிலங்க மரகதப்பச்
சையுமார் பதக்க முந்துலங்க
தங்கத் தகட்டிற் பொதிந்த ரத்தினத்
தரளம் விளங்க வரைஞாணுந்
தண்டைச் சிலம்புங் கலகலெனத்
தாதி மாரம் பலங்கடொறும்



அங்க ணேறி விளையாடி
யலைந்து திரிந்து தானும்வந்திங்
கழகாந் தொட்டி லதிற்கிடந்து
மயரவு றங்கா யறுமுகனே
செங்க ணுடையோன் றிருமருகா
தேவர்க் கரசே தாலேலோ
திருவாழ்ந் துறையு மாயர்குடிச்
செல்வா தாலோ தாலேலோ. 27

திங்கட் கமல முகமதியே
தெய்வ யானைக் கதிபதியே
தீங்கு புரியாப் பசுபதியே
செந்த மிழ்ப்பா வலர்மதியே
கங்கை வளஞ்சூழ் நிலக்கரும்பே
கற்கண் டேமா மலரரும்பே
தகனர் புகழும் கற்பகமே
கவிஞர் புகலுஞ் சொற்சுகமே
மங்கை யுமையா ளின்சுதனே
மறையின் முடிவி லச்சுதனே
மாலா யுற்றோன் றன்மருகா
மயில்வா கனத்தில் வருமுருகா
செங்கை யினில்வேல் கொண்டவனே
சேவல் பிடித்தோய் தாலேலோ
தேவர் புகழு மாயர்குடிச்
செல்வா தாலோ தாலேலோ. 28

## வேறு

பத்திநிலை நின்றுதான் பணியுமெய் யடியவர்
பாவம தெலாமகற்றிப்
பரிபால னஞ்செயு முரிமையா னதுகண்டு
பத்தனுனை யிச்சித்துநான்
சித்திதரு தென்பரங் கிரிபழனி சோலைமலை
செந்திலம் பதியேரகந்
திருவாவி னன்குடி சுவாமிமலை திருமலை
சென்றுகுன் றாடலுடனே

சத்திசிவ மொத்திடவு மெத்ததியு மருள்தருந்
தயாளகுண முள்ளவியனுஞ்
சத்துருசம் மாரனென வெற்றிபெறு வீரமுந்
தற்காக்கு கின்றசெயலுந்
தித்திக்கு மஞ்செழுத் தாறெழுத் தாய்வருஞ்
செல்வ தாலாட்டியருளே
சிம்மா சனத்திலுறு பெம்மானா மாய்க்குடிச்
சிறுவ தாலாட்டியருளே. 29

### வேறு

அண்டர் புகழ்ந்து வணங்கவ ரம்பைய
ரானவர் நடனமிட
அன்புட நாரதர் வீணை பயின்றிட
வந்தண ராசிசொலக்
கண்ட தபோதனர் முனிவரர் களுமது
ரக்கவி தானோதக்
கணிகையர் சூழ்ந்து மருங்கினில் நின்றுகா
ளாஞ் சிகையேந்திடவே
தெண்டமெ னத்திரி புண்டர மேவிய
சித்தர்கள் பத்திசெயச்
செயசெய வெனமணி யசைய முழக்கொலி
சேண்புக மெய்யடியர்
தண்டமிழ் மாலை புனைந்து வளர்ந்திடு
சண்முகா தாலேலோ
தருவள ராய்க்குடி முருகக் குருபரா
தாலோ தாலேலோ. 30

மதனனு பவமே பெறவனு தினமே
வள்ளியின் மணவாளா
வரமருள் குகனே யரனவன் மகனே
மாமல ரணிதோளா
நிதமதி சயமே யுறவருள் செயமே
நேருற வருகுமரா
நிருதர்கள் கலகா அழகிய திலகா
நிபுணர்கள் புகழ்தீரா



சுதனென மயில்மீ திதமொடு வலம்வரு
சொரூபஞா னச்சுடரே
சுரர்துதி சொலவென் மனதிடர் செலவே
தோன்றிடு நற்றுணையே
சதமகன் மருகா வரகர முருகா
தாலோ தாலேலோ
தண்டமி ழோங்கிடு மாய்க்குடி முருகா
தாலோ தாலேலோ. 31

## 4. சப்பாணிப் பருவம்

அடைக்கல மெனச்சுரர்க ளசுராதி பகையுறவு
மஞ்சலி லுவந்துவந்து
அந்தகா ரத்திருள கன்றுபுற மேகிடவா
றெழுத்ததனை உன்னிப்
படைக்கல மிதாமெனப் பத்திநிலை நின்றாசைப்
பசாசைத் துரத்திவிட்டுப்
பரமகுரு பரனருளி னுபதேச வழிசென்று
பாதபங் கயம்வணங்கி
இடைக்கலப் பொருளாக வுடலாவி பொருள்மூன்று
மெந்தைநிற் கர்ப்பணமதா
யீந்துநைந் துருகிமெஞ் ஞானவொளி கண்டிருந்
தேகாந்த யோகமுற்றுச்
சடைக்கடவு ணின்கருணை கொண்டுய்ய வும்பரம
சப்பாணி கொட்டியருளே
தண்டமிழ் விளங்கிடு மாய்க்குடிக் குமரனே
சப்பாணி கொட்டியருளே. 32

நான்மறையி னங்கத்தி னுட்பொருள் கவர்ந்தினிய
நற்றமிழி னடிகள்பெயர
நற்சாது சங்கத்த ருற்சாக மேபெற
நளினமல ரடிகள்பெயர
நூல்முறை யுணர்ந்தகவி வாணர்மது ரக்கவி
நுவலுமவ ரடிகள்பெயர
நுண்ணிடை மடக்கொடியர் கண்ணிடை மயங்கியவர்
நோக்குமவ ரடிகள்பெயர

கான்முறை யடக்கியருள் கண்டுநட னங்களின்
காக்ஷியி னாக்ஷிபெயர
கானகக் குறமகள் தெய்வானை யடிபெயர
கைப்பாணி யடிகள்பெயரத்
தானுமறை யதையுணர்ந் தோதிவரு குமரனே
சப்பாணி கொட்டியருளே
சந்தத் திருப்புகழ் விளங்குமாய்க் குடிமுருக
சப்பாணி கொட்டியருளே. 33

பாரோடு மீரேழு லோகமுந் தாங்கிவரு
பணிராச ராசமகுடப்
பந்தியா னதுபெயரத் தந்தியெட் டும்பெயரப்
பவளவெண் குடைகள்பெயரச்
சூரோடு மசுரரடி யும்பெயர மாருதச்
சுழல்காற்றி னடிகள்பெயரத்
தோன்றும்வா ரிதிபெயரத் தும்புருவர் நாரதர்
தொல்மலைக் கரசுபெயர
நீரோடு மாகாய கங்கைமக ளடிபெயர
நீலமயி லடிகள்பெயர
நீங்காத குறவள்ளி தெய்வானை யடிபெயர
நேமியோ னடிகள்பெயர
தாரோடு நூல்பெயரத் தன்னிருகை சேர்த்துநீ
சப்பாணி கொட்டியருளே
சந்ததம் புகழ்பெருகு மாயர்குடி வேலனே
சப்பாணி கொட்டியருளே. 34

மெய்வைத்த பரிபூர ணக்கிரண மிளிரவே
மெஞ்ஞானக் கதிரொளிரவே
விண்ணவர்க் குமுதுதவு பண்ணவர்க் கன்புகூர்
வேலனே விமலமணியே
பொய்வைத்த வஞ்சக நெஞ்சினர் களும்புகழ்
பூம்புன லாடுமடையர்
பொருளாசை யதுகொண்டு மருளாசை யதுகண்டு
புலையாடு கின்றகடையர்
கைவைத் தழைத்துவந் துபசார மொழிபேசிக்
கைவசம துற்றகிளிபோற்



கைக்காசி னைப்பறித் துட்கார வைத்திடுங்
கணிகையர்கள் விரகமூட்டுஞ்
சையோக முற்றிடா தருள்புரியு மெய்யனே
சப்பாணி கொட்டியருளே
சங்கடமெ லாந்தவிர்த் தருளுமாய்க் குடிமுருக
சப்பாணி கொட்டியருளே. 35

ஏழைத் திறங்கொண்ட வாழைக் குலஞ்சாடி
யிகல்பூக மடல்கள்கிழிய
எருதுகா லடிபடவு முழுசாலி யும்விளைய
யிப்பியீன் றுகுத்தமுத்தை
வாழைக் குலைக்கனிகள் மாமயக் கங்கொள
வளருமஞ் சளுமிஞ்சியும்
மால்நிறங் கொள்பச்சை மேனிமுத் துஞ்சொரிய
வன்பரவை யலையுமதிர
கோழைப் படாச்செல்வ மேழியர்கள் கையுறக்
குபேரரா யன்புமுதிர
கொண்டல்முத் துஞ்சொரிய விண்டனத் தும்பெருகு
குமரியின கர்க்குவடபால்
தாழைக் குலைப்பூநெ ருங்குமாய்க் குடிமுருக
சப்பாணி கொட்டியருளே
சாற்றிடு மருணகிரி போற்றிட வருங்குகா
சப்பாணி கொட்டியருளே. 36

கடவாய் கிழித்தழுத குரலோசை செவிபுகக்
கண்டுவெண் ணிலாவிரிப்பக்
காதிலிடு வயிரமென வேமுறுவல் காட்டிடக்
கருணைகூர்ந் தோடிவந்து
மடமாது பார்வதியின் முலையமுத மூட்டவே
வாய்மடித் தேதுடித்து
வயிறுநிமி ரப்பருகி விளையா டிடச்சரவ
ணையருகில் முக்கண்ணனும்
அடவா யெடுத்தியென வம்மைகை சேர்த்திட
வப்பா வருத்தியரசே
ஆனைமுக வற்கிளைய குகனையத் தந்தைமடி
யதனிற் கிடத்திவிட்டுத்

தடமா டிடத்தேவி யிடமேவி டப்பரம
சப்பாணி கொட்டியருளே
சந்தத் திருப்புகழ் விளங்குமாய்க் குடிமுருக
சப்பாணி கொட்டியருளே. 37

### வேறு

பவளக் காடுஞ் செழுங்கனியும்
பன்னீ ருடன்சந் தனமிசையும்
பகர்செண் பகப்பூ வாதிமணம்
பரிவா யெங்கும் பரிமளிக்கக்
குவளை மலர்கண் சிவப்பவந்து
கொடுக்க முலைப்பா லமுதருந்திக்
குலுங்க நகைத்து விளையாடிக்
குலவி யுலவி வரும்வேளை
துவளும் புழுதி மேனியதைத்
துடைத்து வாச நீராட்டிச்
சுடர்வா ணுதலிற் றிலதமிட்டுத்
தொட்டி லிட்டுத் தாலாட்டித்
தவள நிறத்தா னாயுதித்தோய்
சப்பா ணியுமே கொட்டுகவே
தருக்கள் சூழாய்க் குடிமுருகா
சப்பா ணியுமே கொட்டுகவே.

காசி னாசைப் பேய்பிடித்துக்
காம விடனா கப்பகுவாய்
கடக்க மயங்குந் தேரையெனக்
கலங்கி மயங்கிப் பரதவித்துப்
பேசும் வழியொன் றில்லாமற்
பெருமூச் சிட்டுப் போதமற்றுப்
பிரியா நிழல்போற் பின்தொடர்ந்தும்
பிரிய மாக முன்னம்வரும்
வேசை யவர்தன் விரகமுற்று
வீணாட் கழிக்கும் வெறுவியனை
விரைவா யுன்மேல் மதுரகவி
விளம்ப வேண்டும் விடைபுரிந்துன்



தாச னெனையாண் டருள்முருகா
சப்பா ணியுமே கொட்டுகவே
தருவா ழாயர் குடிக்கரசே
சப்பா ணியுமே கொட்டுகவே. 39

### வேறு

இந்திரன் வந்து புகழ்ந்து புகழ்ந்து
மிறைஞ்சு மலர்த்தாளா
யென்று முனிந்து சிவந்து சிவந்து
மிகல்புரி கின்ற விறற்றோளா
மந்திர மஞ்சு நினைந்து நினைந்து
மகிழ்ந்திட வந்த வடிவேலா
மங்கையர் சொந்த விருந்து விருந்தென
மருவிய புகழுள விறைபாலா
சுந்தர மிஞ்சு மதன்கணை யைந்து
துரந்து புகுந்த கிரிவாசா
சொந்தனை யன்பு துணிந்து துணிந்து
தொடர்ந்திட வந்திடு முருகேசா
குந்த மரிந்தவன் மருகா முருகா
கொட்டுக சப்பாணி
கொங்கு பொழிந்திடு மாயர் குடிக்குகா
கொட்டுக சப்பாணி. 40

சங்கர னுங்கௌ மாரியும் புகழும்
சரவண பவகுகனே
தண்டமிழ் மாலை புனைந்திட வந்தருள்
சண்முக குருபரனே
இங்கரி யோன்மரு கோனாய் வந்திங்
கிலகிய கதிர்வேலா
இந்திரன் மகளை யுகந்து மணந்திட
வேகிய குமரேசா
ஐங்கர னுக்கிளை யவனா யன்பரை
யாதரித் தருள்குகனே
அசுரரை முடிவுற விடுபடை வேலவா
வமரர்கள் புகழ்குருவே

கொங்கு பொலிந்தரு ளாயர் குடிக்குகா
கொட்டுக சப்பாணி
குறமக ளைப்புணர் திறமுள வித்தகா
கொட்டுக சப்பாணி. 41

## 5. முத்தப் பருவம்

கானஞ் செறிசோலை யில்வளருங்
கழையில் வெடித்த மணிதனக்குங்
கடுவா ரரவ மணிதனக்குங்
கரியின் மருப்பில் விளைமணிக்குந்
தேனா ரமுத மெனப்பொங்குந்
திருப்பாற் கடலில் வலம்புரிகள்
திரைச்சூ லாகி யீன்றெடுத்த
செய்ய மணிக்கும் விலையுண்டு
வானோ ரரசன் வாகனத்தில்
வருநல் மணிக்கும் விலையுண்டு
மதுரம் பொலியு முனதுமுத்த
மணியை மதிக்க விலையுண்டோ
மோனா னந்த வமுதருந்து
முருகா முத்தந் தந்தருளே
முருகார்ந் திலங்கு மாயர்குடி
முதல்வா முத்தந் தந்தருளே. 42

உவக்கு நெல்லி யங்கனியே
வுவட்டா தளிக்குந் தமிழ்முனியே
ஓவா துதவுங் கற்பகமே
வுருகு மனத்தற் கற்பகமே
நிவக்கும் பொருப்புக் கரசேநன்
னீலோற் பலமே மாதளையே
நீங்கா தருண கிரிதுதியை
நிதமு மறக்காப் பசுங்கிளியே
தவக்குஞ் சரமே சிவக்கொழுந்தே
தண்டா மரையே நற்கரும்பே
தாது விரியாப் பூமணமே
தண்டே னுண்ட தனிமுதலே



சிவக்கும் பவள விதழ்வாயாய்
திருவாய் முத்தந் தருகவே
திருவு மகலா வாயர்குடித்
தேவே முத்தந் தருகவே. 43

நித்தங் கமழ்பன் னீராட்டி
நீல விழிக்கு மையுமிட்டு
நெற்றி யதனிற் றிலதமிட்டு
நிமலி மகிழ்ந்து கலன்பூட்டி
அத்த நினைப்பொற் றொட்டிலிட்டு
அப்பா வரசே யெனத்துதித்து
அம்மை தாலாட் டிடவைய
னதனைக் கண்டு முறுவல்செய்து
சித்தத் தினிக்குஞ் சிவபோகந்
திகழுந் தேவா ரப்பண்ணுந்
திருவா சகமுந் திருப்புகழுஞ்
செப்பச் சைவ வேளாளர்
முத்தம் பெறவே வருள்புரியு
முதல்வா முத்தந் தருகவே
முமல மகற்று மாய்க்குடிவாழ்
முருகா முத்தந் தருகவே. 44

வழுவி லாத தமிழ்ப்புலவர்
வாழ்த்துந் துணைத்தாட் கிருமுத்தம்
வளருங் கணைக்கால் முழந்தாட்கு
மார்பி னுக்கு மெழுமுத்தம்
பழுதி லாத வுடைதனக்கும்
பகர்பொன் னூற்கும் பத்துமுத்தம்
பருத்த தொந்தி கந்தரமும்
பனிமா மலர்க்கைக் கெட்டுமுத்தம்
எழுத வரிய சிரமாலைக்
கிருபத் தைந்து முத்தமென
வெடுத்துக் கோர்த்து கலன்பூட்டி
யிசையப் பொருந்துந் திருமேனி
முழுதுந் தாயார் முத்தமிட
முளைத்தோய் முத்தந் தந்தருளே
முமல மகற்று மாயர்குடி
முதல்வா முத்தந் தந்தருளே. 45

செழியன் புகழச் சமணிருளைத்
தீரத் தொலைத்துத் தீப்பிணியைத்
தீர்த்து வைத்துச் சிவசமயஞ்
சேர வரசன் றிகிலடையப்
பொழியுந் தமிழி னழகொழுகப்
பூவி லூமைப் பெண்பாட
பொன்னின் முத்துச் சிவிகையுற
புகழ்சம் பந்தப் பெருமானாய்
வழியுந் தேனைப் பொலிமதுரை
வளர் சொக்கேசர் மகனாக
வந்து பிறந்து மலைக்கரசாய்
வள்ளி தெய்வா னையுமணந்த
மொழிமெய் யாக வேல்பிடித்த
முருகா முத்தந் தருகவே
முருகார்ந் திலங்கு மாய்க்குடிவாழ்
முதல்வா முத்தந் தருகவே 46

## வேறு

சத்திவடி வேல்கொண்டு சூரரையு வென்றமரர்
தஞ்சிறை தவிர்த்ததுண்டு
சஞ்சலமி லாதுனது செந்தமிழை யருணகிரி
சாற்றவருள் செய்ததுண்டு
பத்திவலை யுற்றவடி யார்தமது நெஞ்சமே
பதியா யிருத்தலுண்டு
பரமனார் தவமுதிர்ந் தறுமுகக் குமரனாய்ப்
பாரினி லுதித்ததுண்டு
நித்தியமும் வள்ளிதெய் வானையொடு நாளுநீ
நேயமாய் வாழ்வதுண்டு
நீங்காத வானந்த முற்றமெஞ் ஞானியரும்
நிதமுனைப் பணிவதுண்டு
முத்தியின் பந்தருவ துண்டுமத னால்வந்து
முத்த மளித்தருள்வையே
முருகவிழ் மலர்ச்சோலை சூழுமாய்க் குடிமுருகா
முத்த மளித்தருள்வையே. 47

பிறவிசா கரமது மெய்யன்று பொய்யெனப்
பேசுமறை கேட்டுமறியாப்



பேதைமதி கொண்டுனது பாதசே வையையானும்
பெற்றிங்கு வுய்குவேனோ
அறவினை யதுசெயப் பொருளுண்டு மோயிலை
யப்பாவி யானவென்னை
ஆசைப் பெருங்கலியில் மூழ்கவைத தாயிதுவு
மநியாய மநியாயமே
துறவியா னவருறவு சற்றேனு மில்லாத
துற்சனர்க ணேசமுறவே
தொந்தவினை யின்பயனை யீய்ந்தவனை நோகுந்
துரும்பநா னென்செய்குவேன்
முறமைநீ தியுமிதா முன்வந்து சொல்குகா
முத்த மளித்தருள்வையே
முருகவிழ் மலர்ச்சோலை சூழுமாய்க் குடிமுருகா
முத்த மளித்தருள்வையே. 48

பரவைநீ ருண்டமுனி வர்க்கருளு மகிமையும்
பணியுமெய் யடியர்புக்ழும்
பன்னிரு கரக்கடவு ளென்னவரு பெருமையும்
பஞ்சலக்ஷண வுரிமையும்
அரகர வெனச்சுரர்க ளாசிசொலு மாக்ஷிய
மரம்பையர்செய் நடனவியனும்
அமரரொடு மின்புற வருங்கருணை யாளனென
வாக்ஷிபுரி காக்ஷிநலனும்
சிரவண மிகுந்தருள் பிரணவப் பொருளினைச்
செப்புமுப தேசநிலையுஞ்
செழுங்கனி யுணச்சென்று செகமுழுது மொருநொடி
செல்லுமுன் வந்தசெயலும்
முரகர னுவந்தரு ளோங்குமவன் மருகனே
முத்த மளித்தருள்வையே
முருகவிழ் மலர்ச்சோலை செறியுமாய்க் குடிமுருக
முத்த மளித்தருள்வையே. 49

## சந்தம்

பத்தி நினைத்தவர் சித்தம துற்றருள்
பண்பா கண்பாருன்
பக்க மிருத்தி வருத்து மகத்துவ
பக்குவ மொக்காதோ

புத்தி வரட்டு மெனப்புகல் காட்டுதல்
போதாதே யிதுவுன்
புத்திர ருக்கு மயக்கம் வரச்செயல்
பூபதி நிற்கழகா
சித்திய தெட்டும் வருத்தி யளித்தருள்
சிற்பர மப்போதா
சிட்டரை மெத்த மிரட்டி யழைப்பது
சித்ரவி சித்திரமோ
முத்தி யளித்தரு ளாய்க்குடி முருகா
முத்த மளித்தருளே
முத்தொழில் கற்ற சமர்த்தா முருகா
முத்த மளித்தருளே. 50

முத்தே முத்தில் முதலா மணியே
முத்தந் தந்தருளே
முத்தொழி லுக்கு மதிபா குகனே
முத்தந் தந்தருளே
முத்திக் கொருவழி காட்டிடு முதல்வா
முத்தந் தந்தருளே
முக்கண னுக்கு விழிப்பொறி யானோய்
முத்தந் தந்தருளே
முத்தர் தனக்கருள் சித்தா யருள்வோய்
முத்தந் தந்தருளே
மூல பலத்தைத் தொலைத்தவன் மருகா
முத்தந் தந்தருளே
முத்தலை வேலா யுதமணி வோனே
முத்தந் தந்தருளே
முருகலர் சோலை சூழாய்க் குடிவேல்
முத்தந் தந்தருளே. 51

சுருதி மெய்க்கும் புகழ் பெருக்குஞ்
சொரூபன் முத்தந் தருகவே
துற்கு ணத்தின் சமண ழிக்குந்
தோன்றல் முத்தந் தருகவே
பருவ ரைத்திண் புயமி குத்த
பரமன் முத்தந் தருகவே



பனிம லர்ச்செஞ் சடைய னான
பண்பன் முத்தந் தருகவே
கருதி வைத்த பொருள ளிக்குங்
கந்தன் முத்தந் தருகவே
களிமி குத்த வள்ளி தெய்வை
கணவன் முத்தந் தருகவே
திருவு றையாய்க் குடி வளருஞ்
செல்வன் முத்தந் தருகவே
சிவன் விழிக்குட் பொறியாய் வந்த
சிறுவன் முத்தந் தருகவே. 52

## 6. வருகைப் பருவம்

கற்றோ ருளத்துட் குடியிருக்குங்
கலையே வருக மெஞ்ஞானக்
கடலே வருக வள்ளிதெய்வை
கணவா வருக வானந்த
முற்றா ரறிவில் முளைத்தெழும்பே
ரொளியே வருக மலமூன்று
மொழித்தே நல்ல பத்திதரு
மொருவா வருக திருவருளைப்
பெற்றார்க் கருளும் பேரின்பப்
பெருக்கே வருக அடியர்பெறும்
பேறே வருக சிவபெருமான்
பிள்ளாய் வருக பாவலர்சொல்
வற்றாத் தமிழின் மொழிபகரும்
வாயாய் வருக வருகவே
மலம தகற்று மாயர்குடி
வடிவே லவனே வருகவே. 53

அய்யா வருக வாறுமுகத்
தரசே வருக வருள்புரியு
மமலா வருக வுதித்தெழும்பே
ரறிவே வருக பன்னிரண்டு
கையா வருக காருண்யக்
கடலே வருக செந்திலமர்

கந்தா வருக வெனதிருகண்
மணியே வருக காத்தருளு
மெய்யா வருக விமலசிகா
மணியே வருக மெஞ்ஞான
விளக்கே வருக பத்திக்கு
வித்தே வருக விருவிழிக்கு
மையார் வள்ளி தெய்வானை
மணாளா வருக வருகவே
மலம தகற்று மாயர்குடி
வாழ்வே வருக வருகவே. 54

கந்தா வருக தமிழ்மதுரக்
கவியே வருக வுமையீன்ற
கண்ணே வருக வருளுதவுங்
கதியே வருக மெய்யன்பர்
சிந்தா குலத்தைத் தவிர்த்தருளுந்
தேவே வருக சிவஞானச்
செல்வா வருக வழகொழுகுஞ்
செயலே வருக வானந்தந்
தந்தா தரிக்கும் பேரின்பத்
தரசே வருக பரசமயத்
தலைவா வருக கலியகற்றுந்
தருவே வருக வெம்பெருமான்
மைந்தா வருக மாமயில்வா
கனனே வருக வருகவே
மலம தகற்று மாயர்குடி
வாழ்வே வருக வருகவே. 55

சிறிது மரையிற் கலன்பூட்டேன்
செய்ய விழிக்கு மையெழுதேன்
திருவா ணுதலிற் றிலதமிடேன்
செம்பொற் சிலம்பு தாட்கணியேன்
வெறும்வாய் திறந்து பாலருத்தேன்
மேனி துடைத்துப் பூச்சூடேன்
விரும்பும் மழலைச் சொற்கேளேன்
வெண்பட் டாடை தானுடுத்தேன்



அறுமா முகத்தைத் தான்பாரே
னருள்மெய் யுச்சி யதைமுகரேன்
அப்பா வரசே யெனவன்பா
லழைத்தால் வாராப் பிள்ளையுண்டே
மறுமை விளையாட் டிங்குமுண்டோ
வடிவேல் முருகா வருகவே
மலம தகற்று மாயர்குடி
வாழ்வே வருக வருகவே. 56

ஐந்து முகத்தா லழியாத
வாயுள் பெற்ற வசுரேசன்
ஆயி ரத்தெட் டண்டமர
சாக்ஷி புரியு மாக்ஷியினால்
நைந்து துடிக்க வமரரையு
நலிய மெலியச் சிறையிலிட்டு
நானென்றிடு மாணவங் கொண்டு
நாகர் வேந்தைத் துன்புறுத்திப்
பைந்தாள் சிவக்க வன்பரெலாம்
பரமா நினது கயிலைவந்து
படும்பா டதனைத் தான்புலம்ப
பதரா தீரென் றாறுமுக
மைந்த னாயா தரிப்பனென
வரமீய்ந் தவனே வருகவே
மஞ்சு தவழு மாயர்குடி
வாழ்வே வருக வருகவே. 57

பூமா திலங்க யோத்திநகர்
புகழுந் தசர தன்புதல்வன்
போந்த வுதாரன் ஸ்ரீராமன்
பூவை சீதை தனைமணந்தே
கோமா னென்ன வருஞ்சமயங்
கூனி செய்த சதியாலே
கொடுங்கா னேகக் கோதைதம்பி
கூடப் பிரிந்த வேளையிலே
காம விடங்கொண் டிராவணனுங்
கபட வேட மாகவந்து

கன்னி யவளைக் கொடுபோக
கைமாத் திரைப்போ தமர்புரிந்து
சேம மாகச் சிறைமீட்டுந்
திருமால் மருகா வருகவே
திருவாழ்ந் திலங்கு மாயர்குடித்
தேவே வருக வருகவே. 58

திங்கட் கிரணத் திருவொளியே
தேவர் புகழுஞ் சிவவொளியே
தேனே பாலே தெள்ளமுதே
திகட்டாக் கனியே கனிவளமே
யெங்கள் குலத்துக் கதிபதியே
யினிய மழலைச் சொற்கிளியே
யெந்தை முகம்பார்த் தழுதிரங்கி
யெக்கி வயிறு குழைந்திடவே
தங்கள் சிவகா மித்தாயார்
தான்கை சேர்த்தங் கெடுத்தணைத்துத்
தான்கை யமர்த்திப் பாலூட்டித்
தாலாட் டிடவே வளர்குமரா
மங்கை வள்ளி தெய்வானை
மணாளா வருக வருகவே
மலம தகற்று மாயர்குடி
வாழ்வே வருக வருகவே. 59

## வேறு

ஊனசம் பந்தம்வந் துற்றவிது நாள்வரை
யுலகமா யையிலுழன்று
ஓடியோ டித்திரிந் துறவினர்கள் சொற்கேட்டிங்
குண்டுண் டுறங்குவதலால்
ஈனசம் பந்தமாம் வினையூட்டி யெனையோட்டி
யேமாந் திருக்கவைத்தாய்
என்னகுறை செய்தனன் முன்னமியான் புகலுவா
யிறைவனே நீயிரங்கி
ஞானசம் பந்தனாய் நற்குருவ தாய்வந்து
நானுமுன் றொண்டுபுரிய



நல்லவுப தேசமரு ளில்லையெனில் விடுவதிலை
ஞானா கரக்கடவுளே
மானசம் பந்தமெனை வாட்டுதலை மாற்றிட
வடிவேலவா வருகவே
மாமேவு மாயர்குடி வாழுமுரு கையனே
வள்ளிகணவா வருகவே. 60

## சந்தம்

மனநிலை தளர விடுவது மழகா
மதிதரு குழகா முருகேசா
வருவது கடமை யிதுததி யெனவே
மயில்மிசை பவனி வருநேசா
மகிமையு மிதுவா வுளமதி னினைவா
மறுபதி லுடனே யருள்வாயே
மழவிடை யுடையார் சுதனென வளரு
மறுமுக விரைவிற் றருவாயே
அனலவன் மதியன் கதிர்வன சலன
டியவர் புகழ வருவோனே
அசடனை விகடக் கபடனை யுனது
அடியிணை பணிய வுருள்வாயே
அசுரரை மடிய விடுபடை யதிர
வமரது புரிய வனைவோரும்
அதிசய முறவே பகைவர்க ளுடனே
அபசெய முறவே அடுதீரா
கனவினி லுனது தெரிசன மருளக்
கருணைசெய் வதுவுன் கடனாமே
கடுவிட மதனைப் பருகிய சிவனார்
களிகொளப் பொருளோ தியவீரா
கருநிற வசுரா தியர்குல கலகா
கௌணியன் மதலா யெனுநீதா
கனகனை நிகர்போ தகனையு மகலக்
கடிதமர் சிறையி லெனவோதச்
சினமதை விடுதி யெனவரன் வினவத்
திருமலை யரசா யுறைவோனே
சிவனனு பவமே பெறவரு தவமே
திருவடி பணிய வருள்வாயே

தினகர னனைய குருமுனி வரர்சொற்
செவிபுகு குகனே வருகவே
திகழுமாய்க் குடிவா ழரகர முருகா
தெய்வசி காமணி வருகவே. 61

பகையக லருண கிரிமன முருகப்
பழனிவேல் முருகா வருகவே
பகல்நிசி சரரை யிகலியே வாகை
பன்னுநற் றலைவா வருகவே
நகைதிரி புரமே யெரிசெய்த பரம
நாயகன் பாலா வருகவே
நடனம திடவே காளியும் நாண
நாடிய சிவமே வருகவே
முகையது விரிய நவமது பெருக
முளரியந் தாளா வருகவே
முருகவிழ் மணமே வியகுற மகளை
முறுவல்செய் திடுவோய் வருகவே
வகையென சொலுதி யெனவரி வையர்முன
வருகுரு பரனே வருகவே
மலைமகள் முலையா ரமுதது பருகி
வளருமாய்க் குடிவேள் வருகவே. 62

## 7. அம்புலிப் பருவம்

### சந்திரனைத் தாதியரழைத்தல்

விந்தையாய் வெண்ணிறந திகழவரு வாயிவனும்
வெண்ணீ றணிந்து வருவான்
மீனக் கணங்களு முண்டுனக் கிவனுக்கு
வெற்றியுறு கணமு முண்டு
சுந்தரம தாயறு மாதரு மகிழவே
தோன்றுமெய் யுடைய குகனாந்
துரிதமா யவர்மகிழ மயிலின்மிசை பவனிவரு
தோன்றலா னென்று வருவான்
செந்தமிழ்ப் பாவலர்கள் போற்றுவா ருனையிவன்
றிருவடிப் பெருமை நவில்வார்



சிவன்முடியி லுற்றவனு மாவைநீ யிவனுமத்
திருவிழிப் பொறிய தாவான்
அந்தமகி மையிருவ ருக்குமுண் டாதலா
லம்புலி யாட வாவே
அன்பர்குடி கொண்டிடு மாயர்குடி வேலனுட
னம்புலி யாட வாவே. 63

தேவருக் கமுதுதவு சீலனீ யிவனருட்
செய்யபே ரமுது தவுவான்
தேய்பிறை யுனக்குண்டிங் கியாவரு மறியவே
செஞ்சுடரை யுற்ற மெய்யன்
பூவுலகை வலம்வர வுனக்குமொரு மதிசெலும்
புனிதனிவன் மயிலி லேறி
பூலோக மெங்கணு மொருநொடியி லிவனுமே
போய்வரவும் வல்ல னாவான்
பாவலர்கள் சிலருனைப் போற்றுவா ரிவனையும்
பரமகுரு வென்று புகழ்வார்
பதினாறு கலைதா னுனக்குண் டிவர்க்காறு
பத்துநால் கலைக ளுண்டு
ஆவலுட னிவனுனை யழைக்கத் தகாதுகா
ணம்புலி யாட வாவே
அன்பர்குடி கொண்டிடு மாயர்குடி வேலனுட
னம்புலி யாட வாவே. 64

சஞ்சார மாயிரவு பாதிநாள் மட்டும்நின்
தன்வெண் ணிலாவி ரிப்பாய்
சகலகா லங்களினு மிலைபூதி பூசியே
தண்டமிழ்க ளோதி வருவான்
நெஞ்சா லுகந்துனை யழைத்தின்னம் வரவிலை
நீலக் கலாப முடையான்
நீங்காத கோபமுற் றானெனி லண்டமும்
நெறுநெ றெனவே நடுங்குங்
கஞ்சா தனத்தனைச் சிறையிட்டுக் கீரன்
கடுஞ்சிறை யையே மீட்டினான்
கைவேல்செய் மாயமு மெய்வேள்செய் நேயமுங்
கண்டிலை போலு நீயே

அஞ்சா தொளித்திடவு மிடமுண்டு மோயிலை
யம்புலி யாட வாவே
அன்பர்குடி கொண்டிடு மாயர்குடி வேலனுட
னம்புலி யாட வாவே. 65

## வேறு

பச்சைக் கலபத் தாலரவின்
பகையுந் தவிர்ந்தே வோரேழு
பவசா கரத்தை யொழிக்கவருட்
பக்தி நெறியி லேபுகுந்திங்
கிச்சை யுடனீ றணிந்தேயா
ரிருளை யகற்றி மூலவன
லெழுப்பி யாறு நிலங்கடந்தங்
கியங்கும் வாசி தனையடக்கி
முச்சந் தியுமே யகன்றண்ட
முகட்டிற் புகுந்து முருகனுமே
முனியா தருளும் பேரின்ப
முற்றும் பெறலாம் விரைவினிலே
அச்சந் தவிர்க்குங் குருபரனோ
டாட வருவா யம்புலியே
அழகா ராயர் குடிக்குகனோ
டாட வருவா யம்புலியே. 66

நானா னென்னு மகந்தையதால்
நலிந்து மெலிந்து நாள்நாளாய்
நகைப்பார்க் கிடமா யுருவெடுத்து
நல்ல மதியை யிழந்துதிரிந்
தோனா யுலக பாசமதி
லுழன்று மாயை யாற்கலங்கி
லூடி லூடி மனதுட்கி
யூக்க மற்று மலைந்துநித்த
மானாய் மயங்கிக் கெட்டதொரு
மதியே நான்சொல் வாசகத்தின்
வழியே நடந்தால் நோயகன்று
வாழ்வா யதனாற் குகன்றோழன்



ஆனா யென்று பிறர்புகழ
வாட வருவா யம்புலியே
அழகா ராயர் குடிக்குகனோ
டாட வருவா யம்புலியே. 67

தரியா தோட்டுஞ் சனிசென்மந்
தன்னில் மதியுங் கதிரேழில்
தானெட் டினிற்சேய் புகுநாலிற்
றக்க குருவு மூன்றினிலே
வுரிய வெள்ளி யாறினிலே
யொன்ப ததனி லிருபாம்பு
முற்ற பகையும் பெரும்பிணியு
முண்டு முனக்கிங் குலந்துரைத்தால்
பெரிய நோயாம் பேயாட்டும்
பேரா வினைஞர் செய்வினையும்
பிரிந்தே யோடு மிவன்கண்டால்
பிள்ளா யுனக்குத் தெரியாதா
அரியோன் மருகன் குகனிவனோ
டாட வருவா யம்புலியே
அழகா ராயர் குடிக்குகனோ
டாட வருவா யம்புலியே. 68

## சந்தம்

கண்கள் சிவந்து கனற்பொறி சிந்திடு
கந்தக் கடவுளிவன்
கண்டிடு மண்டர்கள் தொண்டு புரிந்திடு
கமல மலர்த்தாளன்
பெண்க ளுவந்து பணிந்துற வந்தருள்
பெம்மா னிவனாவன்
பிஞ்ஞக னென்றெரு மஞ்ஞை யிவர்ந்தருள்
பிரானு மிவனாவன்
தண்கட லுண்டிடு கும்பன் குருவாய்த்
தான்புகழ் கொண்டவனாந்
தண்டை சிலம்பு புலம்பிடு கின்ற
சரணமலர்த் திருவான்

விண்கள் புரந்தவன் றன்மரு கன்விளை
யாடவா வம்புலியே
விளங்கிடு மாயர் குடிக்குக னாம்விளை
யாடவா வம்புலியே. 69

சிங்கத் திறலு நடுங்கச் செந்தமிழ்
செப்புந் திருவாயன்
செம்பொற் சப்பிர மஞ்சத் தைப்பெறு
செல்வச் சிவநேயன்
சங்கத் தினர்புக ழுங்கத் தினர்மகிழ்
சண்முக குருபரனாம்
சந்தப் புகழ்சொல வந்தற் புதமரு
தயாநிதி யோனிவனாம்
கங்கைச் சடையின ரங்கைப் புகவளர்
கண்மணி யோனிவனாங்
கண்டுற் றிடுமொழி தந்தக் கரையொடு
கைகூப் பிடவருவான்
அங்கைக் கயில்கொடு வந்தருள் குருபர
னாடவா வம்புலியே
அழகா ராயர் குடிக்குக னிவனோ
டாடவா வம்புலியே. 70

புவிரா சன்புகழ் வளவன் செழியன்
புண்ணிய மதுபெறலாம்
பொருநூ ரைப்பொரு கதையாங் கந்த
புராணப் பொருளுறலாம்
கவிரா சன்பெயர் சிவராம லிங்கன்
கவிகற் றருள்பெறலாம்
கந்தபி ரான்பிள் ளைக்கவி சிந்து
கலம்பகம் வினவிடலாம்
தவிரா வினைதீர்த் திடுமா றெழுத்தைச்
சாற்றி மகிழ்ந்திடலாஞ்
சன்னிய தானத் தருள்சந் தப்புகழ்
தன்னை யுரைசெயலாம்
அவிரா டன்கோ விற்குக னிவனோ
டாடவா வம்புலியே



அழகா ராயர் குடிக்குக னிவனோ
டாடவா வம்புலியே. 71

கிரியைப் பொடிசெய் தொருவே லாலே
கீர்த்தியு முற்றவனற்
கீரன் சிறையை விடுத்தே பூதங்
கேடுறச் செய்தவனாம்
கரியை யுரித்தோன் விழியதில் வந்த
கனற்பொறி யிவனாமே
கஞ்சனை யன்று முனிந்தவன் மருகன்
காதாற் கேட்டிலையோ
சரியா டல்நீ செய்யுந் தரமோ
சண்முக வேலனுடன்
தண்டஞ் செயுமுன் வருவ துனக்குத்
தகுதிய தானதினால்
அரியே றென்ன நடமிடு குமரனோ
டாடவா வம்புலியே
அழகா ராயர் குடிக்குக னிவனோ
டாடவா வம்புலியே. 72

## 8. சிற்றிற் பருவம்

மன்றல் கமழும் புதுப்புனலில்
வருநற் கனக மணற்கொழித்து
வருணன் கருணைப் பேரமுதை
வார்த்துச் சேர்த்துச் சுவர்வளர்த்து
துன்று பசியை யகற்றுதற்குச்
சோறே யடுகட் டிதுயிரவில்
துயிலு மரங்கு மிதுநாளுஞ்
சுகிர்தா நினது பூசைசெயத்
தென்றல் மருவு மேடையிது
திண்ணை முத்த மிதுவெனவே
சிலபே ரமைத்து முக்கனிதேன்
றினமா வோடே யட்டதின
தென்றே நீயு மறியாயோ
சிறியேஞ் சிற்றிற் சிதையேலே
திருவா ழாயர் குடிமுருகா
சிறியேஞ் சிற்றிற் சிதையேலே. 73

அளியாச் செனனப் பிணியுமல்ல
வசுரர் புரிந்த சிறையுமல்ல
அசலம் பொடித்த வயிலுமல்ல
வரக்கர் குறவர் காவலல்ல
வளியாங் குறத்தி குமருமல்ல
மதுரக் கவிஞர் வறுமையல்ல
வருத்துஞ் சிவத்து ரோகமல்ல
வாட்டுஞ் சிலைவே ளுடலமல்ல
களியாங் கடலுஞ் சூருமல்ல
காம விடநோய் தானுமல்ல
கவந்தம் புரியுங் கோட்டியல்ல
காலன் விடுத்த பாசமல்ல
தெளியா தவையா தொன்றுமல்ல
சிறியேஞ் சிற்றிற் சிதையேலே
திருவா யூயர் குடிமுருகா
சிறியேஞ் சிற்றிற் சிதையேலே. 74

நீண்ட மாயப் பலசமய
நிலையில் வீழ்ந்தங் கழியாமல்
நீல விழியார் வலையிலுற்று
நெஞ்ச மயங்கிச் சுழலாமல்
வேண்டச் சுத்த சைவநெறி
மேவும் விரதந் தான்பூண்டு
விளங்குஞ் சரியைக் கிரியையொடு
மேலா யோக ஞானமுற்று
ஆண்ட குரவ னருளாலா
ணவத்தை யகழ்ந்து சுத்திசெய்து
அத்து விதமார்க் கத்தினனு
போக முறவு மயன்பொறியைத்
தீண்டி யழிக்குந் திருவடியாற்
சிறியேஞ் சிற்றிற் சிதையேலே
திருவா யூயர் குடிக்குகனே
சிறியேஞ் சிற்றிற் சிதையேலே. 75

சேடிப் பெண்க ளுடன்கூடிச்
சிறுவீ டமைத்து விளையாடத்
தினமு நீவந் தழிப்பதென்னே
சிறியேஞ் செய்த பிழையேதோ



ஆடி மகிழு முருகோனே
அரசே யெங்கட் காரமுதே
அரனார் களிப்புற் றெடுத்தணைக்கு
மருமைக் குழந்தாய் பாமாலை
சூடித் துதித்தோ மனமிரங்கித்
துன்பம் புரியா தருளன்பர்
துணைவா மூலத் துதித்தெழுந்த
சுடரே ஞான சொரூபாயாந்
தேடும் பொருளே தேசிகனே
சிறியேஞ் சிற்றிற் சிதையேலே
திருவா யூயர் குடிக்கரசே
சிறியேஞ் சிற்றிற் சிதையேலே. 76

வழிக்குத் துணையாய் வருங்குருவே
வளர்மெஞ் ஞான மாந்தருவே
வளருங் கரும்பே மாங்கனியே
வடிவேல் பிடித்த சேவகனே
அழிக்கு மளிக்கும் படைப்பெனுமூன்
றான தொழிலைத் தான்புரிய
அறுமா முகனாய் வந்துதித்திங்
கமரர் சிறையை விடுத்தோனே
விழிக்கு மையிட் டுமைவருந்த
மென்பால் சுரப்ப விளையாடி
வீணா யெமையுந் துன்புறுத்த
வேண்டா மமுதந் தானருந்திச்
செழிக்க வளருஞ் சிவபோகச்
செல்வா சிற்றிற் சிதையேலே
தெங்கு நெருங்கு மாயர்குடித்
தேவே சிற்றிற் சிதையேலே.

பாடக் கிடையாப் பழம்பொருளே
பாட்டிற் கிசைந்த தமிழ்க்கடலே
பசுப்பூங் கிளியே மறைமொழியே
பாகின் ரசமே வானமுதே
நாடக் கிடையாக் கிஞ்சுகமே
ஞானா னந்தப் பரசுகமே

நளின மலர்த்தாள் நோகாதா
நாங்கள் புகல லாகாதா
ஆடக் கிடையாப் பம்பரமே
ஆசை தவிர்க்கு மெம்பரமே
அடியா ரெவர்க்கு மதிபதியே
வருளைப் பெருக்கும் பசுபதியே
தேடக் கிடையாத் திரவியமே
சிறியேஞ் சிற்றிற் சிதையேலே
திருவா ழூயர் குடிக்கரசே
சிறியேஞ் சிற்றிற் சிதையேலே. 78

வையம் புரக்குந் திருமகளு
மாமிக் கொடுமை புரியாமல்
வாணி தனது மாமிக்கு
மருகிக் கொடுமை செய்யாமல்
தெய்வ நாக ரீகமதாய்ச்
சிறப்பாய் வாழ்ந்தங் கறம்புரிந்து
சேம மாக நாயகன்சொற்
றிறம்பாக் கற்பி னெறிநடந்து
உய்ய விருவ ரொற்றுமையா
யுவகை யோடு நன்மதியா
யொருவர்க் கொருவ ரந்தரங்க
வுண்மை காட்டி யுபசரித்துச்
செய்கை தவறா தருள்குமரா
சிறியேஞ் சிற்றிற் சிதையேலே
திருவா ழூயர் குடிக்குகனே
சிறியேஞ் சிற்றிற் சிதையேலே. 79

சொந்தப் பதுமச் சரவணமுஞ்
சோலை மலையுங் கந்தவெற்புஞ்
சுவாமி மலையுந் திருத்தணிகை
சுருதி வழுத்து மேரகமுங்
கந்த வாவி னங்குடியுங்
கழுக்குன் றுடனே கதிர்காமங்
கழுகு மலையுந் திருமலையுங்
கயிலை மலையுங் குற்றாலஞ்
சந்தம் பொலியும் பரங்குன்றந்
தனிலும் பழனி தென்னிலஞ்சி



சயிலந் தோறும் விளையாடி
சண்மு கவனாய் வீற்றிருந்து
சிந்து பூவின் மணம்பொருந்துந்
தேவே சிற்றிற் சிதையேலே
திருவா ழூயர் குடிக்கரசே
சிறியேஞ் சிற்றிற் சிதையேலே. 80

மேவி நினது சரவணையில்
மிகநீ ராடி நீறணிந்து
விளங்கு மெழுத்தா றையுஞ்செபித்து
விமல நினது திருமுன்பா
யாவி மெய்யும் பொருளுனக்கர்ப்
பணமா யுவந்து தந்துதன
தகமே யுருகத் திருப்புகழை
யன்பாய்ப் பாடி வலம்வந்து
கூவித் தொழுது கந்தசஷ்டி
குமரர்க் குகந்த கார்த்திகைநாள்
கூறும் வெள்ளி திங்களிலுங்
குகனின் விரதந் தானிருந்து
சேவித்து வந்து துதித்திடுவோஞ்
சிறியேஞ் சிற்றிற் சிதையேலே
தெங்கு நெருங்கு மாயர்குடித்
தேவே சிற்றிற் சிதையேலே. 81

## வேறு

செந்தமி ழோதிட வந்தரு ளுங்குக
சிற்றிற் சிதையேலே
சேவற் கொடிவடி வேல்கைக் கொண்டோய்
சிற்றிற் சிதையேலே
செந்தழல் போலொளி ருந்திரு மேனியாய்
சிற்றிற் சிதையேலே
செங்கம லங்கள் புகுந்தவள் மருகா
சிற்றிற் சிதையேலே
செந்தினை மாவன முன்சென் றவனே
சிற்றிற் சிதையேலே

சிறுகுற மான்றெய் வானை மணாளா
சிற்றிற் சிதையேலே
செந்தில் வளம்புகு மெந்தை யமர்ந்தவா
சிற்றிற் சிதையேலே
சீரா ராயர் குடிக்க ணுறைந்தவா
சிற்றிற் சிதையேலே. 82

## 9. சிறுபறைப் பருவம்

### ஓசைக் கருவி மீதொலியிட்டு மகிழ்தல்

வள்ளிமலை யிற்பெரிய. தவமுனிவன் முனம்வந்த
மானையு ஞான விழியால்
மாலாய்ப் புணர்ந்திட வயிறுழைந் தெயினர்குழி
மாறா துதித்து மூன்ற
புள்ளிமான் பிள்ளையை வேடுவ ரெடுத்துவகை
பொங்க மனையாள் பிடிக்க
பூபாலி யாய்வளர வேசீல மாயுறு
பூவையாய் வந்து நாளுங்
கள்ளவிழ் கடப்பமல ருள்ளபூச் சூடிநற்
கன்னியின் பருவ மேற
கானகத் தேதினைக் காவலா ளாமிகு
காதலா யங்கு வந்து
தெள்ளுதினை மாவுணச் சென்றதொரு சிறுவனே
சிறுபறை முழக்கி யருளே
திருவளரு மாய்க்குடிச் சிவசுப்பிர மண்யனே
சிறுபறை முழக்கி யருளே. 83

பெண்கள் சங்கத்தினோ டயிரா வதத்தனும்
பேரன்பி னோடு வந்து
பிரியமாய்க் கயிலைபோய் சிவபிரான் றிருவடி
பேணிப் பணிந்து நின்று
சண்முக வனுக்கெனது பிள்ளைதெய் வானையைத்
தான்மணஞ் செய்ய வேண்டுஞ்
சம்மத மெனாவெனச் சாற்றிடந லுத்தரவு
தானளித் திடவும் வந்து



கண்கொளாக் காட்சியுறு கன்னியை மணஞ்செய்து
கந்தவெற் பதிலி ருந்து
கண்ணின்மணி யாமினிய பண்ணின் மொழியாளையுங்
காத்து வரவே மலைதொறுஞ்
செண்பகச் சோலைசெறி ஆயர்குடி முருகனே
சிறுபறை முழக்கி யருளே
திருமாலின் மருகனே வுமையாளின் குமரனே
சிறுபறை முழக்கி யருளே. 84

கண்டொன்று பேசியுங் காணாம லேசியுங்
காலங் கழிக்கு மசடர்
கண்காட்டி யேமுகங் காட்டிய வுலுத்தர்கள்
கடைவாய லிற்பு குந்து
உண்டு பசியாறிட வுபசார மொழிசொல
வோவாது தானி ருந்து
ஊற்றைவாய் நாரையென வுட்காரு மனிதருட
னுறவு கலவா திருக்க
பண்டுநா னுன்னிடஞ் சொன்னது மறந்தும்
பராமுகம தாயி ருந்தால்
பாரில்நா னென்செய்வேன் வேலவா விரைவினிற்
பதிலெனக் கேய ளிப்பாய்
திண்டிடற் புயமுடைய சிவசுப்பிர மண்யனே
சிறுபறை முழக்கி யருளே
திருவளரு மாய்க்குடிச் சேவலங் கொடியனே
சிறுபறை முழக்கி யருளே. 85

கானகக் குறமகள் கவண்கலெறி யோசையுங்
கவிமாலை யின்முழக்குங்
கலகலென வொளிர்தண்டை செஞ்சிலம் போசையுங்
ககனர்துதி யின்முழக்கும்
போனக மிகுத்தசத் திரசாலை யெங்கணும்
போசனத் தார்முழக்கும்
புண்டரீ கத்தவன் றேவிசந் தத்திருப்
புகழ்தி னிசைமுழக்கும்
தானகங் காரமாய் வேல்கொண்டு சூர்வென்ற
தன்படை யதின்முழக்கும்

சங்கீத மேளதா ளங்களின் முழக்குகள்
தானேக நாகருலகில்
தேனென விளக்குமது ரக்கவிசொல் வாயனே
சிறுபறை முழக்கி யருளே
தென்னைமிகு மாயர்குடி மன்னிவளர் செல்வனே
சிறுபறை முழக்கி யருளே. 86

### சந்தம்

சுகர்சன காதிபர் தேடிய சிவமே
துரியஞா னக்குருவே
தோகையில் வாகையாய் சூரர்தொ லைந்திடத்
தோன்றிய வான்றருவே
சகரர் சமுத்திர ரத்தின மேயவர்
தான்புகழ் தேசிகமே
சங்கர னுக்குப தேச மளித்தருள்
சரவண மந்திரமே
ககன மளாவுங் கார்த்திகைப் பிறையே
கவிவா ணர்க்கிறையே
கனியூ ரமுதே மதுரக் கவியே
காணுஞ் சிற்பரமே
செகமெய்ப் பொருளாய் வந்தரு ளுங்குக
சிறுபறை கொட்டுகவே
தெங்கு நெருங்கு மாய்க்குடி முருகா
சிறுபறை கொட்டுகவே. 87

பூவே பூவிற் பரிமள மேயதிற்
பொலியுஞ் செழுந்தேனே
பூச்சக் கிரகிரி தோறுமு லாவிய
பூங்கிளி யின்மொழியே
காவே காவிற் கற்பக மேயருள்
கந்தக் கடவுளரே
கண்ணின் மணியே மணியின் சுடரே
கதிரே கதிரொளியே
கோவே கோவிற் குணமார் மணியே
குமரக் குருபரனே



குக்குட மயிலுங் கொண்டு வலம்படு
குன்றைக் கோமானே
தேவே தேவர்க் கதிபதியேநீ
சிறுபறை கொட்டுகவே
சீரா ராயர் குடிவளர் குமரா
சிறுபறை கொட்டுகவே. 88

மெய்ய ருளத்தில் மேவிய பொருளே
மெஞ்ஞா னக்குருவே
வித்தக மாயொளிர் சித்தகந் தங்கும்
விகசித ரத்தினமே
பொய்யின ருள்ளம் புகுதா நெறியே
புண்ணிய மகமேரே
புளகித மருளும் பிரணவ முதலே
புகழ்சுப் பிரமணியா
கையி லயிலுஞ் சேவலு மயிலுங்
களிகொள வருவோனே
கந்தா கந்தா வென்றென் றேத்துங்
கன்னியர் தம்கணவா
தெய்வ சிகாமணி யாய்வளர் குமரா
சிறுபறை கொட்டுகவே
சீரா ராயர் குடிவளர் குகனே
சிறுபறை கொட்டுகவே. 89

வரதக் கமலக் கரமது தனியே
வடிவே லேந்தியவா
மயில்வா கனமீ தொயிலாய்ப் பவனி
வந்தரு ளுங்குகனே
கிரகக் கோள்க ளொன்பது மெனது
கிட்டவும் வரவொட்டாக்
கிருபை புரிந்தருள் கணேசப் பெருமாற்
கிளைய சகோதரனே
சரசத் தொழிலே புரியுந் தாதியர்
தன்பதி தஞ்சமெனத்
தையல ரிகழ மையலால் மகிழச்
சாருங் குருபரனே

சிரமுச் சுழிமுனை யதிலொளிர் சுடரே
சிறுபறை கொட்டுகவே
தெங்கு நெருங்கிடு மாய்க்குடி முருகா
சிறுபறை கொட்டுகவே. 90

சங்கு முழங்குந் தமிழ்கள் முழங்குந்
தையலர் குரவையொலி
சந்தத மோங்கவே வந்தருள் புரியுந்
தயாள குணசீலா
பொங்கிய மதுரந் தங்கிய வாயாய்
பூபதி யேநிதியே
பூவைய ரிருவர் தம்மண வாளா
பூரண வாரணமே
தங்கிய மதுரைச் சொக்கே சர்புகழ்
தனயா சண்முகமே
சங்கக் குழையணி காதா நீதா
சகள நிஷ்களனே
தெங்கு நெருங்கிடு மாயர் குடிக்குகா
சிறுபறை கொட்டுகவே
சிவசம யத்தவர் தவமுற வருள்குக
சிறுபறை கொட்டுகவே. 91

குமரச் சரவண பவநற் குருபர
கொட்டுக சிறுபறையே
குறமகள் தெய்வ யானை மணாளா
கொட்டுக சிறுபறையே
குமரக் கடவுள னெனுமெய்ப் பொருளே
கொட்டுக சிறுபறையே
கோமான் சீமா னெனவரு குருவே
கொட்டுக சிறுபறையே
குமுதத் திருவா யாசிற் பரனே
கொட்டுக சிறுபறையே
கொண்ட லெனப்பொழி தண்டமிழ்க் கடலே
கொட்டுக சிறுபறையே
குமரிப் பகவதி நிகராய்க் குடியாய்
கொட்டுக சிறுபறையே



கோகன கச்சே வடியார் முருகா
கொட்டுக சிறுபறையே. 92

## 10. சிறுதேர்ப் பருவம்

காரோடக் கருணைமழை யாறோடக் கோடை
கலங்கிப் பயந்துமோடக்
கவிவாணன் வறுமையது தானோட மெய்யன்பர்
கவலையு மகன்றுவோட
நீரோட யீரேழு லோகமுறு பேய்கணனி
நீங்கியே தானுமோட
நீசர்செய் வினையோட மூவாசை யதுவோட
நிருதர்குல காலனோடச்
சூரோட வவுணர்பகை தானோடச் சேவலுந்
தோகையும் விரித்துவோட
தொந்தவினை களுமோட வந்தபழ பாவமுஞ்
சுரர்சிறை பிரிந்துவோட
தேரோட மாலோட ஆய்க்குடிவாழ் முருகனே
சிறுதே ருருட்டியருளே
சிவசமய முதல்வனே திருமாலின் மருகனே
சிறுதே ருருட்டியருளே. 93

கன்மவினை யால்வந்த குன்மவலி குட்டமும்
கழிச்சலு வயிற்றளைச்சல்
கைகால் முடக்கிடும் பக்கவா தங்கொடுங்
கனவேறு சுரமீளையும்
தன்மமது புரியாத பேர்க்குவரு வாந்தியுஞ்
சயங்கக்கல் பேதிமேகம்
சண்டாள ருறவுகொண் டுண்டான சூன்யமுந்
தான்மருந் தீடுமிருமல்
உன்மத்த வாதகவ பித்தமதி சாரமு
மோயாத சூலைநோயும்
வொக்கறின் கண்காணில் நிற்காம லோடிடு
முக்கிரவடி வேல்முருகனே
சென்மமர ணமுநீங்க வந்தருளு முருகனே
சிறுதே ருருட்டியருளே
திருவளரு மாய்க்குடிச் சிவசுப்பிர மண்யனே
சிறுதே ருருட்டியருளே. 94

பூமேவு சரவணப் பொய்கையினி லேகியும்
பொதுமாதர் வீடுசென்றும்
பொய்யா மொழிப்புலவ னையா வெனவனம்
புக்கியும் வேடனாக
தாமேவி யேயவன் றன்னையும் பாடவே
தாக்கியே கள்வனாக
தந்திரம தாகவே செய்தமுறை யாலவன்
சம்பன்ன னாகவென்று
நாமேவு மினியசொற் பாமேவு செந்தமிழ்
நவில்கின்ற வன்புகண்டு
நல்குரவு தீரவே பல்குறைகள் மாறவே
நற்கருணை யேன்புரிந்தாய்
தேமேவு மதுரகவி யும்பொழியும் வாயனே
சிறுதே ருருட்டியருளே
திருவளரு மாய்க்குடி நகருறையு முருகனே
சிறுதே ருருட்டியருளே. 95

அருள்பெருகு கருணையும் பொருள்ஞான மறைகளு
மத்துவித வானந்தமும்
அழகுபெறு நுதல்களுந் திலதமிடு நெற்றியு
மானபன் னிரண்டுகையும்
இருள்பெருகு விரகமு மந்தகா சங்களு
மெழிலான திருமேனியு
மீராறு குழைகளு மோராறு வதனமு
மிலகிய சேவல்மயிலும்
மருளகலு மெஞ்ஞான மதுகொண்டு சென்றோடு
மௌனயோ கச்செயல்களும்
மங்காம லங்கங்கு தங்கிவிளை யாடிடும்
வடிவேல் பிடித்தமெய்யா
தெருளதனை யருள்புரியு மாயர்குடி முருகனே
சிறுதே ருருட்டியருளே
திருமாலின் மருகனே வருமாறு முகவனே
சிறுதே ருருட்டியருளே. 96

அப்பனுக் குப்பிரண வப்பொரு ளுரைத்துவந்
தறு முகக் குருக்களென்ன
அபிசேக முங்களப கஸ்தூரி வாசமு
மகலாத தேவாரமும்



ஒப்புவமை இல்லாத ரத்தினமணி மார்பமு
மோங்குபுகழ் கொண்டவியனும்
ஒருபதி னாயிரங் கோடியே வோதினு
முட்பொருளி தென்றுதெரியா
இப்புவியி லேயலைந் தெங்கணும் போகினு
மென்செயல தொன்றுமிலையே
யென்னாவி யுடல்பொரு ளீந்தர்ப்ப ணஞ்செயா
திருக்குநிர் மூடனெனினுஞ்
செப்பெனக் குப்பதில் சிவசுப்பிர மண்யனே
சிறுதே ருருட்டியருளே
தென்னைமிகு மாயர்குடி மன்னுவடி வேலனே
சிறுதே ருருட்டியருளே. 97

கோடை யகற்றுங் குளிர்நிழலே
கொள்ளும் நிழலிற் கனிசுகமே
கொண்டல் நிகர்த்த கருணைபுரி
குணமே குணத்துக் கதிபதியே
மேடை யதில்வீ சியகாற்றே
விளங்குங் காற்றில் மென்சுகமே
வீணைக் கிசைந்த பண்பாடும்
வேத கீத விகசிதமே
ஓடை யதிலூ றியநீரே
வுவட்டா தினிக்குந் தமிழ்ரசமே
ஓவா தருளு முண்மையனே
உறுதி யளிக்குஞ் சின்மயனே
தேடக் கிடையா சிற்பரனே
சிறுதே ருருட்டி யருளுகவே
தெங்கு நெருங்கிடு மாய்க்குடியாய்
சிறுதே ருருட்டி யருளுகவே. 98

## வேறு

பத்தி மிகுத்த தவத்தினர் நத்திய
பண்பா கண்பாரே
பக்க மடுத்தவர் மெச்சு மிலக்கண
பக்குவ நற்றமிழே

தத்தி மனத்துயர் மெத்த வகற்றுதல்
தக்கோய் நிற்கழகே
சத்தி யயிற்கொளும் வித்தக நற்குக
தத்துவ மெய்ப்பொருளே
அத்தி முகற்கிளை யோனே குமரா
வறுமுக குருபரனே
அடியவர் மிடியக லக்கடைக் கண்பார்த்
தருள்புரி தேசிகனே
சித்தி யளித்தருள் சிற்பர குகனே
சிறுதே ருருட்டுகவே
தெங்கு நெருங்கு மாய்க்குடி யாய்நீ
சிறுதே ருருட்டுகவே. 99

## வேறு

மெய்வைத் துவந்த தவத்தோருக்கு
மேல்வீ டளிக்கும் வித்தகனே
விமல மணியே மெஞ்ஞான
விளக்கே தூண்டா விளக்கொளியே
சைவத் துறைக்குந் தமிழ்மறைக்குந்
தானெட் டாத தனிமுதலே
சத்து சித்தா னந்தமெனத்
தானாய் விளங்குந் தற்பரனே
பொய்வைத் துழலும் புல்லறிவோர்
புகுத நரகி லெழுபிறப்பும்
புகுந்து பிறந்து மிறந்துறவே
புரிய வந்த புண்ணியனே
தெய்வச் சிலையே சிலைநாணே
சிறுதே ருருட்டி யருளுகவே
திருவா ழாயர் குடிக்கரசே
சிறுதே ருருட்டி யருளுகவே. 100

## வேறு

சீரோங்கு பொன்மௌலி திருவதன நெற்றியுஞ்
சிலையெனும் புருவவழகுஞ்
செய்யவிழி யுங்குழைகள் சேரும்வயி ரங்களுஞ்
செம்பொற் பதக்கமார்பும்



காரோங்கு கருணைபுரி சிந்தையும் சேவலுங்
கலமுங் கையில்வேலுங்
கமலமுக மாறுங் கபோலமுந் துண்டமுங்
கண்டமுந் திண்டோளுடன்
பேரோங்கு மாபரண முந்தமிழ் வேதமும்
பிரியாது கமழ்மாலையும்
பெட்பான நட்புடைய வள்ளிதெய் வானையின்
புறவந்த சுப்பிரமண்யா
தேரோங்கு மாயர்குடி நகருறையு முருகனே
சிறுதே ருருட்டியருளே
சிவசமய மோங்கவே யருளுமுரு கையனே
சிறுதே ருருட்டியருளே. 101

நிகழும் பதாகைபல் லிரதமுஞ் சேனையு
நெட்டூர மாகநின்று
நீங்காது போர்செயச் சூரர்கிளை மாளவே
நீண்டவே லைப்பிடித்துப்
பகழிகள் தொடுத்துவிடு பழிபாவ மும்புறம்
பாகவே வீரவாகும்
பன்னுநவ வீரரு முன்னிய படிக்கருள்
பரமசிவ பாலனான
புகழுமவ தாரமே செய்துவந் தமரர்கள்
புகுஞ்சிறையை மீட்டிவைத்த
போதுதெய் வானையை மணஞ்செய்து வள்ளியைப்
புணரவந் துற்றகுமரா
திகழுந் திருக்கருணை புரியுமுரு கையனே
சிறுதே ருருட்டியருளே
தென்னைமிகு மாயர்குடி மன்னுமுரு கையனே
சிறுதே ருருட்டியருளே. 102

## வாழ்த்து

மங்கை வள்ளி தெய்வானை
வலத்து மிடத்துந் தான்வாழ்க
மயிலுஞ் சேவற் கொடிவாழ்க
வளர்பன் னிருகை யதுவாழ்க

தங்குந் திருச்சே வடிவாழ்க
தாங்கும் வடிவே லும்வாழ்க
தரள மிலங்கு மாபரணந்
தரித்த மார்புந் தான்வாழ்க
பொங்கு கருணை விழிவாழ்க
பொருந்து மாறு முகம்வாழ்க
புயங்கள்வாழ்க மெய்யடியார்
புகழும் வியனுந் தான்வாழ்க
திங்க ளமுதம் பொழிவாயாய்
சிறுதே ருருட்டி யருளுகவே
தெங்கு நெருங்கு மாய்க்குடிவேள்
சிறுதே ருருட்டி யருளுகவே. 103

ஆய்க்குடி முருகன் பிள்ளைத் தமிழ் முற்றிற்று



# இணுவை முருகன் பிள்ளைத்தமிழ்

ச.வே. பஞ்சாட்சரம்

## 1. காப்புப் பருவம்

### திருமால் காக்க

மலர்மங்கையர் வளைதண்டெனும்
வல்லிக்கரங் கோத்து
மடிநீரலை வழியாடிடும்
மரஞ்சூழ்வனப் பொய்கைத்
தலமாஞ்சர வணப்பூம்மடித்
தலையாறொளிர் மைந்தன்
தனிவேல்கொண்டு சகங்காத்திடத்
தழைப்போன்தனைக் காக்க
அலைபாற்கடல் அரவுச்சுருள்
அரும்பள்ளியில் துயில்வோன்
ஆமேய்ப்பவர் குடிகாப்பவன்
ஆண்டாள்தழு வினியன்
மலைகீண்டிடுந் தனிவேலவன்
மலையைக்குடை பிடித்த
மகிழ்மாமன்இவ் விணுவைத்தமிழ்
வளநாட்டவர் தொழவே! 1

### சிவபெருமான் காக்க

ஒழுகும்எழில் விழியன்! உளம்
ஊறும்பெரும் அளியன்
உருகும்மனம் அனந்தம்! அவை
உறத்தன்னடி கொண்டோன்
பழகுந்தமிழ் இனியன்! செழும்
பவளஞ்சுட ரழகன்
பசுமைமயில் மிசையன்! பரம்
பணிகந்தனைக் காக்க
இழிமுப்புரம் எரிவிட்டவன்
எழில்முப்புரி மார்பன்
இருடிக்கணம் விடுமப்புலி
இருந்தோலுடை யாளன்
விழிநெற்றியன் வெண்ணீற்றவன்
மிளிர்செஞ்சடைப்! பிறையன்
மெய்குங்குமன் இணுவைத்தமிழ்
விரிநாட்டவர் தொழவே! 2

### சிவகாமி காக்க

இன்னல்வரும் வேளைதன்னை
எண்ணிஅமு வேனை
இம்மென்னுமுன் காப்பான்மனம்
எரியில்மெழு காவேன்
சின்னப்பயல் எனஎண்ணிய
தேவர்குலங் கலக்கிச்
செய்தோம்பிழை எனுமாறவர்த்
திருத்திஅருள் சேயை
அன்னைசிவ காமிதனை
அண்ணல்சிவன் தழுவி
அளியான்நுதல் விழியால்அனற்
பொறியாய்அளித் தாலும்
முன்னம்முத்தம் முலைப்பால்தந்த
முறையில்இனுங் காக்க
முழங்கும்இசை இணுவைத்தமிழ்
முதுநாட்டவர் தொழவே! 3



### பிரமா காக்க

கலிகொஞ்சிய யுகமுய்ந்திடுங்
கருணைமழை பொழிவோன்
கனலும்பொறி ஆறும்ஒரு
கனியாய்முரு கானோன்
கலிமிஞ்சுகார்த் திகைமாதர்பொற்
கனிகொங்கைகள் உண்டோன்
கணக்கில்உயிர் பெறமுத்தியுன்
கையாற்றுவன் காக்க
மலர்மேலவ மறைதேர்ந்தவ
வாணியுறை நாவ
மாயையெனும் மண்ணையள்ளி
வனைவோய்கலம் அனந்தம்
உலகம்பல அண்டங்களை
ஒழுங்காய்ப்படைப் போனே
ஒருநான்முக இணுவைத்தமிழ்
ஒளிநாட்டவர் தொழவே! 4

### விநாயகர் காக்க

நீலக்குற வள்ளிஅக
நெஞ்சங்குழைந் தாலும்
நீசம்புரி பிகுபண்ணிட
நெக்கிமனம் உருகிப்
பாலொத்தொளிர் தந்தக்கண
பதியுன்னையுன் தம்பி
பாசத்தொடு வாவென்றெணப்
பயந்தந்தெதிர் வந்தாய்
கோலக்குற வள்ளிகுலை
நடுங்கிக்குதித் தோடிக்
கொங்கைக்குலம் முதுகிற்புகக்
குமரன்தனை அணைத்தாள்
வேலற்கெழில் வள்ளிதந்த
வேழமுகன் காக்க
விண்சேய்தனை இணுவைத்தமிழ்
விறல்நாட்டவர் தொழவே! 5

## வைரவர் காக்க

செக்கச்சிவந் தொளிரும்மலர்ச்
சிலம்பின்னடி யாளன்
சிவனைத்தொழல் பிழைபட்டவர்ச்
சிறைவைத்தொரு குகையில்
நக்கீரர்உட் படஆயிரம்
நல்லோர்க்கொல நின்ற
நலிபூதமொன் றதஞ்செய்தனன்
நக்கீரனின் பாட்டில்
சொக்கி! அவன் தனைக்காக்கவே
சொக்கர்தமை இகழும்
துட்டச்செருக் கயன்ஐந்தலைத்
தொகைகுன்றுவித் தடக்கி
ஒக்கக்கெடுத் தமரர்தருக்
குயர்வைரவ நாதன்
ஓங்குங்கலை இணுவைத்தமிழ்
ஒளிநாட்டவர் தொழவே! 6

## காளி காக்க

பழந்தாங்கிய பலவின்மலை
பரண்காதினைச் சாரல்
பசும்பூஞ்சுனைப் படுகோயிலில்
பறைதொண்டகம் முழங்க
எழுந்தோங்கிய நெடுமூங்கிலின்
இமிர்கூட்டினிற் செழுந்தேன்
இனிதுண்டவர் இணைந்தாடிடுங்
குரவைதனில் மகளிர்
கொழும்பூங்கரங் கோத்தாடிடுங்
கூர்வேலிளங் குமரன்
குழைத்தின்னருள் பொலிபல்வளம்
கொடுப்போன்அவற் காக்க
விழுந்தக்கனின் வெகுள்புத்திரி
வெறிதந்தக பாலீ!
வெங்காளியே இணுவைத்தமிழ்
மிகுநாட்டவர் தொழவே! 7



## தேவேந்திரன் காக்க

மழையாடிய மலையாடிய
மயிலாடிய குமரன்
வளையாடிய கடல்பொங்கிட
மலைவீசியே இளமை
விளையாடிய இளவல்பிர
ணவத்தின்பொருள் விரிவை
விளங்காமலும் விதியாய்த்தனை
வணங்காமலும் அகந்தைத்
தளையாடிய பிரமன்தனைத்
தடுத்துச்சிறை செய்தோன்
தமிழாடிய தண்பூங்கவித்
தலைவன்தனைக் காக்க
பழிபாடிய பணியஞ்சிநற்
பரமற்சரண் புகுந்த
பதியிந்திரன் இணுவைத்தமிழ்ப்
பழநாட்டவர் தொழவே! 8

## அகத்தியர் காக்க

திடமாத்தகர்ப் பிடர்பாய்ந்ததன்
திமிர்சாய்ந்திட உலவுந்
திறலோன்தமிழ் தெரிநுண்புலஞ்
சிறந்தோர்சங்கத் தலைவன்
நடமாமயிற் படமாவர
வல்குற்குற நங்கை
நடைமாப்பிடித் தேவகுஞ்சரி
நகுவேலனைக் காக்க
குடமாமுனி முதலிலக்கணங்
கொழிதேன்தமிழ்க் கீந்தோன்
கொடுந்தக்கனுக் கொடுங்காமலே
குறைவேள்வியை இகழ்ந்தோன்
அடங்காப்புனற் செழுங்காவிரி
அறல்தென்னிலம் விரித்தோன்
அறவீரியன் இணுவைத்தமிழ்
அருள்நாட்டவர் தொழவே! 9

### பிறதெய்வங்கள் காக்க

குறிஞ்சித்திணைக் குறுங்கோயிலிற்
குறிஞ்சிப்பண்ணில் பாடி
குறவஞ்சியர் கோழிக்கொடி
குனிபூந்தலை வணங்கி
நறுஞ்சந்தனம் நறும்பன்னிற
நகைஒண்மலர் தூவி
நல்கத்தகர்க் குருதிப்பலி
நயந்தோன்தனைக் காக்க
பொறிமைந்தனைப் புயமேந்திய
புயல்வேந்தனும் அனலாம்
பொன்வேந்தனும் பூங்கொன்றையன்
புணர்கங்கையும் உமையாள்
செறிபொன்சிலம் புகுநல்மணி
சிந்தொன்பது சக்தித்
திகழ்தாயரும் இணுவைத்தமிழ்த்
திருநாட்டவர் தொழவே. 10

## 2. செங்கீரைப் பருவம்

செஞ்செவிய திருமேனிச்
சிவனுமையர் கைலையென்று
சேந்தன்உன்றன் இணுவையிலே
சேர்ந்தமர்ந்து களிகூர
விஞ்சையருந் தேவர்களும்
மிகும்பூத கணங்களுமே
விழிகனிந்து பார்த்திருக்க
விட்டொளிரும் பட்டுவிரி
மஞ்சமலர் அமளியிலே
மாலையந்தி ஒளிபரப்பி
மணிக்கரங்கள் பதித்தெழுந்து
மறைமழலை அமுதமொழீஇ
கஞ்சமுகம மிஞ்சுநகைக்
காந்திகண்டே அண்டமெல்லாம்
களிமுழங்கி ஆர்ப்பரிக்கக்
கனிந்தாடாய் செங்கீரை 11



செந்தினைமா தெள்ளிநறுந்
தேன்பிசைந்து நெய்கலந்து
செங்கரும்பின் வெல்லமிட்டுத்
தீம்பழங்கள் பிழிவுகுத்துச்
சிந்தருவி மலைக்குறவர்
செய்திடும்மா விளக்குவந்து
செம்பவளம் நிலவெறிப்பச்
சிரித்துவரம் ஈபவனே
முந்திரிகைப் பந்தலிலே
முத்தொளிரும் பழக்குலைகள்
முக்குறிமெய் அணில்முனிவர்
உண்ணுமனை முற்றமலி
கந்தமூல இணுவைநகர்க்
களித்துறையும் எழில்மழலாய்
கன்னல்கொழுந் தந்தவுடற்
கனியாடாய் செங்கீரை. 12

மாமரம்முன் நாள்தடிந்த
மங்கலவேல் இன்றுமென்றும்
மாக்களையும் மரங்களையும்
மானுடருள் தடியவைப்போய்
பாமரனும் கடவுள்சர்ச்சை
பண்ணிடவோ எனப்பழிக்கார்
பாமரற்கே அருள்புரியப்
பதிவேறாய் உள்ளதுவோ
சேமநன்னூல் படித்தறியான்
செவிஞானஞ் சிந்தனையால்
தேர்ந்தறிக தெளிகசிந்தை
திருந்துமுத்தி சேர்கவெனும்
தூமனத்தர் வாழிணுவைச்
சுடரும்பொன் நொச்சிமலி
தொல்பதியோய் மணிக்குழந்தாய்
சுகித்தாடாய் செங்கீரை. 13

உன்னழகைத் தமிழில்வைத்தாய்
உந்துதமிழ் தன்னழகை

உன்னருளால் மூங்கைவிடும்
ஓர்குமர குருபரனின்
மின்னலிடுங் கவிதையிலே
மிஞ்சஅள்ளிப் பொழிந்ததையா
வெங்கனல்நா யகன்சேவல்
வெல்கொடியுங் கொண்டவனே
தென்னைபனம் பாளைதினந்
தேயாத மேன்மையினால்
தெய்வநெறி தேய்தலிலாச்
சீரிணுவைச் செங்கோடா
என்னுயிரில் இன்பமழை
ஈந்துநிற்குந் தண்முகிலே
இன்கனிவாய்த் தேறலுக
எழுந்தாடாய் செங்கீரை. 14

அகிலங்கா டெரிந்ததனால்
அருஞ்சாரல் அடுக்கங்கள்
அருட்கோயில் மணம்நிலவும்
அழகாஉன் குறிஞ்சியிலே
மிகுமன்பால் குறவர்கள்
வேலெடுத்து வெறியாட
வேலன்மேல் வேலவனாய்
மெய்க்குறிசொல் மலைகிழவா
சகலவளம் இருக்கையிலுஞ்
சாந்திபெற உன்காலே
சரணமென்போர் இணுவைஐயா
தண்ணளியே கண்ணொளியே
மிகுந்தபர வசத்தில்அள்ளி
மெய்யணைக்கும் ஆசைதரும்
மின்சுடரே உயிர்க்கமுதே
விழைந்தாடாய் செங்கீரை. 15

மாங்கனிக்குப் போட்டியிட்டு
வருந்திமலைப் பழனிசென்று
வாங்கிநின்றாய் ஆண்டியுரு
வள்ளல்சிவன் பழமானாய்
ஓங்குபழ உன்னருளாம்
ஒண்சாற்றால் உயிரனந்தம்



உந்துகளித் தேன்குடிப்போம்
உள்கிளர்ந்தே ஆடிடுவோம்
மாங்கிளைகள் வளைந்துமண்ணில்
வந்துகாய்கள் முத்தமிடும்
மன்னுகுளக் கரைப்பொழிலில்
வந்திணுவைப் பதியுறைவோய்
பூங்கரங்கள் பொன்முகங்கள்
பொழியுமருள் ஒள்விழிகள்
பொங்குபொக்கைப் புன்சிரிப்ப
புரண்டாடாய் செங்கீரை. 16

ஆணவமாம் சூரபன்மன்
அமர்தேவ யுகல்பலவாய்
அலைந்துநொந்தே அல்லலுறும்
ஆன்மஇந்த்ர ஞாலத்தோர்
பேணிஅருள் புரிந்தடியில்
பேறீந்து முத்திதந்த
பிள்ளையுருப் பேரிறைவா
பிஞ்சுருவில் கொழுங்கனியே
காணிசெல்வப் பயன்நுகர்ச்சி
கடவுள்சக்திக் கொடுக்குமெனக்
கண்டறிந்துன் காலமர்ந்தோர்
களிப்புமட்டும் பெறும்வீரர்
காணமிகும் இணுவைநகர்க்
கசிந்துருகுந் துதியேற்போய்
கந்தமலர்க் கொத்தமுதே
களித்தாடாய் செங்கீரை. 17

பேயியல்பன் சூரபன்மன்
பெருமாயம் அத்தனையும்
பிழைபட்டுன் அனல்வேலால்
பிளவுபட்டுஞ் சன்னதனாய்த்
தீயெனவே அஃறிணையாஞ்
சேவலுமாய் மஞ்ஞையுமாய்
சீர்குலைந்து வரஇரங்கித்
திருநோக்கால் ஆட்கொண்டு
தூயஉன்றன் வாகனமாய்ச்
சுடர்க்கொடியின் இலச்சினையாய்

சுகந்தந்த அருட்குருவே
சுளைவெடித்துத் துளிச்சாறு
பாயுங்கனி நெருங்குபலா
மலிவீதிப் பதியிணுவைப்
பக்தருளம் பால்சுரக்கப்
பறைந்தாடாய் செங்கீரை. 18

கோழிபாடும் வாயாலே
குஞ்சுபாட மாட்டேனென்று
குமரனுன்றன் அடியவர்முன்
கொக்கரித்த சிவகவியைப்
பாழில்சுடும் வழியில்நல்ல
பண்புமுட்டை என்றுநின்று
பாடுவித்து முட்டையென்றே
பாட்டில்வேறு குற்றங்கண்டு
வீழக்கவி அகந்தைஅருள்
வேலவனே வீதிதொறும்
வீணைகுழல் வேய்ங்குழலில்
விஞ்சடியார் குரல்களிலே
யாழிலெலாம் உன்புகழே
அள்ளிவரும் பாட்டுவரும்
அம்மிணுவை உயிரழகா
ஆடியருள் செங்கீரை 19

ஆதியந்தம் இல்லாதான்
அப்பெருமான் இளம்வடிவே
ஆதியின்மை உன்னையொக்கும்
அம்மலந்தன் பந்தமிலாய்
ஏதமிலா ஆனந்தா
எல்லையிலா வல்லவனே
ஈறாதி இல்லான்மா
எண்ணரிய அனந்தம்அவை
வாதைமலக் கும்பலினால்
மயக்குபந்தம் பட்டிழிவாய்
மறைந்தின்பங் கேவலமாய்
வாடிடுதல் தவிர்த்துன்றன்
ஏதமிலா ஆனந்த
இன்பநிலை உய்த்திடவே



எண்ணிணுவை வேலவனே
எழுந்தாடாய் செங்கீரை. 20

## 3. தாலாட்டுப் பருவம்

சுடரும் பசும்பொன்னின்
தூயமணித் தொட்டிலிலே
சுருளும் நுரையள்ளித்
தொக்கபனி மெத்தையெனுங்
கடிபூங் கமழ்சேக்கைக்
கமலப்பூ ஆறினது
கட்டாய்ச் சிரித்துக்
களிப்பவனே தாலேலோ
வடியும்உன் வாய்த்தேன்
மாந்திநிமிர் உமையம்மை
வாஞ்சை முகங்கனிந்து
மகிழ்ந்தாட்டும் பொன்னழகே
அடியர் மலியிணுவை
ஆனந்த சொர்க்கமென
ஆக்கும் அருளாளா
ஆரமுதே தாலேலோ. 21

அங்குன் றன்தந்தை
ஆதிக்கே பிரணவத்தின்
ஆழப் பொருளைமுன்
அந்தரங்க மாயுரைத்தோய்
கங்குச் செதில்பாய்
கருமேனிப் பனைகளெலாங்
காவடிக ளாடிக்
களிகூருங் குளக்கரையில்
இங்கெம் மிணுவில்
இடங்கொண் டெழுநிறைவே
எண்ணச் சுகசாந்தி
இறைக்கும்வான் கற்பகமே
பொங்கும் அமிழ்தேசிவ
போகச் சிகரமதே
பொன்னே மணியே
புதுப்புனலே தாலேலோ. 22

அண்டம் பலவும்
ஆனந்த மாயுன்றன்
ஆடுந் தொட்டில்
அசைவினிலே சேர்ந்தாடும்
தொண்டர் அகநாச்
சுவையூறி அள்ளூறத்
துதையத் துதையத்
துளும்புந்தேன் வான்மலரே
தண்டைச் சிலம்பின்
சல்சல் ஒலிகங்குற்
சாமத் தனுங்குஞ்
சிவசாந்திப் பதியிணுவை
மண்டுஞ் சுகமே
மங்கலமே ஊழ்தீர்க்கும்
மந்திரமே நல்லோர்
வணங்கிறையே தாலேலோ. 23

பொட்டல் மணல்வழியில்
பொசுங்கும் வெயில்வேளை
பொல்லாக் களைப்போடு
புரியாமல் உன்வேடம்
சுட்ட பழங்கேட்ட
சூதறியா ஔவைக்குச்
சுட்ட பழம்வீசிச்
சுடர்க்குஞ் சுடர்வீந்தோய்
இட்டேன் அடைக்கலமாய்
எனையுன் அருட்சித்த
இன்ப வழிபோக்க
என்போர் இணுவையனே
கட்டிக் கரும்பே
கடவுட் கனிச்சாறே
கண்கள் துயின்றிடினுங்
காண்விழியாய் தாலேலோ. 24

நச்சுக் கழுத்தன்முன்
நல்கியதோர் சேயெனிலும்
நகங்கள் ஈறும்
நன்மருந்தார் சஞ்சீவி



பச்சைப் புனம்மேல்
பச்சைவயல் தாழ்ந்ததுவாய்
பச்சைப் பசுங்கிளிகள்
ஏராளம் படிந்திங்கும்
அச்சில் அடங்கா
அரியதிருப் புகழ்பாடும்
அருண கிரிக்கிளிகள்
ஆயிரமாய்த் தெரிகின்ற
இச்சைக் கினிய
இணுவைக் கொருபுகலே
இந்தக் கலங்கரையில்
ஏற்றொளியே தாலேலோ. 25

அண்டுந் தலங்கள்
ஆறுபடை வீடுகளில்
ஆடும் மயிலில்
ஆனந்த மாய்ப்புகுந்தே
அண்டர் அரணே
அருள்மாரி தூர்ப்பவனே
அயில்கொண் டந்நாளில்
ஆழி வறுத்தவனே
வண்டு விழிக்கா
முன்னம் மகிழ்ந்தெழுந்து
மலரா முன்னம்
வண்ண மலர்பறித்துக்
கொண்டுன் னடிகள்
குவித்து வணங்கடியார்
குடியோங் கிணுவைக்
கொஞ்சொளியே தாலேலோ. 26

கேட்டுக் கிடைத்த
வரங்காக்கும் என்றவுணர்
கேடு புரிந்தார்
கேவலமாய் வீழ்ந்தார்கள்
ஈட்டென் காப்பில்
இருந்தல்ல செய்வீரேல்
இதுதான் உமக்கும்
என்றுள் ளுரைப்போனே

ஆட்டுக் கடாக்கள்
அன்னபுகைக் கன்றுகளுள்
ஆங்காங்கே முருகா
ஆர்க்கும் ஒலிகேட்கும்
தோட்ட வெளிசார்
தொல்லிணுவைப் பதிக்கென்றுஞ்
சொக்குங் குழந்தாய்
சுகவூற்றே தாலேலோ. 27

கச்சியப் பன்சந்தக்
கவிதைத் தலைமகனே
கச்சிப்பே ரம்மை
காந்தத் தமிழ்மகனே
நொச்சிக் குழைநாட்டி
நுண்கனவில் எழுந்தன்பர்
நோற்குந் தளியங்கு
நாட்ட நுவன்றவனே
அச்சங் களிப்போ
டன்றமைத்த ஆலயமாய்
அழகார் இணுவைப்
பதியமர்ந்த அற்புதமே
பிச்சிக் குறவள்ளிப்
பித்தனென ஆனவனே
பிள்ளைக் கனியே
பேரமுதே தாலேலோ. 28

ஏறும் மயிலான
மாமன் தேவேந்திரற்கும்
இன்பம் அளித்த
எழில்நிலவே இங்குவரும்
வீறுண்ட உச்ச
வெளிநாட்டுக் கலைஞருமே
மெய்மறந்து வீழும்
மிகுங்கருணை ஆறுமுகா
நாறு மலர்க்கூந்தல்
நன்மாதர் பூமழையால்
நாளும் அருளோங்கும்
நல்லிணுவைப் பூஞ்சுடரே



ஆறுமனம் பார்த்தென்
றாறுமுகங் கொண்டோனே
ஆளும் மலர்த்தொகையே
அள்ளமுதே தாலேலோ. 29

செந்நெல் உமியாய்ச்
செம்பில் களிம்பாகச்
சீவனிலே நின்று
தீராப் பிணிநல்கும்
இன்னல் மலங்கழுவி
இன்பீய மாயையினால்
ஏற்ற களமாக
எழிலார் பிரபஞ்சம்
மன்னும் ஆறாறு
வாழ்வீயுந் தத்துவங்கள்
வனைந்துயிருள் வைத்து
மண்ணுக் கனுப்பி
அன்னார்ச் சகலத்தில்
அத்துவித மாய்க்கலந்தும்
ஆதிமலம் தேய்த்திணுவை
அமர்வோனே தாலேலோ 30

## 4. சப்பாணிப் பருவம்

அடியார் சாமரை வீசிநிற்க
அலைவாய்ச் செந்தில் தனிலுனக்காய்
அடடா உங்கள் சாமிக்கும்
அங்கம் வியர்க்கு மோஎன்றே
இடியாய்ச் சிரித்த வெள்ளைமகன்
ஏங்கி அதிரும் படியுன்றன்
எழிலார் மேனி வியர்த்தவனே
ஏத்த அவனும் இருந்தவனே
உடுசூழ்ந் திலங்கும் நிலவொளியில்
ஓலைக் குடிசை முற்றங்களில்
ஒடியற் கூழைச் சூழ்ந்துகுந்தி
ஊதிக் குடிப்போர் இணுவிலிலே

வடிதேன் மலராம் உன்கோயில்
வண்டாந் தொண்டர் சுற்றிவலம்
வந்து பாடக் கைத்தாளம்
வழங்கிக் கொட்டுக சப்பாணி. 31

கொடுப்பார் சிவனார் உமைமூலம்
குகனை என்றண் டர்நம்பிக்
கூடாச் சூழ்ச்சி பலபுரியக்
கொடுத்தார் நெற்றிப் பொறியாக
வடக்கு வாசல் வழிவருவாய்
வாட்டந் தீர்க்க என்றங்கு
வழிபார்த் தவனாய் நானிருக்க
மற்றோர் வழியால் வந்தருளி
இடுக்கண் நீக்கிச் செல்பவனே
இன்ப மயிலாய்ச் சிறுவடலி
எழில்பல் தோகை விரித்தாடும்
இணுவைப் பதியில் பேரரசே
மிடுக்கர் ஆறு முகவேளே
மின்னல் கோடி உருக்குருவாய்
விளங்கும் மேனி வீற்றிருந்து
மெல்லக் கொட்டுக சப்பாணி.

தில்லை மன்றுள் திருநடனம்
சிவனார் செய்த தைப்பூசத்
திருநாள் ஒன்றில் சிவனேவச்
செல்லுங் காலைப் போர்க்கன்னை
வெல்லுஞ் சக்தி ஞானவேல்
விரும்பி நல்கக் கொண்டவனே
வேதந் தெளியா மெய்ப்பொருளே
மெய்யன் பர்க்கோ எளியவனே
நல்லை மாவை சந்நிதிசூழ்
நறுந்தேன் காட்டுக் கதிர்காமம்
நலமார் இணுவைத் தொல்லீழ
நகரந் தோறும் குடிகொண்டாய்
கல்லாங் கள்ள மனம்நெக்குங்
கனியாய் உருக்குங் காந்தஅருட்
கடலே முள்ளில் மலர்செய்த
களிப்பில் கொட்டுக சப்பாணி.



அகிலம் போற்றும் வைத்தியரும்
அகற்ற முடியா நோய்தீர்ப்போய்
அடிமை முழுமை யாயுனக்கே
ஆக்கிப் பிறவி நோய்தீர்ப்பாய்
முகில்கீண் டோங்குங் கோபுரத்து
முகில்புக் குலவும் மாடங்கள்
முத்தி வேண்டித் தவஞ்செய்யும்
மோன முனிவெள வாலொருகால்
சுகமாய் முருகா எனக்கூவும்
சொர்க்கப் பதியாம் இணுவிலிலே
சொக்குங் கமல முகமாறு
சுடர்ந்து பொலியுந் திருமேனி
பகலாய் விளங்கி மின்னலிடப்
பக்தர் பாவம் தீர்ப்பதிலே
படைத்த வெற்றி உலகமெலாம்
பகரக் கொட்டுக சப்பாணி. 34

அடுக்கச் சாரற் கொடிவள்ளி
அகழ்ந்த கிடங்கிற் கிடந்தன்பாய்
அள்ளி யெடுத்த வேடர்குலம்
ஆண்ட கொடிக்கும் ஆண்டவனே
நெடுத்த மஞ்சம் செய்வித்து
நின்றன் கோயில் கொண்டுவர
நின்ற சன்னி யாசிக்கு
நேர்வழி திறக்குஞ் சன்னதமும்
கொடுத்தோய் அன்னப் புள்வெள்ளைக்
குதிரை நான்கு பூட்டியந்தக்
கோல மஞ்சம் உலவிவரும்
குமரா சூழ ஆகாயம்
இடிக்குங் கலசத் தளிசூழும்
இணுவைக் கோன்பொன் னில்கடைந்த
ஈரா றங்கை சிவந்தொளிர
இனிதாய்க் கொட்டுக சப்பாணி. 35

அடைய முத்தி அழு வோர்க்கே
அருள்வேன் முதலில் என்பான்போல்
அண்டர் அவுணர்த் தெறல்வேண்டி
அழுது தொடர்ந்தும் ஆர்வமுறான்

முடிய வேதந் தெரிந்துதவம்
முனைந்தும் மனமொடுங் காமைசொலி
முன்னின் றழுத சனகாதி
முனிவர்க் கருள ஞானபதம்
நெடிய கல்லால் நிழல்சார்ந்தோன்
நிதியே இமயச் சிகரமிசை
நெடுங்குன் றம்வைத் துச்சிநின்று
நிலமண் டஞ்ச ராசரங்கள்
திடமாய்க் கேட்க ஆனந்தஞ்
சேர வாரீர் முருகனடி
சீவர்க ளேயென்று கூவோமோ
சீரிணு வையஒலி சப்பாணி. 36

மறையவர் இல்ல வரிசைகள்
மங்கள இசையோர் மாளிகைகள்
மாதவன் பூசை மலர்சேர்க்கும்
மாலைத் தொழிலர் குடியிருக்கை
இறையவன் உன்றன் தளியருகில்
இருத்திக் காக்கும் இணுவையையா
இரங்கி அருள்கூர் ஒள்விழிகள்
இலங்கி மயக்கும் உன்னழகு
மறுவில் ஆறு நிலவூறி
மங்கல மோங்கும் புன்முறுவல்
மதிக்கீற் றன்ன குளிர்விரல்கள்
வண்டாய்த் திரியும் மலர்விழிகள்
நிறைந்து வழிய நம்நெஞ்சில்
நீட்டும் இன்பத் தேன்மாரி
நிமிரா வண்ணம் நம்மலங்கள்
நிமலா கொட்டுக சப்பாணி. 37

தோன்றாக் கொடுங்கோல் ஆணவனார்
சூக்கும அரசின் கையாளாய்த்
தொடுவோன் பழிகள் பின்னந்தத்
தொடர்பால் இருளார் வாங்குமடி
தான்கூ டத்தான் படவேண்டும்
சரியில் லாத நாடகத்தில்
தானுந் தொடர்ந்தும் நடிக்காமல்
சரவண சர்ணம் என்பானேல்



தேன்பாய் அருளால் காப்பவனே
சிவனை இகழ்தக் கன்வேள்வித்
திளைத்த சிவநிந் தைதன்னைச்
செய்த தேவர் திகழ்சாட்சி
ஈன்ற தம்புத் திரரிருந்தும்
இருஞ்சொத் துனக்கே எழுதன்பர்
இணுவைச் சேயே பெருஞ்சொத்தே
இனிக்கக் கொட்டுக சப்பாணி. 38

பதிகம் கோவை கலிவெண்பா
பள்ளு புராணம் பிள்ளைத்தமிழ்
பாமா லைபோற் பொன்கலங்கள்
பலவும் அள்ளிக் குறையாத
அதியற் புதம்வீ றருட்கடலே
அன்று வார்க்க வார்க்கஉரு
அமையா ஆறு முகமையர்
அகத்தாள் தாலி உருக்கியிட்டுப்
புதிதாய் மீண்டும் வார்த்திடவே
பொலிந்து மங்கள எழில்பூண்டு
பூத்தாய் இணுவைப் பதியினிலே
பொய்க்கா உன்றன் அருள்பெற்றால்
எதுதான் இன்பம் இலைவாழ்வில்
இல்லை யானால் உன்கருணை
எதுதான் உண்டு வாழ்வினிலே
எழிலா கொட்டுக சப்பாணி. 39

படைபடை யாகப் பாசங்கள்
பற்றுண் டழுங்கும் ஆன்மாவைப்
பலபல பிறவிச் சலவையிலே
பக்குவ மாக்கி விதவிதமாய்
உடலுளம் போகம் நல்கெழிலா
ஓரறி வையறி வாறறிவாய்
ஓரா யிரந்தரம் பிறந்தீற்றில்
ஓங்கிய மனிதப் பிறவியிலும்
கொடுமா ணவத்தின் கூத்தாகக்
கோடி கன்மம் ஆற்றியதால்
கோடி அவலம் ஆணவத்தின்
கூர்கெட நுகர்ந்த பரிசுத்தஞ்

சுடர்ந்து மெல்லத் துலங்குயிர்க்குத்
துன்பம் முழுதும் ஆணவத்தின்
தொடர்பா லெனும்ஞா னம்ஊட்டுந்
தொல்லிணு வையனொலி சப்பாணி. 40

## 5. முத்தப் பருவம்

அங்கமே வேள்வியின் அழலெரிக் கிடங்கிலே
அரிந்தெறி வைர பக்தி
அல்லலோ அசுரரை ஆண்டவன் மெச்சிநல்
அருவரம் நல்க வைக்கும்
உங்களின் உள்மனம் ஒருமனம் ஆகவே
உறுதியாய் வேண்டில் முத்தி
உதவுவேன் என்பவா உருகிவா என்பவா
உந்தருள் கந்த வேளே
தெங்கின்ஓர் ஓலையே செவ்விய குடிசையாய்ச்
செழுநிழல் பரப்பி நிற்கும்
தென்னையந் தோப்புகள் திக்கெலாம் பொங்கிடும்
திகழ்பதி இணுவை வேலா
கங்கைவார் சடையனும் களியுமை கணங்களும்
கணக்கிலா அன்ப ருயிரும்
கனியிதழ் முத்தமுண் கனவுறுஞ் சிலிர்ப்புறக்
கருணைகூர் முத்த மருளே. 41

குறிவைப்பர் மெய்யெலாம் குழம்புவர் நெஞ்சமோ
குறிவைக்கும் உலக போகம்
குமிழ்மிதி தடியிலே குருக்களாய் உலவுவர்
குமிழியிடும் நெஞ்சில் நஞ்சு
நெறியிலா இவர்குரல் நெருங்கருஞ் சந்நிதி
நிமலனே நெருங்கு பவள
நிறவெங்கா யப்பயிர் நிறைபுனம் இருந்துமே
நின்புகழ்ப் பாடல் கேட்கும்
செறிபனை கமுககள் தெளிநிழல் இணுவையில்
சேந்கனே சிந்தை முதலே



சிறைவிடத் தேவரைத் தீரமாய்ப் பொருதவா
செந்திலாய் கந்த வேளே
மறிகடல் திரையினில் மலிந்தெழும் குமிழ்நுரை
முத்தென வாரி வாரி
மாய்ந்திடும் மூடரும் வான்முத்தி எண்ணவே
மந்திர முத்த மருளே. 42

மஞ்சமொன் றாக்கியே மகிழ்ந்துநின் னருள்பெற்ற
மாதவச் சன்யா சியார்
வாழ்ந்தமஞ் சத்தடி மாதவத் தலத்திலும்
மன்னியருள் புரியும் வேலா
பஞ்சுவளர் பருத்தியடைப் பானபதி செகராசப்
பழமன்னன் பண்ட மைத்த
பதியமரு வேழமுகன் பாங்கமர்ந் தோய்அரசன்
பரராச சேகரன் தன்னால்
மிஞ்சுபழம் உதிருமர விளாத்தியடி நிறுவுற்ற
விநாயகன் அருகில் கொண்டோய்
விம்முமுலை சுரந்தூட்ட விரைந்தணுகு மண்மையினை
வேண்டியிணு வில்அ மர்ந்த
செஞ்சொலருள் சிவகாமி சிதம்பரநல் வளவிலுள
திருக்கோயில் நீங்கி வருவாள்
சிவதேவ கணஞ்சூழுஞ் சீரிணுவைப் பதிவாழுஞ்
சேந்தனே முத்த மருளே. 43

கல்லிடை அமர்ந்துயர் கடுந்தவஞ் செய்துமே
காசிபன் என்ன ஆனான்?
கண்கவர் பேரெழிற் கன்னியாம் மாயையின்
கவர்ச்சியால் தவமி ழந்தான்
இல்லறத் தாருகா எழில்வனத் திருடிகள்
இழிந்தனர் மோகி னியினால்
இழிதகை மனிதரில் இடர்விலங் கேற்றமே
இன்றவத் துறவுக் கென்றே
செல்லினும் வனமிடர் சேரலாம் என்றுன
செந்திருப் பாதம் நீங்கார்
திண்பிரம சாரியர் செய்தவங் காப்பவா
சேவலங் கொடியு யர்த்தோய்

வெல்கவி வல்புலம் வீறுணும் புலவர்கொள்
மேன்மைபொங் கிணுவை நாதா
வெந்துமல பந்தத்தின் மீண்டுவரு மடியர்க்கு
விடிமுத்தி முத்த மருளே. 44

பழமரச் செல்வரே பரமெனப் பணிந்திடும்
பலவெளவால் பக்தி யாலே
பழமரச் செல்வரும் பரங்களே தாமெனப்
பரிணமித் திருப்ப தாலே
தொழுவெனோ மனிதனைத் தூவென்போர் உன்னையும்
தொழமறந் திருப்ப தாலே
தொழுபவர் குறைந்திடுஞ் சோறுணி உலகிலே
தொழுபவர் மலியு மிணுவில்
அழகன்நீ தினமுறும் அபிடேகச் சோம்பைகள்
அள்ளுமர்ச் சனைம லர்கள்
ஆடுகள் மந்தைமேய் அருவியஞ் சாரலார்
அகில்கமழ் குன்ற மாகும்
செழுமையார் நொச்சியில் திகழருட் செல்வமே
தித்திக்கும் முத்த மருளே
செங்கனி வாய்மலர்த் தேறலின் தண்ணெனும்
சிந்துதுளி முத்த மருளே. 45

வள்ளியைத் தழுவினை வவ்வினை அவள்நலம்
வருந்தநீ பிரிந்து நின்றாய்
வாடினள் சோர்ந்தனள் மலர்விழி அலமர
மயங்கினள் என்று காக்கக்
கள்ளமாய்க் குறிச்சிபோய்க் கவர்ந்துசென் றிருளிலே
களிப்புனல் நீச்ச லீந்து
கட்டிளங் காளையாய் நின்றவா கார்மழைக்
களித்தோடும் மாரி வெள்ளம்
அள்ளிப்பன் னிறமலர் ஆடையாய்ப் போர்த்துடல்
ஆடிவந் துனைவ ணங்கும்
அயல்பல ஊரிருந் தடியவர் சூழ்ந்திடும்
அண்ணலே இணுவை வேலா
உள்ளதேல் இனுமினும் உலகிடைப் பிறவிகள்
உன்னடித் தொண்ட ராகும்



உத்தமப் பிறவியே உதவிடென் றழுகிறோம்
ஓகையார் முத்த மருளே. 46

காசுண்டு நிலமுண்டு கடையுண்டென் றெணிவந்து
கடவுளுண்டு எண்ணம றப்போர்
காசில்லை சொத்தில்லை காணியில் லையென்று
கடவுளும் இல்லை என்போர்
மாசுண்ட மலங்கெட்டு வளர்தூய நெஞ்சினார்
வள்ளல் நீஉண் டென்பராய்
வளமென்ப முழுதுண்டு மனச்சாந்தி யுடனோங்கு
வல்தவம் மூழ்கு மிணுவைத்
தேசுண்ட பதியனே திருநந்த வனமெனத்
திகழ்பெரும் வளவி லெல்லாம்
சிறுசிறு மனைகளில் சிறந்துறை தபசியர்
தினந்தினம் வணங்கு மழகா
வாசங்கள் மலியுன்றன் மலராறு முகமேவு
வடிவூறும் அமுத வாயால்
வானேந்து முத்திக்கு வழங்கச்ச வாரமாய்
வளமோங்கு முத்த மருளே. 47

காசிபத் தந்தைசொல் கடவுள்தர் மங்களைக்
கண்டித்த மாயை அம்மாள்
காட்டினள் அண்டங்கள் கட்டியாள் ஆசையை
கண்ணிலா அசுரர் நம்பி
ஏசிடப் படும்படி இழிந்தனர் அழிந்தனர்
இன்றும்அன் னவர்அ னந்தம்
இன்றுபல் தாயர்கள் இருப்பதால் மாயைபோல்
இளவலே ஆடல் கொள்ளில்
தேசுறும் பொறிமயில் சேவல்கள் கோடியாய்ச்
சேர்ந்திடும் விடுக வேண்டாம்
தென்றலே உலவிடுஞ் செங்கதிர் நுழைவருஞ்
சிவவனங் காரைக் காடு
மாசறு தவவனம் மன்னிடும் இணுவையில்
மகிழ்ந்துறை மஞ்ஞை வேலா
மங்கலம் மின்னிதழ் மலர்பன்னி ரண்டினால்
வானேறு முத்த மருளே. 48

மந்திரம் தந்திரம் மாயங்கள் கட்டலாம்
மனிதரை மனித ருள்ளே
மன்னுனக் கடியவர் தம்மையுங் கட்டவோ
வாழ்வருன் அடிமை யானோர்
சுந்தரக் கடவுளே சூரனப் போரிலே
சூழ்ந்தமந் திரங்கள் மாயம்
தூசெனத் தூத்தவா தொல்வரஞ் சாய்த்தவா
தூர்ந்திட மலர்கள் மாரி
செந்தகர் வாகனஞ் செய்கையில் உனக்கெனச்
சென்றவ்வா சாரி கனவில்
சீரிணு வையன்நீ திருந்திய கொம்புகள்
செய்கொடி உள்ள தானம்
விந்தையாய்க் காட்டினை மெய்க்கன வின்படி
வெட்டியே கொம்பு செய்த
வீரமா எழில்தகர் விளங்கூர்தி கொண்டவா
விளையாடி முத்த மருளே. 49

வலிமைகெட் டாணவம் மலைதிட்டி யாய்க்கன்மம்
மாயைதொழிற் பாடு வற்றி
வருத்தும் அவாவெகுளி வஞ்சனை அச்சமொடு
மனச்சஞ்ச லங்க ளற்று
நலிவுகள் ஒய்ந்துயிர் நண்ணடக் கத்திலே
நகைபூக்க இனிய சாந்தி
நாடியெழ வைப்பவா நான்யா ரெனும்வினா
நல்குவோய் நற்ற ரிசனம்
நிலைபெற நித்தமும் நின்னிலா னந்தமே
நீங்குபசு வினைகள் பேணு
நின்மல நிலைசரண் நிற்குவேன் நாமெனை
நெஞ்சிலே கூறி நிற்போய்
கலியுகக் கடவுளே கருணைபூண் விழியனே
கனகவேல் தாங்க வந்தோய்
கலைமலி இணுவையில் களித்துறை அழகனே
கனிந்துயர் முத்த மருளே. 50

## 6. வருகைப் பருவம்

சினப்புலி உலவுஞ் சாரல்
தினைப்புன வள்ளி சாயல்



திணறடித் துன்றன் சாந்தி
சிதறடித் ததனால் ஏங்குன்
மனக்குறை தீர்க்காள் மௌனம்
வாட்டப்பேர் ஊர்கள் கேட்டும்
மரமென நின்றா ளுக்கும்
மனங்கனிந் தருள்செய் தோனே
நினைத்தொழு தோங்கும் நாமுன்
நிறப்பொலி வள்ளி மாந்தி
நின்றனம் இணுவைக் கோவே
நிலவெழுஞ் சுடர்மு கத்தோய்
பனிப்புனற் கங்கை தாங்கப்
பரிந்துதன் தலையே ஈந்த
பரம்பொருள் மைந்தா வாராய்
பச்சிளங் கொழுந்தே வாராய். 51

வழாப்பெருந் தவத்தால் உன்னை
மணந்திடும் வரமந் நாள்கொள்
மால்மகள் தேவ சேனா
மகிழ்ந்துனைத் தழுவும் வாழ்வை
விழாப்பெரு மணநாள் தந்தாய்
மிகுஞ்சிலைப் பரங்குன் றத்தில்
மின்னலங் கொடியே யன்னாள்
விழிநிகர் இணுவை நாதா
விளாத்தியின் அடிய மர்ந்தோன்
வியக்குமற் புதங்கள் செய்வோன்
மிகும்பொங்கல் வடைமா லைகொள்
மிளிர்வயி ரவன்பாங் குற்றோய்
அழாக்குறை யாக உன்றன்
அருள்முகங் காண எங்கும்
அடியவர் இணுவை ஐயா
ஆனந்தம் பொங்க வாராய். 52

சுக்கிர வாரம் என்னுஞ்
சுடர்வெள்ளிக் கிழமை நோன்பு
தொடர்ந்துமூன் றாண்டு நோற்றுச்
சூரன்கொள் ளரசும் மீட்டான்
துக்கமாய்த் தோற்று மக்கள்
துணைவியோ டடவி புக்குச்

சோர்பகீ ரதனாம் மன்னன்
தூயஇந் நோன்பு காத்தால்
தக்ககற் போங்கும் இல்லாள்
சான்றமக் களுஞ்செல் வங்கள்
தாமும்நீ தருவா யெனறு
சாற்றுவ சரிதை யாவும்
சுக்கிர வாரம் அன்றித்
தொடர்ந்தெல்லா நாளும் நோற்கும்
தொண்டர்மிஞ் சிணுவைக் கோவே
சொர்க்கமே ஐயா வாராய். 53

கந்தநல் விரத நாளாம்
கார்த்திகை மாதம் நண்ணும்
கார்த்திகைத் தினத்தில் நின்தாள்
கருதியே பன்னீ ராண்டாய்
அந்தநா ரதனும் நோற்க
அருஞ்சப்த ரிஷிகள் கோன்மை
அளித்தனை இன்னும் பல்போ
அடைந்தனர் பலனுன் நோன்பால்
எந்தையே அரசும் வேம்பும்
இணைந்தர்த்த நாரி ரூபம்
எண்ணிலா இடத்தில் காட்டும்
இணுவையம் பதியில் வேந்தே
கந்தமா மலர்கள் மேலாங்
கந்தமா மலராம் உன்றன்
கமலமா முகங்கள் தாமோ
கால்கண்டாற் போதும்' வாராய். 54

பழிமிகும் அசுரர் செய்யும்
பாதகந் தாங்காத் தேவர்
பணிந்தைப்ப சியினில் நண்ணும்
பரிமளக் கந்தர் சட்டி
எழிலனுன் சரிதங் கேட்டும்
இனியபல் பூசை செய்தும்
இராப்பகல் ஒடுங்கி நோற்றே
இரங்கிடா அசுரர் வீழ்த்தி



முழுதுல காளும் பேற்று
முருகுனுன் வரம்பெற் றார்கள்
முழங்கிடும் உடுக்கொ லித்து
முற்றங்கள் தோறும் நின்சீர்
அழகுறப் பாடும் பக்தர்
ஆயிரம் பொன்னேற் கின்ற
அரும்பதி இணுவைச் செல்வா
ஆனந்தா அழகா வாராய். 55

வேங்கைமா மரமாய் மாறி
வேடர்கள் மிரள நின்றோய்
வெள்ளிய தாடிச் சாமி
விருத்தனாய் மாயஞ் செய்து
தேங்குட நீல வள்ளி
சிங்காரம் பருகுங் கண்ணாய்
தீங்கனி தினைமா வள்ளி
தந்திடத் தின்றோய் விக்கி
மூங்கைநீங் காஅக் குமர
குருபரத் தவளை மூர்க்கர்
முருகுனைப் பாடித் தோற்கும்
மொய்புனற் குளக்க ரைக்குள்
ஓங்கிணு வைத்த லத்தில்
உறுங்கந்த சட்டி நாட்கள்
ஓமென மயில்கள் பாட
உவப்பவா வருவாய் ஐயா. 56

ஓங்கிய மரங்கள் ஏறி
ஒண்மலர் பறித்து வந்தோர்
ஊறுமுட் செடிகொ டிக்குள்
ஒளிந்தலர் பூக்கொ ணர்ந்தோர்
பூங்குளப் புனல்புக் கேந்தும்
புதுமலர் கவர்ந்து வந்தோர்
புனிதமாய் இதயப் பூக்கள்
போற்றிட மறந்தால் அன்னார்
பாங்குறல் மறுக்கும் ஐயா
பக்குவர் பலர்மேல் நின்று

பயம்பிணிக் குறைதீர் பார்வை
பரிந்தருள் இணுவைக் கோவே
சாங்குசக் கரவா கம்ஓங்
கிடுமணற் குன்றா ழியதாய்
எழுமிச்சை அவுணர் மாள
எழுந்தருள் புரிய வாராய். 57

புள்ளிமான் கூட்டம் சாமைப்
புனங்களில் ஊடே பாய்ந்து
புறப்படுஞ் சுனைப்பூஞ் சாரல்
பொழிமத யானை வாழும்
வள்ளியங் குன்றில் சோலை
வளர்தினைப் புனங்கா வல்செய்
வள்ளியின் அழகிற் சொக்கி
மரபினை உடைத்தெ றிந்தோய்
புள்ளொலி குளக்க ரைக்குள்
புலம்பெயர்ந் துறையும் வெள்ளம்
புன்தலைச் சிறுவர் கூடிப்
புணையென மிதக்குங் குற்றி
வள்ளங்கள் ஏறி யாடும்
மலிவள இணுவை வேந்தே
மண்டுநர் நின்றன் கீர்த்தி
வாழ்த்துநர் களிக்க வாராய். 58

காங்கேய தழுவ நீயுன்
காந்தமேந் தழகு வள்ளி
கானவர் கோனாந் தந்தை
கதிர்தினை முற்றிற் றென்று
வேங்கையில் விரிந்த பூக்கள்
விளம்பின விடுக காவல்
வீடுவா என்ற போது
வீழ்ந்திடி நெஞ்சில் தாக்க
ஏங்கினள் அதுபோல் உன்னை
எங்குகாண் போமோ என்றும்
இன்னலுற் றழுங்கா வண்ணம்
இங்கெம்முன் எழுந்து நிற்போய்



ஓங்கிய மருதும் செந்நெல்
உறும்பசும் வயலும் இங்கும்
உண்டென மருதங் கூறும்
ஒள்ளிணு வைச்சேய் வாராய். 59

மாயையாங் கைவி ளக்கின்
மயங்கிய வெளிச்சந் தன்னில்
மலங்கடி பிறவி நூறு
மண்ணிடைத் தாங்கி ஓங்கி
தூயநின் னருள்வெ ளிச்சந்
துணைசெயத் தனைய றிந்து
தொடேனொரு கன்மம் முன்பு
தொட்டவை பொறுப்பாய் என்று
தாயநின் னடியார் கூட்டஞ்
சங்கமித் துன்னில் மூழ்கி
தரிசனம் தரநீ பெற்றுன்
தாளிணை நெஞ்சம் வைத்தார்
கோயில்கொண் டிணுவை யூரில்
குவலயம் முழுதுங் காக்கும்
கோலமா மயில்மேற் சேவற்
கொடியனே குழகா வாராய் 60

## 7. அம்புலிப் பருவம்

### சாமம்

தரணியில் எங்குஞ் சரிசம மாகத்
தண்ணொளி பொழிவதனால்
தண்ணொளி பருகுஞ் சரபங்க ளடியார்
தமைமிகக் கொண்டுளதால்
அரன்புரந் தருளும் அப்புக ழரணம்
அண்டிய மேன்மையினால்
அல்லிருள் கடியும் அரும்பணி புரியும்
அப்பெரும் புண்ணியத்தால்
பெருநில வாம்நீ பிறங்குசெங் கோன்தனைப்
பீடுற ஒத்தல்கண்டான்

பில்கமு தின்வாய்ப் பெருகிட ஆடப்
பேரருள் கொண்டழைத்தான்
அரும்பிணி கழுவும் அருட்கிண றூற்றம்
அமையிணு வைப்பதியில்
அலைமுகில் வானம் அல்வழி அனுப்ப
அம்புலி ஆடிடவா. 61

சுடர்விடும் வெள்ளித் தொழுகையர் சூழ்ந்து
தொழுதிட இருப்பதனால்
துயில்விழி இன்மை தொண்டர்நல் லாழித்
துள்ளிசைத் தோத்திரத்தால்
அடிமனம் இருகட் டழகியர்த் தழுவும்
ஆவலிற் குழைந்திடலால்
அள்ளுசெந் தமிழின் அழகிய கவிக்கும்
அமுதினை ஊற்றுவதால்
தடமலர்க் கண்ணான் தன்னைநீ ஒத்தல்
சரிவரக் கண்டதனால்
தன்னுடன் ஆட உன்னையும் அழைத்தான்
தண்தவப் பயனுடையாய்
குடந்தயிர் பால்நெய் குங்குமம் தேன்தீங்
கொழுங்கனிச் சாற்றினிலே
குடமுழுக் காடுங் கோவுறை இணுவைக்
கோயிலம் புலியாடவா. 62

இருள்மறைத் திடுங்கால் இடையிடை ஒளித்தல்
இந்திரன் அன்புடைமை
இரவலர்த் தாங்கும் இன்னரு ளாலே
எல்லொளிப் பொன்முகத்தால்
திருமன மழலைத் திகழ்ந்தொளிர் வதனால்
சீதளக் காட்சியினால்
சேந்தனெம் பெருமான் தேர்ந்தறிந் தொப்புச்
சிறுகரத் தாலழைத்தான்
வருதுயர் யாவும் மலமறு தீர்க்க
வருவன இதையறிந்து
வரந்தர நோற்று மனபலந் தேடி
வருத்தம்வெல் பக்குவத்தர்



திருவுளச் சீட்டால் சேய்சித்தங் கண்டு
தீர்ப்பென ஏற்பவர்ஊர்த்
திருப்பதி இணுவைச் செறிமணல் வீதித்
தேர்ந்தம்பு லீயாடவா. 63

## பேதம்

ஒருமுகங் கொண்டோய் ஒண்முகம் ஆறாய்
உள்ளவன் எம்மழகோன்
உறுமறு கொண்டாய் உன்னிடம் மாசாய்
ஒன்றிலன் நம்மெழிலோன்
ஒருகலை தினமும் ஒழிந்துபின் வளர்ந்தே
உலைபவன் நீசெய்யனோ
உள்ளதே உளவா றோங்குசத் தியமாய்
உயிர்க்குலங் கழுவல்செய்வோன்
வருகஎன் றுன்னை மகிழ்ந்தாறு வாயால்
மலர்க்கரங் கொண்டழைத்தான்
வள்ளியந் தோட்டம் மண்டுசெங் கிழங்கை
வாஞ்சையாய்க் கல்லிவந்து
தருபவர் பொங்கி தவஇணு வைக்கோன்
தளதள மண்டபத்தில்
தழுவியே ஆடுந் தவப்பயன் காண்பாய்
தண்ணம்பு லீயாடவா. 64

வருகையில் போகாய் வருகிலை போங்கால்
மாடிறை சூத்திரம்போல்
மயில்மிசை ஏறி மகிழ்சுதந் திரனாய்
வந்துசென் றாடுமெங்கோன்
நரித்தக்கன் சாபம் நலித்திட நலிவோய்
நலிக்கரும் இறைமைகொண்டு
நான்முகற் கூட நறுக்கெனுங் குட்டு
நல்கிய இறைவன்எஞ்சேய்
பெருமையில் ஒல்காப் பேதையுற் கிரங்கிப்
பேரருள் முருகழைத்தான்
பெற்றது போதும் பிடிசாபம் சிகிச்சைப்
பிழையணு காஇணுவைப்

பெருந்தளி நிரம்பும் பெருங்களி யுணர்ந்து
பிறையம்பு லீயாடவா
பேரிறை நாமென் பிழையணு காஊர்ப்
பிறையம்பு லீயாடவா. 65

இரவினில் மட்டும் எழிலொளி பெய்வாய்
எற்பகல் வெளிறிடுவாய்
இரவினி லன்றி எற்பகல் தனிலும்
இன்னொளி பொங்கும்நஞ்சேய்
பெருவயி றென்று பிள்ளையார்ப் பழித்துப்
பெற்றசா பத்திழிந்தாய்
பிள்ளையா ரண்ணன் பேணிடுந் தம்பி
பிறங்கொளி நங்கடம்பன்
அருகினில் வன்னி அகில்கடம் புபன்னீர்
அளையுஞ்சந் தனமரங்கள்
அரளிசண் பகம்நெஞ் சள்ளிடுங் கமழ்பூ
அடவிவிஞ் சிணுவைக்கந்தன்
கருதிலன் ஒவ்வாக் களங்கங் கைநீட்டிக்
களித்திட அழைத்தமர்ந்தான்
கண்டிட மண்ணில் களிமிகும் விண்ணூர்
கனிந்தம்பு லீயாடவா. 66

## தானம்

கண்கவர் புள்ளிக் களிமயில் மீது
காத்துன்னை ஆடவைப்பான்
கமலப்பூ முகங்கள் கருவிழி கனிந்து
களித்தீவன் நயனதீட்சை
கொண்டையஞ் சேவற் கொடிபிடித் தாடக்
கொடுத்துன்னை உருகவைப்பான்
கொடிபிடி கைகள் கூத்திடுங் கால்கள்
கொள்ளென்று தந்தருள்வான்
தண்டையங் கால்கள் சதங்கைகள் பாடச்
சாரலங் குரவையிட்டுத்
தலையசைத் தேநீ தட்டிடத் தாளம்
தனைமறந் தேசிரிப்பான்
வண்டலம் பாவை சிறுமியர் வைக்கும்
மணல்மலி தெருக்களண்டும்



வளர்இணு வைக்கோன் வாவெனச் சொன்னான்
மகிழ்ந்தம்பு லீயாடவா. 67

ஆவணித் திங்கள் அணைசதுர்த் தியிலே
அடியரேச் சுண்டுன்சாபம்
ஐங்கர அண்ணற் கெஞ்சியும் நீக்கி
அருள்செய்வன் அத்தினொடு
பாவியத் தக்கன் பகர்ந்தசா பத்தின்
படியினுந் தேய்ந்திழுக்குண்
பழியொழித் தருளப் பரமன்நல் தந்தை
பணிந்துடன் வரம்பெறுவான்
தூவியஞ் சேலைச் சுடர்த்திரை மாடம்
துன்னுமா ளிகைகள்விட்டும்
சுகந்தரு கோயில் தூநிழல் தூங்கத்
துண்டினை விரித்துவீழ்வோர்
ஓவியக் காட்சி ஒன்றிணு வைக்கோன்
ஒண்கரங் கொண்டழைத்தான்
ஓங்கிய விண்ணை ஒய்யென நீங்கி
உவந்தம்பு லீயாடவா 68

## தண்டம்

மறைகளுங் காணா வல்லப மிக்கோன்
வல்லசு ரர்ச்செகுத்தோன்
மதித்தொடுங் காத மலரயற் குட்டி
வன்சிறைப் பூட்டிவைத்தோன்
வெறிகொடு வந்த வேடரைக் கொடியில்
வெஞ்சேவல் கூவவீழ்த்தோன்
வெகுண்டெழுந் தானேல் வீழ்த்துவன் உனையும்
விரும்பியச் சேயழைத்தான்
வறியவ ரென்று மயிலவன் அருளை
மன்னிடா அவர்களையே
வழமையாய் எள்ளும் மாண்பதி இணுவை
மண்டிய தேவர்களும்
செறிபூத கணங்கள் சிவனுமை வீரர்
சித்திவி நாயகரும்

சேந்தன்தொண் டருமே சேர்ந்திங்கு காணத்
திகழ்ந்தம்பு லீயாடவா. 69

உலகியல் பற்றில் ஒன்றும்ஒட் டாமல்
ஒருவிய நெஞ்சுடையோர்
உடன்சதி சேய்கள் உறுதுணை வேலென்
றோர்ந்த சுதந்திரராய்
நிலவில்லக் கடன்கள் நெஞ்சமொட் டாமல்
நிகழ்த்திளக் கணமுமுளம்
நின்மலப் பூங்கால் நிறைநறை மாந்தும்
நீடிய ஆனந்தராய்
மலபரி பாகம் வளர்க்கவேல், ஞானம்
மன்னிய தகைமையினால்
வந்துசற் குருச்சேய் வழங்குமெய்ஞ் ஞான
வானுயர் தீட்சைபெற்றோர்
பலப்பல ரேத்தும் பரன்சின வாமுன்
பயபக்தி கொண்டவனாய்
பசும்மயில் மேலான் பதியிணு வைக்கண்
பறந்தம்பு லீயாடவா. 70

## 8. சிற்றில் பருவம்

குலம்விட்டு வேறு குலத்தாளவ் வள்ளிக்
குறத்திப்பின் சென்ற கதையைக்
குறையாகப் பேசிக் குளிர்ந்தோமோ எங்கள்
குருவாகுங் குழந்தை அழகா
பொலந்தெய்வ யானைப் பொற்பாவை தன்னைப்
பொலிதார மாக மணந்தும்
புலந்தாயவ் வள்ளிப் புனக்காமக் கிழத்தி
புகற்கென்றும் நாங்கள் பழிக்கோம்
தலங்கோடி உண்டித் தரணிக்கு ளுன்னைத்
தமிழ்பாடி யாடி வணங்க
தவிப்பார்கள் உன்றன் தரளங்கொள் மேனி
தனைக்காண என்றுஞ் செல்வோய்
மலஞ்சாய ஆன்ம வளஞ்சேர நோற்று
மகிழ்மக்கள் இணுவைச் சேயே



வைரங்கள் போல மலியுன்றன் வீதி
மணலில்நம் சிற்றில் சிதையேல். 71

வியப்பாக உன்றன் விழாக்காலம் வந்து
மிகத்தாழ்வி னோடு நடப்போம்
விளையாடி ஓடி மிகும்பத்தர் ஏத்த
விளைத்தோமோ ஊறுன் தளியுள்
நயப்பாக உன்றன் நறுங்கோலங் கண்டு
நாமுன்னைச் சுற்றித் தொழுவோம்
நவின்றின்னல் வார்த்தை நல்வாக னங்கள்
நடித்தோமோ ஏறி மிதித்தே
உயத்தானே எங்கள் உயர்தந்தை தாயர்
உனைப்பூசை கண்டு தொழுவார்
ஊர்வம்பு பேசி உன்கோயில் தூய்மை
ஊறெய்தச் செய்வ துண்டோ?
பெயலார்ந்த வெள்ளப் பெருவீதி மண்ணில்
பெண்மக வினங்கள் சேர்ந்தோம்
பிழையாத பக்திப் பெருமக்க ளிணுவைப்
பிள்ளாய்நம் சிற்றில் சிதையேல். 72

குமரிப்பொன் தீர்த்தம் குளித்தாடி முத்தி
கூர்நோன்பு செய்ய வந்தாய்
குறிஞ்சிக்குள் வள்ளிக் கொடித்தந்தை மாட்டுக்
கூறுன்பொய் பற்றிப் பறையோம்
அமரர்க்கு மீட்சி அளிக்கும்உன் கீர்த்தி
அழகாக எங்கும் உரைப்போம்
அடிமைக்குக் கஞ்சி அரையாடை நல்கும்
அழிமாந்தர் போல அன்றி
உமர்த்தொண்டர் உண்மை அடியர்க்கு மண்ணில்
ஒளிகாலுஞ் செல்வம் வழங்கி
ஒப்பற்ற கூலி உச்சமான முத்தி
உவந்தீயுங் கருணைக் கடலே
எமைக்காக்கும் இன்ப எசமான வேல
இணுவையம் பதியில் வளரும்
இளஞாயி றாறில் இருள்வண்டு பூத்த
எழிலாளஞ் சிற்றில் சிதையேல். 73

அழகன்நீ ஆடும் அபிடேகம் வேண்டும்
அருஞ்சாதி இளநீர்த் தென்னை
அரும்பாக்கு மரங்கள் ஆக்கள்செங் கரும்பு
அந்தோடை மாது ளைகள்
செழுவாழை பலவு தேன்மாக்கள் ஓம்பும்
திருவூரெம் மிணுவில் சிறுவா
தீத்தந்தை தக்கன் சிந்தைக்கு மாறாய்த்
திரிநார தன்சொல் கேட்டோர்
வழிபாடு செய்து வான்முத்தி பெற்ற
வழிநாடு மகளிர் இணுவை
மயிலாடுஞ் சேயே மணல்வாரி நாங்கள்
வந்திங்கு கூடி அமர்ந்தோம்
ஒளியாடும் பூக்கள் உன்காலில் வைத்த
உன்னன்பர் சிற்றில் சிதையேல்
உன்வீதி தன்னில் ஒளிர்பள்ளி கற்கும்
உன்னன்பர் சிற்றில் சிதையேல். 74

தீவர்த்தி தாங்கித் திகழ்சங்கம் ஊதித்
திருக்கீர்த்தி பாடி அமுதுத்
தேன்பொங்க லிட்டுத் திருமாலை கட்டித்
திருமண்ட பங்கள் கழுவி
தேவர்க்கு நேர்ந்த சிவநிந்தைத் தண்டம்
சேராத வண்ணம் பணிந்தும்
சீலங்கொள் நெஞ்சர் சிவநிந்தைத் தக்கன்
தீயாய் எதிர்த்த தீசி
மேவற் கொணாத வெறிப்பக்தி தீரம்
விளைகின்ற தன்மை பூண்டும்
விரிதோளில் உன்னை விருப்போடு காவி
வெள்வீதி சுற்றுந் தொண்டர்
கோவிற்குள் மிஞ்சுங் கொழிசீர்நல் லிணுவைக்
குடிகள்உன் மோட்ச உலகம்
குடியேறும் ஆவல் கூர்த்தார்கள் அன்புக்
குருவேநம் சிற்றில் சிதையேல். 75

தண்ணீர்ப்பந் தல்கள் தகுமன்ன தானம்
சால்தொண்டு செய்தும் உன்றன்
தழைபுல்லின் வீதி தனைச்சுத்தஞ் செய்தும்
சருகள்ளி மஞ்சள் தெளித்தும்



புண்ணாகக் கைகள் பூந்தோட்டங் காத்தும்
பூசைக்குப் பூக்கள் அளித்தும்
பொன்னள்ளி வீசிப் புதுமண்ட பங்கள்
பொலிகோவிற் பணிகள் முடித்தும்
விண்ணோரின் தஞ்ச வேலன்உன் கீர்த்தி
விரிகந்த புராணம் படித்தும்
விளக்கிப் பயன்கள் விருப்பா யமர்ந்து
விழிநீர் பொழிந்து கேட்டும்
உண்ணாமல் நோற்றும் ஓங்கிணுவை வேந்தன்
உன்பாத மோட்ச உலகம்
உறுங்காதற் குரவர் உவப்போடு காக்கும்
உயர்பெண்கள் சிற்றில் சிதையேல். 76

உனக்கன்பர் நல்கும் உயர்காணிக் கைகள்
உறுபக்தர் நல்கும் நிலங்கள்
ஒருபோதும் ஆள எண்ணார்நம் ஊரர்
உன்தாளே போற்றும் அடியார்
எக்கோயி லுக்குள் வருமுன்றன் ரூப
வார்தேனி லாடுங் களியர்
"வைத்தேத்து பூக்கள் வணங்கையன் கால்கள்
வைகறைகள் மாலை" என்று
கனிச்சொல்லி லூக்குன் காந்தர்நம் பெற்றார்
களித்துன்றன் வீதி மணலில்
கணக்கின்றிக் குந்திக் கவின்வீடு செய்வோம்
கயிலாய நாதன் புதல்வா
வினைத்தீயன் தாரு கனைமாமன் விஷ்ணு
வெல்லரிய வீரன் தன்னை
வீழ்த்திட்ட வீர மிகுந்தொண்டர் இணுவை
வேந்தேநம் சிற்றில் சிதையேல். 77

நெல்லாலை ஓசை நெசவாலை ஓசை
நெய்யாலை ஓசை பண்டு
நிமலன்சொல் வேத நிறையாக மங்கள்
நெஞ்சாரக் கற்கும் பள்ளிச்
சொல்லோசை நீரைச் சொரிஎந்தி ரங்கள்
துடியோசை சுருட்டு வெட்டித்
துண்டாடும் ஓசை சுகவாத்தி யங்கள்
சுவையோசை மண்டு மிணுவைக்

கல்லால நீழற் கவின்யோகி செல்வ
கடவுள்இப் பாரில் கொஞ்சம்
களிவைத்துத் துன்பம் கடலாக வைத்தல்
கருணையோ என்று குழம்போம்
இல்லாத தொடக்கம் எமைப்பற்றும் பாச
இடர்மலந்த னாலே துன்பம்
இவைவீழ்த்தி இன்பம் ஈவைநீ என்றே
ஏத்தெங்கள் சிற்றில் சிதையேல். 78

பிருந்தைப்பேர்க் கீர்த்திப் பேரழகுப் பெண்ணில்
பேரிச்சை கொண்ட திருமால்
பிறன்பெண்டிர்க் கூடற் பெருங்குற்றம் பாரான்
பித்தாகி மோக வெறியால்
கரந்தன்ன வள்தன் கணவன்கொள் தோற்றம்
களவாக அவளைத் தழுவிக்
களிகொண்ட னாளைக் களிவெள்ள மாட்டிக்
கபடம் வெளிக்கப் பதைத்த
பிருந்தைதன் சாபப் பெருந்தீட்டை ஏற்றுப்
பிறந்தா னிராமன் சீதை
பிறன்கொண்டு போகப் பேயா யலைந்தான்
பிழைசெய்யில் இறையும் அழிவே
அருந்தத்து வத்தை அறிந்தோர்ஓர் குற்றம்
அணுகாது வாழும் இணுவை
அரும்பக்தர் எங்கள் அருட்பெற்றார் காக்கும்
அழகாநம் சிற்றில் சிதையேல். 79

பார்முற்றும் அண்டப் பரிபூர்ணம் ஒன்று
பதிமட்டும் என்ப துணர்ந்தோர்
பழிஊக்க யார்க்கும் பலவீனம் ஒன்றுட்
பகையாக நிற்ப துணர்ந்தே
கூர்கொங்கை மாதர் குவிசெல்வம் பூமி
குலவாசை கோடி தமில்தாம்
கூசாமல் கோடி பழிசெய்யத் தூண்டிக்
குழிவீழ்த்தும் அவைகள் தெரிந்தே
யார்யார்க்கும் உய்தி அருள்வோயுன் கால்கள்
அணுகாத வைகள் இனிமேல்



அரணாக நிற்கும் அருண்வேண்டி உன்றன்
அடிமீது நெஞ்சம் அழுத்தி
ஊர்தோறும் நின்றும் உரவோருன் பக்தர்
ஓடோடி வந்து தொழுவார்
ஒளிமாட வீதி உயரிணுவை வேலா
உன்அன்பர் சிற்றில் சிதையேல். 80

## 9. சிறுபறைப் பருவம்

உன்னைநி னைத்துநி னைத்த விசைப்பினில்
உள்ளம் நினைத்ததெல்லாம்
உந்த அளிப்பவ உட்கு மனத்துயர்
ஓடிட வைப்பவனே
இன்ன பெயர்ப்பட என்னைய ழைத்தமர்
என்றென்னுள் சொன்னவனே
எண்ணிடும் வேளைகள் ஏறு மயில்மிசை
என்னுள் ஒளிர்பவனே
முன்னை வினைப்பயன் மூளு நுகர்ச்சியில்
மூழ்கு வெறிப்பினிலே
முத்தி கெடுத்திடும் மோசப் புதுவினை
முற்றல் தடுப்பவனே
துன்னு மொலிக்குலத் துள்ளிடுந் தொண்டகம்
தூக்கினை கைகளினால்
துந்துமெ னப்பறை தொட்டொலி கொட்டுக
தொல்லிணு வைக்குகனே. 81

ஈரெழில் மங்கையர் எய்திட உன்னையே
இன்தவம் பூண்டிருந்தார்
ஏங்கமு தவல்லி சுந்தர வல்லி—மால்
ஈந்தப சுங்கிளிகள்
கூரெழில் வேலனே ''கொள்கவரம்'' நல்கிக்
கோதையர்ப் புல்லியவா
கோடி கொடுக்கினுங் கொஞ்செழிற் கற்பினைக்
குன்றவிடில் அழிந்தேன்
யாரையென் அன்புளம் அன்று நினைந்ததோ
அன்னவ னையடைய

ஆண்டவ னேயருள் அல்லது கொல்லென
அங்கனி வஞ்சியர்கள்
வீரியக் கற்பினர் விஞ்சிய வேண்டுதல்
வெல்ல வருள்சுரந்த
வெற்றிமு ழக்கென வீங்குப றைகொட்டு
விண்ணினு வைக்குகனே. 82

மைகறை போல்நிறம் வால்மிட றெய்திட
வானவர்க் காத்தருளி
மந்தர மத்திடை வண்கடல் மீமிசை
வந்தநஞ் சுண்டவர்சேய்
பொய்கறை தேய்ந்தொளிர் புண்ணிய நெஞ்சுகள்
பொற்றளி புக்கெழுவோய்
பொங்கருள் மாமழைப் பூப்புன லாடுநர்ப்
பொழிபவ நீளிளமை
வைகறைப் பூசையை மாண்புறக் காண்பவர்
மங்கல வாழ்த்திசைப்போர்
மாந்தர்பல் கோடியே மாறி எதிர்க்கினும்
வள்ளல்நீ ஏற்பசெய்வோர்
தொய்வறு பக்தியர் தொல்பதி வாழ்வோருன்
சொற்படி ஆடிடவே
துந்துமெ னப்பறை தொட்டொலி கொட்டுக
தொல்லினு வைக்குகனே 83

கந்தம லர்வைத்துன் கால்கள் வணங்கிடும்
காதல்மி கும்புதல்வர்
காந்தன்நீ யேயுண்மைக் காத்தருள் தந்தைஎம்
கர்த்தன் எனும்புதல்வர்
சொந்தம் தனக்குண்மைச் சொத்தென உன்னருள்
தோத்தரிக் கும்மனையாள்
துய்த்திடத் துய்த்திட உன்நினை வேதரும்
சொர்க்கசெல் வஞ்சுகங்கள்
சுந்தர மாயுன்றன் சுந்தர எண்ணமே
தூண்டத்தற் காண்பவர்க்குச்
சொக்கிளந் தோற்றம்உன் தொண்டருக் கீபவ
சோர்வில் நிமிர்ச்சியனே
தொந்தி பருத்திடச் சூர மனங்கொண்டு
சோரஞ்செய் வோர்திருந்த



துந்துமெ னப்பறை தொட்டொலி கொட்டுக
தொல்லினு வைக்குகனே. 84

உள்ள புவிச்சனம் உன்னை வணங்கியுன்
ஓங்கருள் பெற்றுவிடில்
உத்தம முத்தியை உற்றுப்பல் கோடிபேர்
ஓடுவர் மோட்சம்பூமித்
தள்ளரும் பாரமும் சாய்ந்திடும் இந்தநல்
சால்புறு மார்க்கம்நம்பார்
தாஒரு புத்திர பாக்கியம் என்பவர்ச
சாந்தி தரஇயலார்
பிள்ளை குறைத்துமே பெண்மை அழித்துமே
பிரமனை மட்டுமல்ல
பேரிறை யுன்னையே பேயெனப் பார்க்குமப்
பேயரை எள்ளியநாம்
துள்ளுங் களிப்புடன் சொர்க்க சுகம்பெறல்
தொல்புவி கண்டிடவே
துந்துமெ னப்பறை தொட்டொலி கொட்டுக
தொல்லினு வைக்குகனே. 85

புண்ணிய மண்ணெனும் பொன்னினு வைதரும்
புத்திரர் புத்திரியர்
பொன்விலங் கில்லறம் பூண்டய லூர்களில்
போய்ப்புக்கு வாழ்கையிலும்
நண்ணிநின் றன்னிய நாடு நகர்களில்
நற்றொழில் செய்கையிலும்
நாடி யழைத்திட நண்ணிய வர்க்கங்கு
நல்லருள் தூர்ப்பவனே
கண்ணிமை யாமலுன் கால்தொழு விண்ணவர்க்
கண்ணிமை போற்புரப்போய்
கட்டஉன் கோயிலை கல்மணல் உன்னருட்
கால்நிதி யாய்ச்சுமப்போம்
துண்ணெனு முன்மணி தொக்குநின் றேத்தியுன்
தூயபூ சைக்களிப்போம்
துந்துமெ னப்பறை தொட்டொலி கொட்டுக
தொல்லினு வைக்குகனே. 86

ஆறடி மண்ணிலுன் ஆக்கை எரிந்திற
ஆவியெங் கேயடையும்

ஆகியே பக்குவம் அனுபவித் தெஞ்சிய
அக்கன்மப் பேறடைய
வேறொரு மெய்புக்கு மீண்டிடு வாயிங்கு
மீண்டுமீண் டிப்படியே
வீணலைச் சற்பட வேண்டிய தோசற்று
விட்டு மனத்தவிப்பை
ஆறுநி தானமாய் அமர்ந்து நினையென்னை
அறைதல்போல் ஆறுமுகன்
ஆனச ரவண ஆன்மாக்கள் தூங்குவ
அகிலமாந் தர்தமக்கு
தூறுக்குள் புள்ளெனத் தள்ளியே பாய்ந்துடன்
தூக்கங் கலைந்திடவே
துந்துமெ னப்பறை தொட்டொலி கொட்டுக
தொல்லிணு வைக்குகனே. 87

பத்தென நூறெனப் பக்தர்கள் கூடியே
பாற்செம்புக் காவடிகள்
பாய்செதில் மேனியர் பாய்ச்சுவேல் வாயினர்
பைங்கமழ் சந்தனத்தர்
தத்தித்தை தாவெனத் தாளமும் மேளமும்
சன்னதங் கூட்டிநிற்க
தத்திப்பாய்ந் தாடியே சந்திகள் ஆடியே
சார்குவர் உன்தளியில்
மெத்திய பத்தியின் சித்திர உத்தியர்
விஞ்சிணு வைப்பதியில்
வேற்றுநாட் டன்பர்கள் வித்தகர் தத்துவர்
விருந்தயர் வோய்தினமும்
சுத்தம னத்தருன் தொண்டர்க ளிப்புறத்
தொண்டக மாம்பறையில்
துந்துமெ னப்பறை தொட்டொலி கொட்டுக
சொக்கழ குக்குகனே. 88

இம்மண்ணில் யாருளர் என்னைவெல் லவெனும்
எண்ணம் மிகுந்தவராய்
எந்தையே நாம்பட்ட இன்னல்கள் போதுமே
எல்லாமவ் வாணவத்தால்



பொம்மைகள் நாம்வெறும் பொம்மைகள் எம்மையுன்
பொற்கரத் தால்பிடித்துப்
புண்ணியப் பாதையில் போக்கியிந் நிலைவரப்
போம்பிறப் பெத்தனையோ
நம்முள் இனியேனும் நாச மலம்எழா
நன்னிலை காத்தருள்வாய்
நம்செய லாவது யாதுமில் லையுன்றன்
நாதப் பறைகளேநாம்
சும்மா இருந்திடு சொல்லற என்னுமச்
சுந்தரச் சொல்புரிந்தோம்
துந்துமெ னப்பறை தொட்டொலி கொட்டுக
தொல்லிணு வைக்குகனே. 89

ஐந்துமொ டுங்கிட ஐயநின் நாமமே
ஆறிய மர்ந்திசைப்போர்
அர்ப்பணம் உன்றனுக் காகளச் செய்கையும்
ஆற்றி நிறைந்திருப்போர்
சிந்தை தெளிந்திடுந் தெய்வபு ராணங்கள்
தெள்ளிதின் கேட்டிருப்போர்
திண்சரி யைசெய்வோர் தீர்த்தங்க ளாடுநர்
தீந்திமி காவடியோர்
உந்தும கிழ்வினில் உன்புகழ்த் தோத்திரம்
ஓதி நயந்திருப்போர்
ஓய்ந்தம லக்குலம் ஊடுரு வாவணம்
ஓந்தி மனம்விழித்தோர்
சொந்த முனக்கெனச் சொக்கி யிருப்பவர்
சுத்தர்நின் பேறடைய
துந்துமெ னப்பறை தொட்டொலி கொட்டுக
தொல்லிணு வைக்குகனே. 90

## 10. சிறுதேர்ப் பருவம்

காடைக் குருவிகள் கண்ணுக் கினியநல்
காவிய முட்டைகள் இட்டுவைத்துக்
காதற் சிறகிடைக் காக்கும்பைம் புல்வெளிக்
கான மரங்களில் பட்சியினம்

பாடிப் புகழ்ந்துயிர்ப் பக்குவங் கேட்டிடப்
பாலித்த ருள்இங்கு பார்த்திருப்போய்
பாழிற் கிடந்துழல் பாவியர் வாழ்வினில்
பாசமு டன்அழைப் பார்களெனில்
ஓடிப் பரிந்தருள் ஊற்றி நறுந்நிழல்
உய்க்கும் இணுவையில் ஓங்கரசே
ஒன்றடி மன்றடி யாக உதைத்தெழும்
உந்திடர் ஓர்நொடித் தீர்த்தருள்வோய்
தேடித் திரிந்தவா செந்தினைச் சாரலில்
சிறுக்கியைச் சேல்விழி மானையன்று
சின்னஞ் சிறுமணிச் செம்பொன் கமழ்மலர்த்
ம்தசுச் சிறுதேர் உருட்டுகவே. 91

பூசைக்காம் பால்தரும் புண்ணியர் வீட்டிற்பால்
பூசகர் வேடத்தில் போய்வாங்கியே
பூட்டிய கோயிலுட் புக்குவைத் தோய்சுகப்
புத்திரப் பேற்றினை யாசித்தவர்
ஏசப்ப டுங்குணம் இற்றிடத் தன்னுள்ளே
ஏத்தியுன் கால்கள் கதறியவன்
இன்னல்செய் யாமலி ருந்துமி டர்தரும்
ஈனர் புரியும் இடும்பைகொல்ல
பாசப்பு தல்வருன் பாதம் பணிகாதல்
பாலவ யதிலி ருந்தேபெற
பக்குவ மாய்த்தொழும் பக்தர்கட் கும்வரம்
பாலித்தி ணுவையைப் பாலிப்பவா
காசிகாஞ் சிகதிர் காமம்ரா மேஸ்வரம்
கைலாயம் செந்தில்கண் டேத்துபலன்
கைதொழ இங்களி கைவளச் சேயேபூங்
கைதொட்டுப் பொன்தேர் உருட்டுகவே. 92

மண்ணவர்க் குநானோர் மன்னன் பணக்காரன்
வல்லன் அடிமைகள் ஏத்துபவன்
மாலை மதிப்புகள் வள்ளல் புகழ்ச்சிகள்
மன்னவைச் செல்வாக்கு மண்டியவன்
திண்ணியன் என்றுப கட்டித் திரிவதே
சிந்தனை யாகப்ப றந்தலையார்
சிந்தனை பேச்சுச் செயல்கண மேனுமே
தெய்வம்நீ எள்ளுவ தாயிருக்கா



வண்ணமே என்னையென் மக்கள் மனைவியை
வழிநடத் தென்போர் இணுவைச்சேயா
மாடி மனைபணம் மாடாடு பெண்டுமார்
வாகனம் எடுபிடி ஆசைகொல்லும்
தண்ணருள் மூலிய சால்மயில் மேலவ
சார்ந்த இடந்தொறுந் தந்தைசிவன்
தாள்தொழக் கோயில்கள் தக்கபடி வைத்த
தாழ்மைய தங்கத்தேர் ஓட்டுகவே. 93

அன்றுன்றன் சந்நிதிக் கான கருவறை
அன்புடன் கட்டிடும் வேளையிலே
அப்பணிக் காய்வந்தே அங்குறும் ஓர்கல்லின்
ஆழ்பொந்தி லேயணிற் குஞ்சிருக்க
ஒன்றிளம் பிஞ்சுயிர் உன்பொருட் டாகவே
உற்றிடல் கூடும் மரணமென்றே
ஊக்கோர் திருப்பணி யாளனின் ஓர்கனா
ஒதுக்கிவை இன்னகல் என்றவனே
சென்றுன்றன் வேட்டைத் திருவிழா தோரணச்
செய்பந்தற் சிங்கார வீதியெல்லாம்
தெய்வீகம் பாய்ச்சிடுஞ் சீரிணு வைக்குச
தேகஞ் சிலிர்க்குமுன் கோயில்புகுந்
தென்றலுன் பூசையிற் சிந்திடுஞ் சந்தன
செவ்வூது பத்தி திகழ்அகிலின்
சிந்தையள் ளும்மணஞ் சீரூர்ப்ப ரப்பிடும்
சேயன் திகழ்தேர் உருட்டுகவே. 94

பண்டொரு கூத்திங்கு பார்க்க வந்ததனிப்
பையனின் செம்பொன்னின் சங்கிலியைப்
பற்றிப் பறித்திடக் கள்வர் விரட்டவே
பையன் புகுந்துன்றன் காலில்அழ
அண்டுந் திருடர்க்குன் ஆலயஞ் சாமத்தும்
ஆள்பலர் நிற்பதாய்க் காட்டிஅவர்
அஞ்சிக் கலைந்திட அப்பையன் காத்தவா
ஆலயம் மூழ்கவோர் மாரிவெள்ளம்
தண்டு வலித்தையர் தந்த பனம்பழந்
தன்னை நைவேத்தியங் கொண்டவனே
தத்தம் துயர்பிணி சாய்ந்திட நேர்த்திவை
தக்கவர் பெற்றுன்றன் தண்ணென்வரம்

மண்டபம் முட்டவே வாகனா திதரும்
வாழிணு வைப்பதி மன்னவனே
வண்சுடர்ப் பொன்மணி வாச மலர்புரி
மங்கல ஒண்டேர் உருட்டுகவே. 95

பால்தந்துன் பூசைக்குன் பச்சைப் பசளியைப்
பைங்கறி யாக்கப் பறித்துச்செல்லும்
பண்டையோர் தொண்டர்க்குப் பகடி புரிந்திட
பாங்கா யவர்கன வில்எழுந்து
பால்சமம் பசளியென் றேபகர்ந் தோய்நறும்
பால்கமழ் வாயிணு வைக்குழந்தாய்
பாசத்து டன்ஆறு பக்குவக் காலமும்
பண்ணிடப் பூசை புரிந்தருள்வோய்
வேல்சமம் முத்திக்கு வீரிய வித்தென
மெய்யடி யார்தொழும் வேற்சிறுவா
வேடர் குலத்தினை வீழ்த்தி வள்ளிமூலம்
மீண்டும் உயிர்த்தெழ வைத்தவனே
நூல்பல கற்றுமே நோய்மலந் தீர்த்திடும்
நோக்கம் பெறாதவர் உன்சுடர்வேல்
நோக்கிய மட்டிலே எய்துவர் நுண்மையாய்
நூல்கடந் தோய்தேர் ஓட்டுகவே. 96

மண்டபத் தில்தினம் மாலைநே ரங்களில்
மண்டும் முதியராம் பக்தர்குழாம்
வான்பேறு பற்றியும் வள்ளலுன் பற்றியும்
வண்ணக் கதைகள் மகிழ்ந்திருப்பார்
அண்டிய தோட்ட அகல்வெளி யில்குடில்
ஆக்கிச் சிலர்தவம் ஆழ்ந்திருப்பார்
அற்புதங் கள்பண்ணி ஆல்புளி ஒன்றிய
அண்ணமார் இளந்தாரி ஆலயவூர்
பெண்டுபிள் ளைநலம் பேணத்தன் பொன்நிலம்
பிள்ளைப்பங் காகக் கொடுத்துநெஞ்சைப்
பித்துறுந் தெய்வப்பங் காகப் பிரித்தளி
பீடிணு வைப்பதிக் காவலனே
தொண்டுக் குறுந்தூய்மை தூய்மைக் குறும்முத்தி
சொர்க்கப் பரிசாய் அளிப்பவனே



டுண்டுண் எனநவ வீரர் துடிகொட்டச்
சுந்தர சுந்தரத் தேருருட்டே. 97

மஞ்சஞ் செய்யவரு மாறன் றழைக்கையில்
மாட்டோமென் றவண்ணத் தச்சர்குழு
வாரமொன் றுள்தோணி வள்ளங்க ளேறியே
வந்திறங்கி மஞ்சஞ் செய்யவைத்த
கஞ்சம லர்அடிக் கட்டழ குக்குக
காத்தெம் மிணுவையை ஆள்பவனே
கன்னித்தமிழ் சைவக் கல்வியை ஊருக்குள்
காத்தோர்வா ழையடி வாழையாக
வஞ்சமி லாஇற்றை வாரி சறிஞர்கள்
மாணவர்க் காணாராய் வாடவிட்டு
வாலிபர் இக்கலி மன்னர்க ளாம்நிலை
மாறிட நோற்போர் மகிழ்ந்திடவே
மிஞ்சச்சை வந்தமிழ் மீட்டும்ஆ தீனங்கள்
வேண்டிப் படைத்துன்றன் ஆட்சியிலே
மென்கரந் தொட்டிந்த வீங்கொளிப் பொன்னெழில்
விஞ்சுஞ் சிறுதேர் உருட்டுகவே. 98

சத்திரங் கள்மடம் சாருப கோயில்கள்
சன்னதச் சோதிடர் ஆச்சிரமம்
சால்சிவ பூசையர் சாணிப் பசுங்குடில்
சாந்திஊஞ் சல்மடத் தண்வனத்தோய்
இத்திறன் உன்னருள் என்றறி யாவண்ணம்
எள்ளிரு ளாணவம் போடுந்திரை
என்னுங் கிரவுஞ்ச இன்னல் மலைதனை
எங்குடித் தெய்வமுன் வேல்கிழிக்க
முத்தொளிர் வேலுடன் மொய்சிறைத் தோகைமேல்
மோகனந் தாங்கியே ஓங்குபவா
முந்தீயும் இன்றுமுன் மூழ்கித் திருப்பணி
முற்றுநர்க்கு முத்தி ஈபவனே
சித்திரத் தேரினில் சேர்ந்துலாச் செல்லும்நீ
சிற்ப எழில்ரதத் தோங்கிவிட்டாய்
சீரிணு வைத்தமிழ் தேர்சங்கத் தென்றுமே
தேன்தலை வாதேர் உருட்டுகவே. 99

மாசறு நெஞ்சினர் மாசறு காட்சியர்
மானுட வேலர்தேன் வாரியனார்
மங்கல மானவர் மாமருந் தானவர்
மந்திர வாய்மொழி நோக்குடையார்
தேசுறு மேனியர் செய்யநின் நீறொளிர்
தேசுறு நெற்றியர் தீர்வினையார்
தீயையுந் தண்பனி செய்திட வல்லவர்
தீவிர தெய்விக சக்தியுளார்
ஈசுர காதலைத் தீட்சையில் ஈந்திடும்
இன்குரு உன்புக ழேந்தியவர்
ஏகன்அ னேகன் எனும்படி யானவர்
இன்முத்தி எய்தத் தருங்குமரா
ஓசைகள் யாவினும் ஓங்கி ஒலித்திட
ஓம்முரு காஎனும் ஓரொலியே
உள்நெகிழ்ந் தேத்துநர் ஓங்கிணு வைக்குகன்
ஓம்திகழ் பொன்தேர் உருட்டுகவே. 100

**இணுவை முருகன் பிள்ளைத்தமிழ் முற்றிற்று**



உ

# கச்சிக் குமரகோட்டக் கடவுள் பிள்ளைத்தமிழ்

## அரன்வாயல் வேங்கடசுப்புப் பிள்ளை

### விகடசக்கர விநாயகர் துதி

பொன்மாது காவியங் கண்ணோக்க நிறைதலாற்
புருடோத் தமன்விரிஞ்சன்
புருகூத னிருநிதிக் கிழவனா தியர்பெரும்
போகம் புசித்துமிமயக்

கன்மாது மாதவஞ் செய்தரனை வரைதலாற்
கருதுசிவ போகமுற்றுங்
கவலாத சீவர்பிற மண்ணாடு விண்ணாடு
கண்ணாது மெண்ணாதுமே

சொன்மாது புகழ்ஞான பண்டித ரெனக்குலவு
தொன்மைசால் கச்சிநகருட்
சூழ்குமர கோட்டத்து வாழ்பனிரு நாட்டத்தர்
தோட்கணி நறுந்தமிழ்சொலத்

தன்மாது வல்லவையி னொடுவிகட சக்கரத்
தந்திவந் தெமதுசெந்நாத்
தவிசினிது வீற்றிருந் தருளுமென வதனுகள
சரணம் பழிச்சுதுமரோ. 1

### இருகோட்டு விநாயகர் துதி

புத்தமுத மன்னாட் புணர்வா னினைந்தளவி
லத்தருணங் கானி லடைந்திளையோற்-குத்துணைநே
ரெந்தை யிருகோட் டிபமா முகத்தவனென்
சிந்தை யிருளகற்றுந்தே. 2

## எல்லாம்வல்ல சித்தகுரு துதி

கோலமதிட் கச்சிக் குமரகோட் டத்துவளர்
வேலவர்பிள்ளைக்கவியான் விள்ளவே-ஞாலமதிற்
சிந்தித்த வெல்லாஞ் செயவல்ல சித்தனெங்கோன்
சுந்தித்த தாட்கமலங் காப்பு. 3

## குமரகோட்டக் கடவுடுதி

சீர்சான்ற கச்சித் திருக்குமர கோட்டத்துட்
பேர்சான்ற வாறுமுகப் பெம்மானே-யேர்சான்ற
பிள்ளைக் கவிநின்மேற் பேசவருள் வாக்களித்தென்
னுள்ளத் தொளிர்க வுவந்து. 4

## சரசுவதி துதி

குளிர்நீர்சூழ் கச்சிக் குமரகோட் டத்தே
யொளிர்நீர் முருகோ னுவப்பத்-தளராமே
பிள்ளைக் கவிபாடும் பெற்றிமிகு வாக்களிப்பாய்
வெள்ளைக் கலைபுனையம் மே. 5

## அவையடக்கம்

உயர்சிவன் வலப்பாக முமையவ ளிடப்பாக
முவர்நடுக் கந்தனெந்தை
யொளிரவரு மினியசோ மாக்கந்த மூர்த்தநிலை
யுலகுணர வொளிர்காஞ்சியின்

மயலறு பரஞ்சோதி லிங்கமுறை வேதமா
மருவுதிரு வேகம்பமு
மாணருட் பிலமேவு தேவிகா மக்கணுமை
மன்னுகா மக்கோட்டமும்

வியன்மிகுந் தனதிரு மருங்குமுற் றோங்கவிடை
மிளிர்குமர கோட்டமுறைசெவ்
வேளெம்மை யாளுடைய முருகப் பிரான்செய்திரு
விளையாட லாகுமிந்நூல்



செயவசைத் தவனருள் விழைந்திடும் பெற்றியாற்
செப்பலுற் றேன்மைந்தர்வாய்த்
தேமழலை மொழியினிற் பிழையெணார் கைக்கொள்ப
செந்தமிழ்ச் செல்வரென்றே. 6

# காப்புப் பருவம்

## திருமால்

புயன்மருவு கடலாடை யுடலாட வொளிர்நெடும்
பூமங்கை மாமங்களப்
பொலிவெய்த வடையார்கண் மெலிவெய்த வடியவர்
புகழ்ந்துள மகிழ்ந்துவாழ

வியன்மருவு குருபரம் பரைதிகழ வுயர்வெள்ளி
வேதண்ட நின்றுகாஞ்சி
மேவிநற் குமரகோட் டத்துறைசெவ் வேளையெவ்
வேளையு முவந்துகாக்க

கயன்மருவு கட்கடைப் பார்வையான் மயன்மருவு
கைக்குரிய மோகஞ்செயுங்
கமலையை மணந்துதிரு மாலாகி மன்னுயிர்
களுக்கூட்டு மிருபோகமு

நயன்மருவு மாயையிற் றருதலான் மாயனென
நண்ணித் திருப்பாற்கட
னாப்பணொரு பாப்பணையின் மேற்கண்வள ரார்த்திபுரி
நாரா யணக்கொண்டலே. 7

## சிவபெருமான்

## குழிப்பு

*தனதனாத தத்ததன - தானத் தனத்தனா*

உருவமாய்ச் சுத்தநிறை - யருவமாய்த் தக்கவரு
வுருவமாய்த் தற்பரம - தாகிற் தருக்குவா
ருவமைகாட் டற்கரிய - கருணையூற் றுப்பெருகி
யொழுகுசீர்த் திக்கினிய - காமக் கணுற்றதா

யுமைமுனோற் றுத்தழுவ - வளையுவாக் கச்சுமுலை
யுறுதலாற் பட்டசுவ - டாகத் திருக்கவே

யொழிவிலாக் கொக்குநிழன் - மணலினாற் பெற்றகுறி
யுடையராய்ச் சிட்டர்தொழ - வாழ்மெய்க் கருத்தனார்

இருவர்பார்த் தற்கரிய - வொருவராய்ப் பத்திசெயி
னெளியராய்க் கட்படுமொர் - சேவைச் சிறப்பினா

ரிலையெனாப் பெற்றியுட - னுயிர்கள்வேட் கைப்பொருளை
யினிதினூட் டக்குறைவில் - போகப் பெருக்கினா

ரிடரைமாற் றிப்பிறவி - தவிருமோக் கத்தையுற
வினியமார்க் கத்தையருள் - யோகத் தவத்தினா

ரிருளையோட் டச்சுடர்கள் - விழிகளாக் கித்திகழு
மிறைவர்கூற் றைக்கறுவு - தாளைப் பழிச்சுவா

மருவுவார்க் குச்சுமுக - னெனநிலாய்ச் சித்திதரு
மதமறாக் கைக்களிறு - நேசித்தணைக்குமோர்

மழலைவாய்ச் சொற்பகரு - மிளவலாய்ச் சித்தருறை
மலைகண்மேற் புக்குவிளை - யாடிக் களித்துலா

வருமகார்க் குட்டலைமை - மருவுதோற் றத்தரசை
மறைகளேத் தற்குரிய - சேயைக் குறத்தியாம்

வனிதைதோட் கிச்சைகொடு - வெருவுகாட் டிற்றிரியும்
வனசமாட் சிப்பதமு - ளானைப்புவிக் குளே

குரவர்வாழ்த் தப்பெரிய - குரவனாய்த் தெட்பமருள்
குசலவாக் கத்தவனை - வேதத் திருக்குநீள்

குடிலைவீட் டிற்பரவு - முதலையாப் புத்தமிழ்செய்
குநரைவேட் டுத்துதிகொள் - வானைச் சமர்க்கணே

கொடியவாட் பற்றலர்வெள் - கரியினேற் றைப்பொருவு
குகனைநீர்க் கச்சிநடு - வூரிற் றழைப்பதோர்

குமரகோட்டத்துதய - விரவிபோற் சுற்றுக்கதிர்
குலவுவேற் கைக்குமர - வேளைப் புரக்கவே. 8

## பராசக்தி

*தத்தத் தனன தாத்தத் தானத் - தாத்தனத் தாத்தனா*

பொற்புக் கயிலை நீத்துப் பாரிற்
றெற்குத் திசையை நோக்கித் தேடிப்
புக்குக் கணவர் வாய்ச்சொற் பேணிச் சாத்திரத் தேர்ச்சிகூர்



புத்திக் கினிய மூர்த்தத் தேமுக்
கட்சிற் பரனை நாட்டித் தேறற்
புட்பத் தொடையல் சாத்திப் பூசித்தார்த்தியிற் போற்றுநாள்

பொக்கப் புனலி னீத்தத் தாலர்ச்
சித்தற் குறுகண் வாய்க்கத் தாவிப்
பொத்திப் பரம னாக்கைக் கேறக் கோற்கரத் தாற்றனீள்

பொற்றைக் குயம தாற்பொய்க் காமற்
கட்டிச் சுவடு காய்ப்பப் பூணப்
புற்றுப் பணியர் வேட்டுப் பாகத் தேற்றிடச் சீர்த்துளாள்

பற்பத் திருமி னாட்குத் தூய்மைச்
சொற்கத் தமரர் நாப்பட் காவிற்
பட்சத் துறைமி னாட்குப் போகப் பேற்றினைச் கூட்டுவாள்

பத்தித் துறையு ளார்க்குப் பாகிற்
றித்தித் தனையர் தேட்டிற் கூடிப்
பப்புத் துயரி னீட்டப் பாசக் காட்டினைப் பாற்றுவாள்

பத்துத் திசையு மேத்தக் கூவிப்
பிச்சைக் கலையு மாக்கட் கேயுட்
பற்றிற் றரும மார்க்கச் சீரைக் காத்தமெய்க் கீர்த்தியாள்

பற்பற் புவன வாட்சிக் காமுற்
பட்டத் தரசி கூத்துப் பாதப்
பக்கத் திறைவர் வீட்டுக் காமக் கோட்டியைப் போற்றுவா

மற்புக் கடலி லாட்டித் தாயொத்
தெற்குக் கருணை காட்டிக் காலற்
கச்சப் படுதன் மாற்றித் தாளைத் தோத்திரித் தேத்தவே

யற்பக் கலியை யோட்டிச் சோறிட்
டிட்டத் தடிமை யாக்கிக் கோடற்
கத்தத் திலகு மூற்றுக் கோல்வைத் தேக்கறத் தோற்றுவா

ரற்றைப் பொழுது பாட்டைப் பாடத்
தெற்றிக் குறளை வீட்டிக் கீரற்
கற்றத் துதவி யாற்றித் தீரப் பூட்கையிற் கரத்ததே

யப்புச் சடைவெ ணீற்றுக் கோலத்
தற்குக் குடிலை மாற்றத் தோர்தற்
கத்தத் தினையொர் தோட்டுக் காதிற் கேட்டிடச் சாற்றுவோர்

கற்புக் குறமி னாட்டத் தேவச்
சற்றுச் கணமு நீட்டிக் காமற்
கைத்தற் பணிசெய் வேட்கைக் கோனற் கார்த்திகைக் கேற்றசேய்

கத்துக் கடலின் மேட்டிற் சாலக்
கொக்கிற் குலவு தூர்த்தச் சூரைக்
கைக்கட் சுலவு வேற்குக் கூறிட் டூர்க்கிளைப் பாற்றுவார்

கட்டுக் கனிகொள் பாக்குத் தோகைப்
பச்சைச் சிகிந டாத்திப் பூவைக்
கர்ச்சித் தரியி னேற்றிற் சூழ்தற் கூக்குமெய்ப் பாட்டினார்

கற்றுப் புலவர் வாழ்த்துக் கூறப்
பெற்றுத் திகழு நாற்சுற் றாரற்
கச்சிக் குமர கோட்டச் சீலத் தீர்த்தனைக் காக்கவே. 9

## விநாயகர்
## குழிப்பு

*தத்தன தத்தன-தனனத் தாத்தனா*

மிக்கறு குத்தொடை-யைப்புனை பொற்புய
வித்தகர் முக்கணர்-மயலைப் போக்கிமா

மித்தைம னத்தைய-டக்கிய ருட்டுறை
விட்டுந டத்திடு-மொருகைத் தோட்டியார்

வெற்றிகொ ளொற்றைம-ருப்பையொ டித்தொரு
மெய்ச்சரி தத்தினை-மலையிற் றீட்டுவார்

விக்கின னைக்கொடு-துட்டர்க ளைச்சிதை
வித்தடி யர்க்கரு - டலைமைப் பாட்டினா

ரெக்கலை கட்குமு - தற்குடி லைத்தளி
யிற்றிகழ் தற்பரர் - சுமுகக் காட்சிநே

ரிட்டவி சிட்டகு - ணத்திரு சத்திக
ளிற்பிரி வற்றவ - ருணர்விற் சாட்சியா

ரிற்புவி ளைத்தொளி - ரத்திமு கத்தின
ரெட்டிரு நற்பெயர்-மனுவிற் சேர்க்கையா

ரிக்குமு முச்சுவை - முக்கனி சர்க்கரை
யிட்டுயர் குக்கியர் - கழலைப் போற்றுவாஞ்

செக்கர்நி றச்சடி - லத்தும திப்பிறை
தெப்பமெ னப்பட - வரவுற் றோட்டியே



தெற்றுந திப்புன - லிற்றிரி யத்திகழ்
சிற்பர னெற்றியொண் - விழியிற் பூத்தசேய்

திக்குக ளெட்டினு - நற்றவ னிட்டியு
தித்தத கர்ப்பரி - கடவித் தாழ்ச்சிதீர்

சித்தரு வப்புறு - கைத்திற னுற்றவர்
சித்தசன் வெட்குறு - மழகிற் பூர்த்தியார்

கச்சமு லைக்கரி - மிக்கட வுட்பிடி
கச்சில விக்கிசை - யிகலித் தாக்கவே

கட்டிய ணைத்தித - ழைப்ப ருகிப்பெரு
கக்கல விக்கிசை - நசையுட் டேக்குகோ

கற்றவ ருட்புகழ் - கச்சியி டத்தும
கத்துவ முற்றொளிர் - குமரக் கோட்டம்வாழ்

கத்தனை மெய்ப்பர - முத்திநெ றிப்படு
கைக்கருள் சற்குரு - மணியைக் காக்கவே 10

## பிரமன்
## குழிப்பு

*தத்தத் தனன தாத்த தனதனத் தனந்தனன*

வித்தைக் கரசி வாக்கின் மிளிர்தரச் சிறந்தறிஞர்
மெச்சிப் புகழு மோத்து முறைகளைப் பகர்ந்தபர

னத்திக் கருளி மீட்ட வமலனிற் பிறந்துலகை
யற்கத் தரும னாற்ற லுறுமயற் பணிந்தெழுது

மத்தக் களிறு தோற்ற மனநினைத் திருந்துமுலை
வட்டக் குறமின் வேட்க வனமதிற் புணர்ந்துமகிழ்

கைத்தற் பணிசெய் சேத்த கரமலர்க் குகன்றனையொர்
கச்சிக் குமர கோட்ட முருகனைப் புரந்திடவே. 11

## தேவேந்திரன்
## குழிப்பு

*தனன தாத்தத்த தனதனத் தாத்தனா*

இலகு கீழ்த்திக் கிலுறைபவர்க் கார்த்தியா
னெழிலி யாற்றுய்க்கு மறலளித் தாக்கமே

விலகு றாக்கற்ப தருநிழற் பூத்தகோன்
விபுதர் வாழ்த்துற்ற குலிசனைப் போற்றுவா
மலகி லாச்சித்தர் முனிவருட் காட்சிதே
ரழகு வாய்த்திட்ட வமலனைத் தேக்குசீர்
குலவு நீர்க்கச்சி நகரினுட் கோக்கள்சூழ்
குமர கோட்டத்து முருகனைக் காக்கவே. 12

## திருமகள்

### குழிப்பு

*தத்தனந் தனதான - தனன தாத்தனா*

மெச்சுமைந் தருநீழ - லுற்றவிந் திரனாதி
மிக்கவும் பரியாரு - மளவில்பார்க்கணே
வித்தமொன் றுபல்கோடி - மக்களும் பெறுபோக
மித்தெயென் கினுமேத - னருளை நோக்கினோர்
நச்சிடும் பொழுதீய -முற்படுங் கொடைமேவு
நற்குணந் தணவாது - கமல வீட்டில்வாழ்
நட்புறுந் திருமாதை - நித்தலும் பணிவோடு
நட்டுநின் றிருபாத - மலர்களேத்துவா
மச்சமென் பதுதீர - விட்டிருந் தருண்மேவி
யற்பொடுந் துதிபாடி - யிருமைவேட் கைபோ
யற்புதந் தருஞான - சித்தியொன் றுதனாடி
யக்கரந் திகழாறு - நினைகு வார்க்குளே
கச்சலின் றொளிர்தேனை -யொத்தகந் தனைநீடு
கச்சியம் பதிமேவு - குமர கோட்டம்வாழ்
கைத்தலம் புனைவேல - னைக்குகன் றனைவீறு
கட்கடம் பணிவேளை - யினிது காக்கவே. 13

## கலைமகள்

### குழிப்பு

*தத்தத் தனத்தனன தாத்தத் தனத்தனன*
*தந்தனத் தந்தனத் தாந்தா னனத் தாந்தனா*

பத்தித் துறைக்கணெமை நாட்டித் தனைத்தொழுது
பங்கயச் செங்கழற் பூம்போ தினைச்சார்ந்துவாழ்



பத்தர்க் களிக்குமருள் காட்டித் துதிக்கையுறு
பைந்தமிழ்க் கன்புவைத் தாண்டாண் மறுத்தீர்ந்ததோர்
சுத்தப் பளிக்குவட மேட்டிற் பொறித்தகலை
துன்றுகைக் கொண்டுருத் தான்பா லெனத்தேர்ந்துளே
சுட்டிக் குறிக்கவரு தோற்றக் கலைத்தலைவி
தொண்டினிற் சிந்தைவைத் தீண்டா தரித்தோம்புவா
மத்தக் களிற்றுரிவை போர்த்திட் டிருக்குமரன்
மண்டழற் கண்களிற் சேண்பா ருயத்தோன்றியா
வற்றுத் துயர்க்குமுடி வாக்கிக் களத்தசுர
வம்பரைக் கொன்றுகொக் காஞ்சூ ரனைக்காய்ந்தசேய்
சுத்தப் புடைத்தயனை வாட்டிச் சிறைக்குளிடு
கண்டிதச் சிங்கநற் றேன்பாய் பொழிற்கோங்குசூழ்
கச்சித் திருக்குமர கோட்டத் தருட்குரிசில்
கந்தனைச் சுந்தரக் காங்கே யனைத்தாங்கவே. 14

## விபூதி ருத்திராக்க பஞ்சாக்கரம்

தொழுகோடி யடியவர் தியானிக்க வணிதரச்
சுகநல்கி யிடரைமாற்று
தூய்மையுறு பவரோக மாமருந் தென்னத்
துலங்குதிரு வெண்ணீற்றையு
மெழுகோடி மந்திரங் கட்குநா யகமாகி
யிறைசதா சிவரூபமா
மினியபஞ் சாக்கரந் தன்னொடுகண் மணியினையு
மெண்ணித் துதித்தல்செய்வாம்
உழுகோடி யளிகுலம் பண்பாடி நின்றாடி
யுண்டகடு தேக்கம்துவி
ஹூற்றுப் பெருக்கெழுக டம்பணி தடம்புயத்
தொன்றுவடி வேலைவிண்ணிற்
கழுகோடி வடடமிட வொன்னார்கண் மீதேவு
காங்கே யனைச்சிட்டர்சூழ்
கச்சித் திருக்குமர கோட்டத்து ளறுமுகக்
கடவுண்மணி யைக்காக்கவே. 15

### நவக்கிரகங்கள்

சோதித்த கணிதநூ னெறிநின்று கோடாது
 தொல்லுலகி லெவ்வுயிர்க்குந்
 துன்னுமிரு வினையினள விருபோக முந்தந்து
 துருவனி லமைந்துசுழலும்

ஆதித்த னிந்துசேய் பண்டிதன் றேவர்கட்
 காரியன் வெள்ளிகாரி
 யணிராகு கேதுக்க ளாகுமொன் பதின் மரையு
 மடிதொழுது போற்றுகிற்பாம்

பேதித்த சமயங்க டொறும்வேறு வேறான
 பெற்றியொடு விளையாடல்கூர்
 பெருமானை யொருமா முனிக்குமுத் தமிழினொடு
 பிரணவப் பொருளுண்மையும்

போதித்த குருராய னைக்கச்சி நகரினுட்
 பொலிகுமர கோட்டமருவும்
 புண்ணியவி ளக்கமிக நண்ணிவள ரறுமுகப்
 புத்தேளை யினிதருளவே. 16

### ஒருமை

குழிப்பு

*தனன தனதன தனன தனதன - தனன தனதன தனன தனதன*
*தத்தத் தனந்தனன தத்தத்தனந்தனன - தனனதாத்தனா*

 அருவி லருவென வுருவி லுருவென
 வருவு முருவமு மணவி யுயும்வகை
யர்ச்சித் திடும்பெரிய ரிச்சைக் குகந்தபடி
 மலரி லுறைதரு நினைவி னுலகருள்
 வலவ னெனுமறை யவனு மலைகடன்
மத்தித் தெழுந்தவமு தத்தைப் பணிந்தசுர
 ரயில வுதவிய புயலை நிகருரு
 வரியு மிறுதிசெ யரனு மயல்புரி
யற்புற் றிருந்தவனு மிக்கத் திருந்தவருள் - பவனுமாட்சிதோய்
 அறுகு புனைகண பதியை முதலிய
 வளவில் சகளமு நறிய கலவைக



ளப்பித் தசும்பினைநி கர்த்துத் துலங்குமுலை
 மலையின் வருமுயர் கவுரி முதலிய
 மகளி ரெழுவரு மரிய திரிபுரை
வர்க்கத் தணங்கினரு முக்கட் சிவன்குலவு
 மவனி புனலெரி யநிலம் வெளியுயி
 ரலரி மதியென நிகழெ ணுருவுட
னக்கத் திலங்குமணி யொப்பச் செறிந்த துணை -
 வியருமேற்றமார்

 இருவி ணிலவிய பதவி தொறுமுறை
 யிமைய வருமுறை யவர்செய் வழுவறு
மெச்சத் தடைந்தவியுண் முப்பத் திரண்டுடனோர்
 கடவு ளருமினு மளவில் சமயிகள்
 கருது தலைவரு மவிர்த னதுமது
கைக்குட் பொருந்தவொளிர் கற்பத் தடங்குதலி
 லிறைமை யுடையதை யிணையில் பொருளினை
 யிறுதி நடுமுத லிலதை யெதிர்பவ
ரெய்ப்பற் றிருந்துசுக முற்றத் தொடர்ந்தருளு -
 மமுதையாக்கமார்

 இருமையினு முறு பெரிய துணையனை
 யெவணு நிறைதரு புரண வடிவினை
யிற்புத் தடங்கடலை யற்பிற் சிறந்துவளர்
 கருணை மழைபொழி முகிலை விரிதரு
 ககன வெளிதனி னடன மிடுமொரு
கர்த்தத் துவங்கொள்சிவ சித்துப் பரஞ்சுடரை
 யிதய மொழியுட லுணர வரிதென
 விலகு மருமையை யுரிய வொருமையை
யெத்திக் கினுந்தொழுது தித்தித் திடுந்தமிழி-
 னிசைகொடேத்துவாம்

 மருவியமரர்கள் பணியு மிரசித
 மலையி லுறைபவ னுதலின் விழிவரு
மத்தக் குழந்தைதனை மைக்கட் பசுந்திருவெ
 னுமையுண் மகிழ்வொடு தழுவி முலையமு
 துதவ வளர்தரு மிளைய குமரனை
யொப்பற் றுயர்ந்தபல வெற்புற் றிருந்திசைகொண்
 மகிப ரடிதொழ வரசு புரிதரு
 வலிய முருகனை யளிக னுகர்தரு

மட்டுக் கடம்புபுனை வெற்றித் தடம்புயனை -
யுயர்விணோர்க்கெலா
மறுகு மிடர்புரி யவுணர் குலமுதல்
வனைய வனதுபல் படைக ளொடுகிளை
மட்கப் பெருஞ்சமர்செய் தட்டுத் தழைந்திடுபொ
னுலகு சுரர்குடி புகுத வருள்புரி
யுரிமை மிகுதள பதியை யிருபுடை
யுற்றுத் திகழ்ந்துவளர் கற்பிற் சிறந்தவிரு
மகளிர் கணவனை மறுவி லனவறு
வதன முழுமதி யுடைய புனிதனை
வைப்புத் தனம்பொருவ வெய்ப்பிற் றருங்கொடைகொள்-
விபுவையாற்றல்சேர்
கருவி மழைநிகர் களைக ணெனமிளிர்
கமல மலர்புரை படைகள் பலபுனை
கைக்குத் தகுந்தவயில் வைத்திட் டிருந்தவனை
யழலின் மெழுகென வுருகு மனமுடை
யடியர் விழைபல வரமு மருளியு
ளச்சத் தொடுங்கவலை யற்றுப் பிறங்கவரு
கடவுண் மணியினை மணிக ளெறிதிரை
கரைகள் பொருகய மகழி மதிள்புனை
கச்சிப் பெரும்பதியி லெச்சித் தரும்பரவு - குமரகோட்டம்வாழ்
கனக மலையினை யினிய நடமிடு
கலப மயிலுயர் களிறு தகரிவர்
கைக்குப் பரிந்தவனை நற்குக் குடங்கிளரு
மணிசெய் துவசனை யறிஞ ரறிவினு
ளறிய வொளிர்தரு துரிய சொருபனை
யற்பக் குணங்கடவிர் முத்தர்க் குளன்பிலெழு
கனிவை யெனத்த நிலவு மினியதொர்
கதியை மொழிபல துதியை யணியுவ
கைச்சிற் பரம்பொருளை நட்பிற் றொடர்ந்துதின-
மினிதுகாக்கவே. 17

## 2. செங்கீரைப்பருவம்

பொங்கார்வ மொடுகுடிலை யத்தமொழி கெனவினவு
போதமிகு தாதையார்க்குப்
போதித்த வருண்ஞான மணநாறு செய்யவாய்ப்
புண்டரிக மலர்களாறுந்



தங்காத னவரசப் பைந்தமிழ்த் தேறலைத்
தாமுகுத் திடுதலேய்ப்பத்
தண்மழலை சிந்தப் பெருங்கருணை வெள்ளந்
ததும்புபன் னிருநாட்டமு
மிங்கா தரம்புரிந் தெமைநோக்க மதிவதன
மிருமூன்று மசையநிலமே
லிலகுகைம் மலர்பதித் தொருதாண் மடித்தொன்றை
யெழில்கொள நிமிர்த்தியூன்றிச்
செங்கா ரெனக்குலவு சிங்கார வேலனே
செங்கீரை யாடியருளே
தீட்டும் புகழ்க்குமர கோட்டந் தனக்கிறைவ
செங்கீரை யாடியருளே. 18

கைம்மலரி னம்பர்முக் கண்மலர் புதைத்தவக்
காலையுல கங்களெங்குங்
கங்குற் படாம்போர்ப்ப வதுகண்டு பிழைதபக்
கடிநகர்க் காஞ்சிமேவி
நம்மைவழி பட்டினிய மாதவ முஞற்றுகென
நாடியவ் வாறியற்றி
நளிரலைக் கம்பா நதிப்புனற் பிரவாக
நண்ணவிடை யுறுதீர்ப்பான்
கொம்மைமுலை மார்பத் தழுந்தவே கம்பரைக்
குருகுலவு தோட்களாரக்
குறுகித் தழீஇக்கொண்டு வேட்டவ ரிடப்பாதி
கொண்டற னெலாம்வளர்த்த
செம்மையுறு காமக்க ணம்மைதரு செம்மலே
செங்கீரை யாடியருளே
தீட்டும் புகழ்க்குமர கோட்டந் தனக்கிறைவ
செங்கீரை யாடியருளே. 19

குரவணியல் வெட்சிகூ தாளமொடு புனைபுயக்
குன்றா றிரண்டின்மேவிக்
கோகனக வதனமல ராறனிரு பானேயர்
கூடிவிளை யாடுபரிசிற்
கரவணலி லாதொளிர் துவாதசா சித்தர்செங்
கரமாயிரம் பரப்பிக்
காணுற விமைத்தாங் கிமைத்தபொற் குண்டலங்
கவினுறப் பூண்டசைதர

வரவணைப் பள்ளியம் பகமுதவு மரிவைய
ரருட்கவுரி வாணிதிருமி
னவிர்கார்த் திகைத்தாயர் சசியனையர் பிறரும்வாழ்த்
தமுதாசி யுட்கொள்வள்ளைச்
சிரவணமி ராறொன்று சரவண பவானந்த
செங்கீரை யாடியருளே
தீட்டும் புகழ்க்குமர கோட்டந் தனக்கிறைவ
செங்கீரை யாடியருளே. 20

அங்கண்மா ஞாலத்தி னந்தகா ரம்பாற
வலர்கதிர்கள் பலவிரித்தும்
ஆர்வலர்கண் முறையிட் டிரப்பவவர் வேட்டவர
மாவன வெலாமளித்துந்
துங்கமா மந்திரம் வழாவகையி னந்தணர்
தொடங்குமக வினையோம்பியுஞ்
சுருதியி னிராசியப் பொருளினை விளங்குறத்
தோமற விளக்கல்செய்தும்
பங்கமே யெய்தவெதிர் தெவ்வரைத் தேய்த்திடும்
பாசறைக் களம்விழைந்தும்
பண்ணனைய தீஞ்சொற் குறப்பாவை யோடுரை
பகர்ந்துமகிழ் மூவிரண்டாந்
திங்களா னனமருவு மங்களா கரமுருக
செங்கீரை யாடியருளே
தீட்டும் புகழ்க்குமர கோட்டந் தனக்கிறைவ
செங்கீரை யாடியருளே. 21

தங்கப் பெருஞ்சிலை தனைக்குழைத் திலகுகோ
தண்டஞ்செய் தேந்துதிண்டோ
டழுவிக் குழைத்திரு முலைச்சுவடு மங்கைத்
தலத்தணி வளைச்சுவடுமே
பங்கப் படாதம ருடற்றமும் பாக்குமொரு
பார்ப்பதி மடந்தைபோலும்
பைங்கொண்ட லன்னகரு விண்டுவும் பிரமனும்
பகருருத் திரமூர்த்தியு
மெங்கட் கிரங்கியரு ளெனவேத்தி வழிபா
டியற்றவிழை பேறுநல்கி
யினியதே மாவடி முளைத்தமுக் கட்கரும்
பெனவே விளங்குசீர்சா



லங்கச்சி யேகம்ப ரின்பச் சிறாரிளவ
லாடியருள் செங்கீரையே
யமரர்வேட் டுப்பணிசெய் குமரகோட் டக்குரிசி
லாடியருள் செங்கீரையே. 22

கானவர் மடந்தையுந் தெய்வதப் பிடியுங்
கலந்துவிளை யாடிமகிழ்கூர்
காமவல் லியினிரு மருங்கணைய வவர்நடுக்
கற்பகம் போலமிளிருந்
தேனவிரு நீபச் செழுந்தொடைய லணிபனிரு
திண்டோ ளிளஞ்சிங்கமே
செவ்வே ளெனத்தொண்ட வெவ்வேளை யும்பரவு
தேனுவே சிவபாநுவே
தானவர் புரஞ்சுட்ட வேகம்ப வாணரைத்
தாங்குமோர் விடையுமவர்கோ
தண்டந் தனிற்பூட்டு வாளியும் பரிவொடு
தழீஇப்புணரும் வேய்த்தோளியு
மானநெடு மான்மருக ஞானவடி வேன்முருக
வாடியருள் செங்கீரையே
யமரர்வேட் டுப்பணிசெய் குமரகோட்டக்குரிசி
லாடியருள் செங்கீரையே. 23

வேறு

எண்டரு நான்மறை நாலே மூகம்
மெதிரெதிர் கொண்டாட
விவைபகர் செம்பொரு டேர்தரு மந்தண
ரிதயம கிழ்ந்தாடப்
பண்டரு சொன்மக ளுமைதிரு வாசிகள்
பலவு மொழிந்தாடப்
பங்கய நிகரறு வதனமு மாடப்
பனிநகை நிலவாடத்
தண்டரு நறவினை யுண்டிமிர் வண்டொடு
தார்புனை புயமாடத்
தாண்மல ரிற்புனை கிண்கிணி யாடத்
தடமார் பணியாட
வண்டரு நம்பிய தொண்டரு முய்ந்திட
வாடுக செங்கீரை

யன்புறு கச்சிவ ளம்பதி யிற்குக
னாடுக செங்கீரை. 24

சமயமொ ராறும் விளங்கிடு மாறொளிர்
சண்முக மதியாடத்
தண்மதி யமுதிற் கண்மலர் பொழியுந்
தண்ணரு ளொளியாட
விமயவ ருலகந் தாங்கலி னீரா
றெழுநிகர் புயமாட
விருமட வாரணை மார்பத் தணிகல
னின்னொலி செய்தாட
விமலத் தீக்கைசெய் முறையிற் புவிமகண்
மீது மகிழ்ந்தொளிரு
மென்கம லக்கை மடித்துயர் தாண்மலர்
மெல்ல வசைந்தாட
வமையுமி தென்றுமை யமைமொழி யாடிட
வாடுக செங்கீரை
யன்புறு கச்சியி லின்புறு நற்குக
னாடுக செங்கீரை. 25

*தாத்தந் தனனத் தாத்தந் தனதனதந் தாதந்தானா*

சாற்றுந் தமிழிற் போற்றுந் துதிபுனை
தண்டார் கொண்டேதோள்
சாத்தும் பரிவைக் காட்டும் புலவரி
தஞ்சார் நண்பாலே
மாற்றெங் கவலைக் கூட்டந் தமையென
வந்தார் முந்தாவே
மார்க்கண் டருயக் கூற்றந் தனையடு
மன்றா டுந்தாளா
ராற்றுந் தருமத் தேற்றம் பெறுமுமை
யைம்பா ணன்றாய்மா
லாக்கம் பெறுதற் கூக்குஞ் சுராரிவ
ணன்பா னின்றார்பார்
தேற்றும் படிமுற் றேற்றுங் குருபர
செங்கோ செங்கீரை
சீர்க்குங் குமரக் கோட்டந் திகழ்குக
செங்கோ செங்கீரை. 26



*தனனா தனனத் தாத்தத் தந்தா தந்தா தந்தானா*

அசையா மிடியைத் தாக்காற் கஞ்சே
லஞ்சே லென்போனே
யமரா வதியைக் காத்தற் கென்றே
யம்பார் வந்தோனே
யிசையே டணையற் றோர்க்குப் பொன்றா
வின்பூ றுந்தேனே
யினிதே யணிதற் காத்தித் தண்டா
ரெண்டோ ளன்சேயே
வசைதீர் தமிழிற் போற்றற் கென்பால்
வந்தா ளுங்கோவே
வழிபா டுறுநற் கூட்டத் தின்பான்
மங்கா வன்பாளா
திசையோர் பகர்மெய்ச் சீர்த்திக் கந்தா
செங்கோ செங்கீரை
திருவாழ் குமரக் கோட்டத் தெந்தாய்
செங்கோ செங்கீரை. 27

## 3. தாலப்பருவம்

கண்ணிற் சிறந்த வளங்காட்டுங்
கமஞ்சூலெழிலிக் குப்பாயங்
கவினப் போர்த்த பொங்கரினுட்
கங்குலிரிய நாகமணி
விண்ணிற் கதிர்போல் வெயில்பரப்ப
விரித்துக்கலாப மயினடிப்ப
வேரி மலர்த்தே னளிமிசைந்து
விளரிநறும்பாண் மிழற்றவய
னண்ணிக் கொன்றை பொன்சொரிய
நன்னீர்வாவிச் செழுங்கமல
நடுவீற் றிருந்து வெள்ளெகின
நன்றுநோக்கிக் கேட்டுவக்கு
மண்ணிற் சிறந்த தமிழ்க்காஞ்சி
வாழ்வேதாலோ தாலேலோ
மமர்தீர் குமரக் கோட்டமமர்
வரதாதாலோ தாலேலோ. 28

நீறு பூசி மணிபுனைந்து
நிலாவெண்டிங்கண் முடிதோய்ந்து
நிமலன் போலு நிவந்தபல
நெடுமாளிகைக ளவன்றனருட்
கூறு பூத்த பசுங்காமக்
கோட்டிபுகழ்போற் பரந்தவற்றுட்
குலவுங் காம தேனுவன்னார்
கூவியிரப்போர் பசிப்பிணிக்குச்
சோறு மினிய சுவைக்கறியுந்
தொலையாதெடுத்து வழங்குதொறுஞ்
சொக்க நாதர் குறட்களித்த
சொன்றிக்குழிபோல் வளர்ந்தறத்தின்
வீறு காட்டுங் காஞ்சியுட்செவ்
வேளேதாலோ தாலேலோ
விளங்குங் குமரக் கோட்டவடி
வேலாதாலோ தாலேலோ. 29

தேமாந் தருக்கு விளக்கமுறச்
சிவன்வீற்றிருக்கு மறைவடிவத்
தேமாந் தருவொன் றீண்டுளது
தேவதாரு வைந்தினிழற்
கோமா னிதிக்கோ னயனெடுமால்
குலவும்பதமு மேற்பதமுங்
குளிர்பே ரன்பிற் சூழ்வார்க்குக்
கொடுக்குந்தகைய தெனப்பெரியோ
ரேமாந் திராம லெப்போழ்து
மிறுமாந்ததனைச் சூழ்ந்துய்வா
ரிமையா விழியீர் நீரும்வம்மி
னெனல்போற்புட்க ளொலிக்கும்விண்டோய்
மாமாண் பொதும்பர் புனைகாஞ்சி
வாழ்வேதாலோ தாலேலோ
மதிக்குங் குமரக் கோட்டமுழு
மணியேதாலோ தாலேலோ. 30

நல்வங் கணத்தா னின்றனையு
நால்வாய்த்தந்தி முகத்தனையு
நவிநேர் காம நோக்கியையு
நாரவேணி நம்பனையும்



வில்வங் கடுக்கை யாதிநறு
மென்பூத்தூவி யருச்சித்து
விரும்புஞ் சரியை கிரியையுடன்
மேவியோக ஞானத்தாற்
பல்வந் தனைக ளாற்றிவழி
படுவேதியராற் றந்திரந்தேர்
பவராஞ் சைவ தேசிகராற்
பத்தர்குழுவாற் சிவநேசச்
செல்வங் கொழிக்குங் காஞ்சிநகர்ச்
சேயேதாலோ தாலேலோ
சீரார் குமரக் கோட்டமமர்
சேந்தாதாலோ தாலேலோ. 31

பத்திக் கடலிற் படிந்தாடிப்
பாசமாசு தவிர்ந்துபரி
பாக மென்பூந் துகிலுடுத்துப்
பற்பக்கவச மணிந்திதய
சுத்திப் பீட மிசையிருந்து
தூயபஞ்சாக் கரமோதிச்
சோதி பதந்தாழ்ந் தருளமுதந்
துய்த்துஞான மகட்புணர்ந்து
சித்திச் செல்வ மோரெட்டுஞ்
சேர்ந்தத்துவிதப் பெருவாழ்விற்
சிறக்கு மினிய சிவபோகந்
திளைக்கும்பெரியோர் குழாம்பரவு
முத்தித் தலமாந் திருக்காஞ்சி
முதல்வாதாலோ தாலேலோ
முதுசீர்க் குமரக் கோட்டத்துண்
முருகாதாலோ தாலேலோ. 32

வேறு

பண்மது ரத்தமிழ் பாடிய பாவலர்
பக்கத் துணைவோனே
பரம னகப்பொரு ளுக்குரை கண்டருள்
பாவலர் சிங்கேறே
யுண்மதி மிக்கபொய் யாமொழி வாண
னுரைத்திடு கவிநசையா

யொண்கனி தந்துமு னளெவைசெவ் வாய்மொழி
யொருசில கவிகேட்பாய்
வெண்மதி யேனும் புகழ வியக்கும்வி
ருப்புறு செவ்வேளே
விரிதரு காந்தந் தமிழில் விரித்துரை
வேதிய னுக்கருள்கூர்
தண்மதி யம்பொரு சண்முக தேசிக
தாலோ தாலேலோ
சதிர்மிகு குமரக் கோட்டத் ததிபதி
தாலோ தாலேலோ. 33

கங்கைப் புனன்மக ளன்பு செயத்தகு
கான்முளை யாமுருகா
கந்தச் சரவண வாவி பிறந்தொளிர்
கந்தா விமயமலை
மங்கைக் கிருகண் மணியினுண் மணியெனு
மைந்தா விந்தார்விண்
வளரறு மீனார் முலையமு துண்டு
வளர்ந்த குழந்தாய்வார்க்
கொங்கைக் களபக் குஞ்சரி மஞ்சரி
குலவுங் குழன்மறமான்
கொண்கா வண்கா ருள்ளிய வள்ளற்
கொடையாய் நடையார்முச்
சங்கத் தமிழுணர் தலைமைப் புலவா
தாலோ தாலேலோ
சதிர்மிகு குமரக் கோட்டத் ததிபதி
தாலோ தாலேலோ. 34

அம்பல நர்டக மாடுஞ் சங்கர
னங்கணில் வந்தோனே
யன்பரு ளம்போ ருகமிக விகசித
மடைய வருஞ்சோதீ
வம்பல ரிட்டு வணங்குநர் சென்னியின்
மன்னு மலர்த்தாளா
மணமுறு நீபத் தொடையணி பன்னிரு
வரைபொரு திண்டோளா
கம்பல மாநர சிங்கத் துரிபுனை
கடவுட் கிளையோனே



காலா யுதநெடு வேலா யுதமொடு
கலப மயூரமுமே
தம்பல மென்பவர் தங்கள் சகாயா
தாலோ தாலேலோ
சதிர்மிகு குமரக் கோட்டத் ததிபதி
தாலோ தாலேலோ. 35

வேறு

*தத்தன தனனத் தாத்தத் தத்தன தானா தானானா*

கற்புறு நெறியிற் போற்றித் தற்கெதிர்
காணா தேசோர்வாள்
கைத்தலம் வளரக் காத்துச் சர்ப்பவொர்
காலே போனேர்வாய்
விற்புறு வமதைக் கோட்டிக் கட்கணை
வீறே காதேவா
வெற்றிகொண் மறவர்க் காக்கத் தத்தையின்
மீதே மாலோவா
யெற்பணி புரியத் தேற்றிக் கைப்பொரு
ளீவாய் மூவாதா
யிட்டள வறுமைக் கூற்றைச் செற்றிடு
மேவே போல்வானே
தற்பர குமரக் கோட்டச் சிற்பர
தாலோ தாலேலோ
தத்துவ வுலகத் தேர்க்கச் சொத்தவ
தாலோ தாலேலோ. 36

*தந்தன தனனத் தாத்தந் தந்தன தானா தானானா*

மங்கள மருவிச் சீர்க்கும் பைந்தரு
வானோர் கோமானே
வன்கலி யகலக் காக்குந் தண்கொடை
மாறா தீவோனே
திங்களி னமுதிற் றேக்குங் கொங்கவிழ்
தேனார் தார்மார்பா
செங்கதி ரொளியைக் காட்டுந் திண்பெறு
சீரார் கூர்வேலா

தொங்கல்செய் கலபத் தேற்குங் கண்புனை
தூய்தா மேகாரா
தொண்டருய் வகையைக் கூட்டுங் குஞ்சரி
தோய்தோ ளீராறா
சங்கரர் விழியிற் றோற்றும் புங்கவ
தாலோ தாலேலோ
தண்டரு குமரக் கோட்டங் கொண்டவ
தாலோ தாலேலோ. 37

## 4. சப்பாணிப்பருவம்

வாளைப் பிடித்தகர மறவரில் வளர்ந்தபசு
மரகதக் கிள்ளைவள்ளி
மயன்மீறி யைம்பாற் குழற்கற்றை நெய்பூசி
வாரி யணிபெறமுடித்து
நாளக் குறிஞ்சிச் செழுந்தொடையல் பலசூட்டி
நற்றலைப் பணிகள்பூட்டி
நறுநுதலில் வச்சிரப் பொட்டிட் டெழிற்குவளை
நாட்டத்து மைதீட்டிமென்
றோளிற் நசும்பொத்த கொங்கையிற் றொய்யிலைத்
தூரியத் தாற்பொறித்துத்
தொல்லுருக் கவினாடி யிற்காட்டி யெனதுகைத்
தொண்டுகொண் டெனையாளெனத்
தாளைப் பணிந்துபணி யாளுமா மணவாள
சப்பாணி கொட்டியருளே
தமரவாய்ப் புட்கொடிகொள் குமரகோட்
டக்கடவுள்
சப்பாணி கொட்டியருளே. 38

மின்னிலகு முகிலூர்தி வச்சிரத் தாற்பண்டு
வெற்புக் குழாங்களஞ்ச
வீறுமிரு சிறகரு மரிந்தான முகில்வண்ண
விண்டுவுஞ் சிலையொன்றனைப்
பன்னிரைக ளோம்பும் பொருட்டகழ்ந் தோராத
பத்திரஞ் செய்தேந்தினன்
பகருமிம் மாதுலர் பராக்கிரம நடைதழுவு
பரிசுடையன் மருமானென



மன்னிகல்செ யவுணரைச் செற்றனையர் முப்புரமு
மண்டழற் கிரைசெய்தநாள்
மாதங்க னாந்தந்தை வன்சாப மாக்கியணி
வலயப் புயத்திட்டதோர்
தன்னிகரு மேருவைச் செண்டா லடித்தவன்
சப்பாணி கொட்டியருளே
தமரவாய்ப் புட்கொடிகொள் குமரகோட்
டக்கடவுள்
சப்பாணி கொட்டியருளே. 39

ஒப்போத வரியதிரு வெள்ளியங் கிரிமீ
துமாதேவி யொடுவீற்றிருந்
தொளிருமுக் கட்பரஞ் சோதியெம தாதிதிரு
வோலக்க மதுகாண்பதற்
குப்போது நெறியிலப் பூதரத் துனாதருட்
கோயிலை யடைந்துவிண்ணோர்
குழுமிக்க வழிபாடி யற்றிவிடை பெற்றுநடை
கொண்டனர்க ளாகவுந்தா
னப்போது சேய்மைநின் றிறுமாப்பின் வந்தியா
தகல்பிரமன் மீள்கைநோக்கி
யருகழைத் துக்குடிலை யுட்பொருள் விளக்குகென
வறியாமை யான்மயங்கித்
தப்போத வாணியற் குட்டிய கரச்செட்டி
சப்பாணி கொட்டியருளே
தமரவாய்ப் புட்கொடிகொள் குமரகோட்
டக்கடவுள்
சப்பாணி கொட்டியருளே. 40

திங்கணிகர் நினதுதிரு முகமண் டலத்திலங்கு
செங்கண்மலர் பொழியுமின்பத்
திருவருட் கடலமுத மாந்துதல் விழைந்தெமைச்
சிந்தித் திறைஞ்சுகில்லார்க்
கெங்கணப யத்தொடு வரம்பெற லியைந்திடா
வெனல்போல் விரித்துமன்பா
லேத்திவழி படுதொண்ட ருக்கியையு மவையென
விசைத்திடுதல் போன்முகிழ்த்தும்
வங்கண மிகுந்தசூர்ச் சூதமிரு கூறாக
வாரிதி வறப்பதாக

வஞ்சமு ணிரம்புகிர வுஞ்சகிரி நீறாக
வண்கதிர்க் கற்றைகாலுந்
தங்கவைஞ் ஞாங்கரெறி பங்கயச் செங்கையாற்
சப்பாணி கொட்டியருளே.
தமரவாய்ப் புட்கொடிகொள் குமரகோட்டக்
கடவுள்
சப்பாணி கொட்டியருளே. 41

வேறு

மூலமல மொன்றுமிரு மாயைகரு மத்தினொடு
மூன்றுமுடை யவராகவாழ்
மூவகைய வாருயிர்த் திரளுக்கு நகுவிந்து
மோகினி விரிந்தமானின்
சீலமுறு மைந்தொழில்செய் நின்றன் சுதந்தரச்
சீர்மையரு ளாற்றன்முழுதுஞ்
செப்பரி தெனச்சிறிது தேர்ந்தளவு தீந்தமிழ்ச்
செய்யுளை யிசைத்தேத்துவோர்
ஞாலமிசை நின்பே ரருட்பே றெலாமெய்தி
நனிவாழ மங்கலமெலா
நண்ணுபிர சாதமென் றினிய திரு வெண்ணீறு
நல்குனது செங்கைமலராற்
கோலமயின் மேலினன் போலவிர்செ வேலினன்
கொட்டியருள் சப்பாணியே
கோத்தநிறை நீர்க்குமர கோட்டமது வேட்டகுக
கொட்டியருள் சப்பாணியே. 42

தாட்டா மரைக்கன்பி லேமா நினாதுயர்
சடக்கர நினைந்திலேமா
தமிழினின் னிசைபாடி வாழ்த்திலே மாநினது
சந்நிதி பணிந்திலேமா
நாட்டாறு படைவீடு நட்டாறு வென்றுமுய
னற்றவரு ளொன்றிலேமா
நனாவொடு கனாவிலு மறந்திலே மெமைவெகுள
னாளுநின் றொண்டரேம்யாம்
வேட்டாரை மகிழ்விக்கு நின்றனருள் விளையாட்டின்
வேறாய தொன்றுநயவேம்



வீறுமுத் தமிழ்விரகர் கைத்தாள மிட்டது
விளக்கல்போல் வெண்கிம்புரிக்
கோட்டானை யோட்டிவரு நீட்டான தோட்டியாய்
கொட்டியருள் சப்பாணியே
கோத்தநிறை நீர்க்குமர கோட்டமது வேட்டகுக
கொட்டியருள் சப்பாணியே. 43

வேறு

வாழிய விண்ணி லெடுத்தகை யுக்க
மலர்ந்தகை யூருமிசை
வைத்தகை யங்குச மருவுகை கேடக
மன்னுகை வேலொளிர்கை
கேழியன் மார்பிற் றாரில் விளங்குகை
கிளரொலி மணிசேர்கை
கேடற மாமக மோம்புகை மழைபொழி
கீர்த்திக் கையமரர்
யாழியன் மெல்லிசை மகளிரை வேட்டகை
யிவையோ ரீராறு
மெதிரெதிர் தாக்குபு செக்கரை வீச
வெழுந்தொளிர் செம்புயல்போல்
கோழி விலோதன காழியுண் மாதவ
கொட்டுக சப்பாணி
குமரன் கோட்டத் தமருஞ் சேவக
கொட்டுக சப்பாணி. 44

தார்மார் புறைதிரு மங்கை மணாளன்
சதுமுக னிந்திரனுஞ்
சயசய வென்றிட வூனமில் வானவர்
தங்கிளை கொண்டாடப்
பார்மா னிடர்மா தவரந் தணர்பலர்
பல்லாண் டுகள்பாடப்
பக்கத் துணைநவ வீரரு ளாண்மை
பகர்ந்து மகிழ்ந்தாடச்
சீர்மாண் டதெனத் தானவர் மானமில்
சேனை சிதைந்தோடச்
செங்கள மலகை விருந்து பொருந்தச்
சீரலை வாய்மேவிக்

கூர்மா ணயிலிற் சூர்மா வட்டவ
கொட்டுக சப்பாணி
கொற்றவ குமரக் கோட்டத் துற்றவ
கொட்டுக சப்பாணி. 45

**வேறு**

*தனன தாத்தத் தனனா தனனா தத்தா தத்தான*

மறைவி லாப்பத் தெனுமா திரநீள் வைப்பா ரைப்பேணு
மறுவி லாற்றற் பரனீ யெனும்வாய் மைச்சீ ரைத்தேற
மிறையி லாக்கைத் தலமோ துவபோன் மிக்கோர் தக்கோர்கொள்
விதிவ மூாச்சொற் சதுமா மறைமேல் வித்தா ரப்பீடு
செறியொர் வார்த்தைப் பொருளா னதுபோ திப்பா
றொத்தேமெய்
தெரிய வார்த்துற் றிடல்போ னனிநே சித்தா டிக்கூடு
குறவர் வேட்கைச் சிறுமா னுறவா கொட்டாய் சப்பாணி
குமர கோட்டக் குழகா வழகா கொட்டாய் சப்பாணி. 46

*தனனத் தாத்தத் தனதன தானன தத்தா தத்தான*

பமரப் பாட்டுக் குழலிரு பாவையர் பற்றான் மிக்கேவு
பணியுற் றாட்பட் டவர்நடு வேயுறை பத்தா பொய்ப்பாச
மமரைப் போக்கித் துதிசெயு மாறெனை வைத்தாய் வித்தார
மதுரப் பாட்டுப் புலவர்கள் மாநிதி வைப்பா மெய்தேவ
தமர்நற் கூட்டத் தடியவர் சேர்தரு தைப்பூ சச்சாறு
தனின்மெய்க் காட்சிக் கினிய னெனாவரு சத்தே சித்தாடு
குமரக் கோட்டத் தமரர் சிகாமணி கொட்டாய் சப்பாணி
குளிர்வெட் பாட்சிக் கொளிர்குக நாயக கொட்டாய்
சப்பாணி. 47

## 5. முத்தப்பருவம்

அருகுவளைியா 'டொருகளிறு
மண்ண லயிராவணத்தேவு
மம்மையுமைமந் தாகினியு
மம்மான்மகளி ரிருவோரு
முருகுவேட்கைப் பெருக்கத்தெம்
முடனாமருந்தே யிளங்குருந்தே
யுறவே பிராணநாயகவென்
றுரைகளாடி யணைத்தணைத்துப்



பருகுமழலைத் தெள்ளமுதின்
பவளப்பவள வளமிதெனப்
பல்காற்கொஞ்சி முத்தாடப்
பரிந்தன்னவர்க்கு விருந்தளிக்கு
முருகுகமழ்நின் செங்கனிவாய்
முத்தந்தருக முத்தமே
முதுசீர்க் குமரகோட்டத்து
முருகா முத்தந்தருகவே. 48

தொல்லைப்பவவெங் கடன்மூழ்கித்
தொலையாத்துயருற் றேங்குமுயிர்த்
தொகுதிக்கருளுங் குரவனெனத்
தோன்று னிரண்டு மருங்கிலும்வாழ்
செல்லைப்பொருவு காரளகத்
தேவிமாருட் குறமடந்தை
செல்வாக்கதுகண் டுளத்தூடித்
தெய்வ யானைத்துரைமகடன்
னல்லற்பிழைப்புக் கவதியென்றென்
றசதியாடப் போந்தவளை
யணைக்கவள்ளி மனந்துள்ள
வஞ்சியுட்கோளவட் குணர்த்த
முல்லைமூரன் முறுவலிப்பாய்
முத்தந்தருக முத்தமே
முதுசீர்க் குமரகோட்டத்து
முருகா முத்தந்தருகவே. 49

அழியும்புவிமே லழியுடறந்
தழியாக்கதியி லெமைச்சேர்ப்பா
னடிமைகொண்டுன் புகழ்பாடு
மருஞ்சொற்பணிசெய் கெனப்பணித்து
விழியுங்குவப்ப காட்சிதரு
மெய்ம்மையருட்கென் கைம்மாறோ
விழைவார்விழையும் பொருண்முழுதும்
விரைந்தீந்தருணின் கொடைமடத்தா
லிழியும்பொருளெம் பாற்பெறலுன்
னிறைமைக் கழகோவிரவலரே
மிதயங்களிப்ப வருளமுத
மெமக்கிங் குதவக் கலைகளெலா

மொழியுநின்செங் கனிவாயான்
முத்தந்தருக முத்தமே
முதுசீர்க் குமரகோட்டத்து
முருகா முத்தந்தருகவே. 50

நாமான்புலவர் புகழ்ந்தேத்த
நாராயணக் கொண்டலினுந்தி
நளினக்குழந்தை நாணமுழு
நாவலோன்றா னெனவிளங்கிப்
பூமானிதய மகிழ்தூங்கப்
புரைதீர் கல்விமதுகையுடன்
பொலியெண்ணிறந்த பன்மொழியும்
பொன்றாதிலங்கப் பலகலைக
ளாமாறிசைத்துச் சமயங்க
ளகத்தும்புறத்து மிருபுறத்து
மமைத்தந் நெறிசார்மன்பதைகட்
கருள்கூர்ந் திதோபதேசங்கொண்
மூமா மழைபோற் பொழிவாயான்
முத்தந்தருக முத்தமே
முதுசீர்க் குமரகோட்டத்து
முருகா முத்தந்தருகவே. 51

கோவாமுத்த நகைவிளங்கிக்
கோவைபவளங் கவிர்தவிர்த்துக்
கோபங்கறுப்ப மிகச்சிவந்து
குலவுமறுகாற் பைஞ்சிறைய
மாவானுகரற் கருஞான
மணத்தேன் பிலிற்றி விதிபடைப்பின்
மருவாதொளிர்செங் குமுதமென
மலர்ந்துமலைமா மடமங்கை
தேவாமுதப் பொற்கலசமுலைத்
தீம்பாலுண்ட மணநாறச்
சிறந்துமுக்கட் டிருத்தாதை
செவிவாய் மடுப்பத்தெவிட்டாத
மூவாமழலை மொழிந்தருள்வாய்
முத்தந்தருக முத்தமே
முதுசீர்க் குமரகோட்டத்து
முருகா முத்தந்தருகவே. 52



**வேறு**

ஆறுகுண மாறுமத மாறந்த மாறுமதி
யாகவொளி ராறானனத்தும்
ஆறுபடை வீடெனத் தரளநகை நிலவுசெயு
மத்தாணி மண்டபமென
வீறுதலி னடுவணத் தவிசேறி யின்னருள்
விளங்குசெங் கோன்மைபூண்டு
வேதா கமத்துறை வகுத்துமன் பதைமகிழ
மெஞ்ஞான வரசியற்றிக்
கூறுசொற் பொருளுல கியங்கிட வியக்குங்
குருத்துவ சுதந்தரத்திற்
குலவியோ ராறுதிரு நாவரசர் வீற்றிருக்
கும்பெருஞ் சீர்த்தியென்று
மாறுத லிலாதொன்று மிருமூன்று செங்குமுத
மலர்வாயின் முத்தமருளே
மாக்குமர கோட்டமதில் வாழ்க்கைசெய வேட்டகுக
மலர்வாயின் முத்தமருளே. 53

ஆணவத் தத்துவித மாய்க்கலந் திச்சைசெய
லறிவற் றிருந்தவெம்மை
யவையுறத் தனுகரண புவனபோ கங்கடந்
தைம்பாச பந்தத்தினால்
வீணவத் தைக்குட் பொருந்திவிழை வால்வினைகண்
மிக்கீட்டி விண்மணரகின்
மேவிப் பயன்றுய்த் திறந்தும் பிறந்துமிக
விளையாடு சகலராக்கிக்
காணுமிரு வினையொப் பினிற்சத்தி பதியக்
கடைக்கணித் தருண் மூர்த்தியாய்க்
கசடறத் தீக்கைசெய் தீரைந்து காரியங்
காட்டிநற் சுத்தரெனவாழ்
மாணடிய ரொடுகூட்டி வீடருளு முருகவேண்
மலர்வாயின் முத்தமருளே
மாக்குமர கோட்டமதில் வாழ்க்கைசெய வேட்டகுக
மலர்வாயின் முத்தமருளே. 54

**வேறு**

*தனன தாத்த தனன தாத்த*
*தனன தனன தத்தன*

வடிவி லேற்ற மறவர் வீட்டு
வனிதை யிடிய னற்றினை
மதுவை யூட்ட மிசைவை வேட்டு
மதுர மளவு சிற்றுண
வொடிவி லார்த்தி யொடுசெ வாய்க்கு
ளுதவு மவள்க ரத்தினை
யுவமை நீத்த தெனவும் வாழ்த்தி
யுளமு முருகி முத்தமு
மிடுவை நோற்ற பரிசி னேத்து
மெமது துதிக ளைச்செவி
யினிது கேட்கும் விழைவு காட்டி
யிதய மலரி ருத்தலின்
முடிவி லாற்ற லுடைய வேற்கை
முதல்வ தருக முத்தமே
முமல மாற்று குமர கோட்ட
முருக தருக முத்தமே. 55

*தனன தாத்தத் தனன தாத்தத்*
*தனன தத்தந் தனதனா*

இருளை யோட்டற் கருளை யீட்டற்
கினிது னைச்சிந் தனைநிறீஇ
யிகலு மாற்றற் பொறிசென் மார்க்கத்
தினையொ ழித்துன் கழலுள்வார்
தெருள்செய் கூட்டத் தொருவ னாக்கிச்
சிறிய னுக்குங் கருணைநேர்
செயலி னாற்சொற் பணிக ளாற்றித்
திருமு னிற்குந் தகவுபா
ருருளை போற்சுற் றழியு மாக்கத்
துயர்வு நத்தும் பொருளதோ
வுனது மூர்த்திப் பரிச மேற்பட்
டொளிர்வ தெற்கின் றமையவே
பொருளி னூற்குப் பொருள்செய் காட்சிப்
புலவ முத்தந் தருகவே



பொருவின் மாட்சிக் குமர கோட்டப்
புனித முத்தந் தருகவே. 56

*தத்தத் தனன தாத்த தாத்த*
*தனன தத்த தனதனா*

இச்சத் துனது தாட்க ணோற்கு
மெனது சித்த முறைதலா
லெய்ப்புத் தவிர நோக்கு நோக்கி
லிரவி யொத்து மிளிர்தலான்
மெய்ச்சிப் புகழென் வாய்க்கும் வாய்க்கும்
விமலன் முத்த மிடலெனா
மித்தைப் பொருள வாக்கொ ளேற்கு
மிகுவி சித்ர நடனமார்
பச்சைக் கலபி மேற்கொள் காட்சி
பரிவொ டிற்றை யுதவியே
பற்றுச் சனன நீக்கி யாட்கொள்
பரிசெ னப்பன் முனிவர்சூழ்
கச்சிக் குமர கோட்டம் வேட்ட
கடவுண் முத்த மருள்கவே
கற்பப் பிரம ரேத்த.லேற்ற
கவிஞன் முத்த மருள்கவே. 57

கங்கையங் கோடீர மகுடனென் கண்மணிக்
கடவுளென் றேசிகனெனக்
கயமா முகத்தனென் றுணையெனப் பன்னியர்கள்
கௌரியெங் காதலனெனச்
செங்கமலை யருகனென் மருகனென விதியெனைச்
சிறைசெய்த விறையவனெனத்
தேவர்கோ னெமதுசே னாபதி யெனக்கலைச்
செல்விகுறு முனிகவிஞரெஞ்
சங்கையற வருளுமுழு நாவல னெனத்தாந்
தனித்தனி வியந்துபுகழத்
தகுமனையர் நான்பணவர் மாதவமுருக் கொண்டு
தகவினடை மேவி வரல்போற்

றிங்கண்முக மூவிரண் டம்புயமு நான்குமிளிர்
தெய்வநா யகன்வருகவே
சீர்க்குமர கோட்டத் திருந்தெலாஞ் செயவல்ல
சித்தர்பெரு மான்வருகவே. 58

மவுனவின் பச்செழுந் தேறல்பாய் வாரிச
மலர்த்தாட் சிலம்பலம்ப
மாழையி னியற்றுதிரு வரைஞாண் வயங்குபன்
மணியினங் கிண்கிணென்ன
நவமணி யிழைத்தபொற் கங்கணமு நான்கிலு
நலம்பெற நிறைந்தொலிப்ப
நகுவாகுவலயத் தடந்தோட் கடம்பினொடு
நாறுமளி பாண்மிழற்றக்
கவின்மகர குண்டலம் பரிதிமண் டலமெனக்
கதிர்கால விருமூன்றுவெண்
கலைமருவு திங்கண்முக மண்டலத் தீராறு
கண்களுங் கருணைபொழியச்
சிவனைமுத லியதேவர் வாழ்த்து திருவருண்ஞான
தேசிகோத் தமன்வருகவே
சீர்க்குமர கோட்டத் திருந்தெலாஞ் செயவல்ல
சித்தர்பெரு மான்வருகவே. 59

பாசொளிய மரகதத் திருமேனி யுமைமலர்ப்
பாதச் சிலம்பின் வந்துன்
பாற்படைத் துணைவீர ராமருவு மோரொன்
பதின்மரும் புடைசூழ்வரப்
பேசனையர் நாப்பணெம தய்யநீ வருபரிசு
பிரமன்முத லாகுமொன்பான்
பேருருவு கொண்டனைய ருடனாகு முதலாய்ப்
பிறங்குநவ கண்டநடுவில்
வீசுபுகழ் மேருபோ லாதார மாநிலையும்
வெய்யவனை யாதிகோள்கள்
வினையுற நடாத்துமொரு துருவனிக ராற்றலும்
விளக்கிவரன் மானுமென்னத்
தேசுருச் சித்தசன வாவுகட் டழகுடைச்
செல்வமுரு கோன்வருகவே
சீர்க்குமர கோட்டத் திருந்தெலாஞ் செயவல்ல
சித்தர்பெரு மான்வருகவே. 60



மித்தையிருள் சீய்க்குமொரு சோதிமர கதவெற்பின்
மேலெழுங் காட்சிபொருவ
மிளிர்பசுங் கட்பீலி மேனிழற் றிடமுதுகில்
வீற்றிருந் தெண்டிக்கினு
மத்திசைப் பாலகர் வணங்கிடப் பவனிபோந்
தவனிப் பரப்புமுழுது
மாயிரம் பைத்தலைப் பாந்தளுட னெளியநட
மாடியைஞ் சிறைபுடைத்துக்
கத்துகட னீர்வற்ற வெண்சண்ட மாருதக்
காலினையெழுப்பி யோரெண்
கார்வரையு நாகமுங் களிறுநிலை மாறவொரு
கடிகையில்வலங் கொள்கதிகூர்
சித்திர மயிற்பரி செலுத்திவரு சேவகத்
திருமுருக வேள்வருகவே
சீர்க்குமர கோட்டத் திருந்தெலாஞ் செயவல்ல
சித்தர்பெரு மான்வருகவே. 61

முந்நீர் முளைத்துநிமிர் சடையண்ட முகடேற
முடிகடலி னகடுதாழ
முரண்மாத் தடங்கவடு திசைவிளிம் பினைமுட்ட
முழுவெளி நிறைத்துமூடித்
தன்னீர்மை தடுமாறி மாயமாங் கொக்குருச்
சார்ந்துபொரு சூரனுடலந்
தான்போழ்ந்து மலையைப் பொடித்துமற் றசுரர்தந்
தானையின் முனைந்திகன்ற
வெந்நீர்மை யோரைத் தடிந்துயர் பிணக்குவியல்
வேதாள மாதிமிசைய
விழைவொடு விருந்தூட்டி வெற்றிகொண் டிமையவரை
விண்ணேற்றி வாழ்வளிக்குஞ்
செந்நீர் நிணங்குலவு தன்னேரும் வைந்நுதிச்
செவ்வேற்செவ் வேள்வருகவே
சீர்க்குமர கோட்டத் திருந்தெலாஞ் செயவல்ல
சித்தர்பெரு மான்வருகவே. 62

**வேறு**

ஆவி யிடத்தா ணவவிருளை
யவிக்கு மவியா வருள்விளக்கே

யருட்குப் போத நிவேதிப்பா
ரறிவை விழுங்கும் பரவெளியே
யோவி யம்போற் சிவயோக
ருண்ணுந் துஞ்சாப் பெருங்காலே
யுள்ளத் துணரார் புறத்துணர்வா
ருயிர்மா சலம்பு நறும்புனலே
தாவித் தொண்டு நெறிநிற்பார்
தமக்குப் போகந் தருநிலமே
சமர சத்தோர்க் கெங்குமொன்றாந்
தன்மை வாய்ந்த சின்மயமே
தேவி யொடுமே கம்பர்மகிழ்
சேயே வருக வருகவே
சேனா பதீசத் தருண்ஞான
சித்தா வருக வருகவே. 63

குருவா யெமையாட் கொளவருக
கொடுமா ணவந்தேய்த் திடவருக
குணமா ரருட்பே றுறவருக
குளிர்பே ரின்பந் தரவருக
விருவா தனைதீர்த் திடவருக
விறவா நலமீய்ந் திடவருக
வெமது கலிமாற் றிடவருக
விசைக்குந் துதிகேட் டிடவருக
மருவார் வணங்கும் படிவருக
வாழ்வு பெருகும் படிவருக
மறவா வரந்தந் திடவருக
மகிழ்வா னபயந் தரவருக
திருவார் கச்சி யேகம்பர்
செல்வா வருக வருகவே
சேனா பதீசத் தருண்ஞான
சித்தா வருக வருகவே. 64

வேறு

*தானான தான தானான தான*
*தானான தான தனதன*

மாவாது கூறி யோர்பாவ லோன்முன்
வாயார வோது துதிசெவி



வாயேறு நீடு சோணாச லேசர்
வாழ்கோயின் மேவு சிகரியின்
மூவாத தூணின் மேகார மீது
மோகாதி மாயை மலவிருண்
மூடாத சோதி மாரூப சேவை
மூதாதை யோர்கள் பிரபுடன்
நோவாது காண நேர்வா யநாளி
னோலாத யாமும் விழைவொடிந்
நூன்மாலை பாட நீயேவு வேலை
நூனாம லேசெய் தலினெதிர்
தேவானை மோக மாவேடர் மாது
சேர்மாலை மார்ப வருகவே
சேனாப தீச மேவாழ்கு மார
தேவாகு கேச வருகவே. 65

மார்பாடு நீடு வேடேறி யாடு
மாவோது பாணி னிசையிலே
மாறாது தோளில் வாழ்தூய சாரு
வாய்கூறு பாட னசையிலே
சார்பான தேவி மாரூடி டாது
தானாடி லீலை நெறியிலே
சாலோக மாதி மேலோக மீது
சார்ஞான யோக ருறவிலே
நேர்பாகு நேய நீமேவி னாலு
நேயாநு கூல னெனுமாத
னேரேயி நாளில் வாவாவெ னோசை
நீவாமை கூவென் விழிமுனே
சீர்பாட நாடு பாவாண ரோடு
தீராத மோக வருகவே
சேனாப தீச மேவாழ்கு மார
தேவாகு கேச வருகவே. 66

*தனன தாத்த தனன தாத்த*
*தனன தாத்த தனதனா*

அதுல மோக்க மருள்சன் மார்க்க
மணுகு தீர்த்தன் வருகவே
யருளை நீத்த கொலைசெய் தூர்த்த
வசுரர் கூற்றன் வருகவே

மதுவை யூற்று மலைகண் மேட்டின்
மருவு கூத்தன் வருகவே
மதன வேட்கு மயலை யூட்டும்
வடிவி லேற்றன் வருகவே
பதும மாட்சி கருணை பூத்த
பதினெ ணோக்கன் வருகவே
படிறு தீர்த்த புனித வார்த்தை
பகரெ தார்த்தன் வருகவே
முதுமை வாய்த்த மறைசொல் வாக்கு
முதன்மை யாத்தன் வருகவே
முனிவ ரேத்து குமர கோட்ட
முருக மூர்த்தி வருகவே. 67

## 7. அம்புலிப்பருவம்

### சாமம்

ஒழுகமுத மாயாது கற்பகத் தவர்மகிழ
வுதவலான் மிகுமாட்சிசே
ருயர்வான கத்தனாய் வாணிவந் தடிதாழ
வொளிர்கலா நிதியாகலாற்
றொழுகரத் தாரைநாற் பான்மருவ வைத்துச்
சுருக்கம் பெருக்கநல்கித்
துதிநாப்ப ணிசைமேவி வாழ்தலா லச்சந்
தொலைந்தோட நியமத்தினோர்
முழுகியெழு மலைவாய் விளங்குசர வணனாக
மூவுலகு மெச்சவரலான்
முழுதுமொத் துறையுமொரு பொருளென் றுனைக்கூவி
முளரிக் கரத்தழைக்கு
மழகனெம் முட்பழகு குழகன்முரு கேசனுட
னம்புலீ யாடவாவே
யமரர்கூட் டத்தர்பணி குமரகோட் டத்தனு
னம்புலீ யாடவாவே. 68

பெருமயின்மே லேறியிருளறக் கதிர்விடும்
பெருவேலை யினிதுகந்தாய்



பேதமற நின்னுடன் மருவியங்குறமான்
பிறர்க்குவகை நல்கநின்றாய்
நிருமலச் சோதியாய்க் குவலய மலர்த்தியணி
நீபந் துலங்கவருவாய்
நீள்கருணை பொன்றாது மாதரைப் புலவர்க்கு
நிலவின்ப மிக்கீகுவா
யுருமலிந் தொளிர்சங்க முத்தமிழ வாக்கடலி
னுண்மூழ்கி யங்குதிப்பா
யுன்செய்கை தன்செய்கை யொக்குமென் றெங்குரிசி
லுன்னொடா டலைவிழைந்தா
னருமைமலி சித்துவிளை யாடுமுரு கேசனுட
னம்புலீ யாடவாவே
யமரர்கூட் டத்தர்பணி குமரகோட் டத்தனுட
னம்புலீ யாடவாவே. 69

நிலையுற்ற வானாறு தலைமருவி முன்னாலு
நீள்கரந் தோன்றவருவாய்
நீதிக்கு மாறாது கீழ்மே னடக்கவொரு
நியமந் தனைப்படைத்தாய்
கலையுற்ற பட்சமா தத்தைநல் வாகுறக்
காட்டிப் புகழ்ச்சிபெற்றாய்
கல்லார மாலைமிக் ககலத் தடத்திற்
கமழ்ந்தலர மேவிநிற்பாய்
மிலையுற்ற கற்பகத் தாரளக வெண்ணாக
மீன்மாதர் நசையுளாயெவ்
வேளையுந் தற்குவமை சிறிதுமதி யாதசெவ்
வேளுனை மதித்தழைத்தா
னலையுற்ற சேவகம் விடுத்தெங்கண் முருகனுட
னம்புலீ யாடவாவே
யமரர்கூட் டத்தர்பணி குமரகோட் டத்தனுட
னம்புலீ யாடவாவே. 70

### பேதம்

தேய்ந்துவளர் வெண்கலைக ளீரெட்டு மாதவற்
சேர்ந்துறுவை நீயிவன்றான்
றேயாது வளர்கலைக ளெட்டெட்டு மாதவத்
தெய்வமுனி வர்க்கருளுவான்

காய்ந்திடப் பெற்றவ மதிப்புண்டு வீரனாற்
கறுவுபகை பெற்றாயிவன்
கருதுவெம் பகைவரைக் காய்ந்துநவ வீரருங்
கழல்பணியு மேன்மையுற்றான்
பாய்ந்துனைப் பாம்புண்டு மிழ்ந்திடு மிவன்மயிற்
பரியதனை யுண்டுமகிழும்
பற்றிய களங்கனீ யகளங்க னிவனடியர்
பாலுமது பற்றாதுகா
ணாய்ந்திடின் மிகப்பெரிய னெமதண்ண லாதலா
லம்புலீ யாடவாவே
யமரர்கூட் டத்தர்பணி குமரகோட் டத்தனுட
னம்புலீ யாடவாவே. 71

பூரணையி னின்முழு வுருக்கொண் டொளிர்ந்துபின்
பொன்றுபிறை யாகுவாய்நீ
பொன்றாத பிறைநுதலு மதிமுகமு மோராறு
பொலிவுறப் பெற்றானிவ
னாரணன் சேய்படைத் திடவருங் கடவுணீ
நானிலத் துன்போற்பல
நகுகதிர்த் தொகுதியைத் தனதுதிரு முகமொன்றி
னல்கும்பர் கோமானிவன்
சீரணவு மண்டமொன் றிற்புறத் திருளைச்
சிதைப்பைநீ புவனமுழுதுஞ்
சீவரக மலவிரு ளகற்றிப் புறத்துமொளிர்
தேசோ மயத்தனிவனாம்
ஆரணத் தலைவனினை வெகுளாமுன் வருகைநன்
றம்புலீ யாடவாவே
யமரர்கூட் டத்தர்பணி குமரகோட் டத்தனுட
னம்புலீ யாடவாவே. 72

ஒப்புண்மை நின்றனக் கஃதின்மை யிவனுக்கி
வுலகோத லுணராய்கொலோ
வூனவிழி காணவரு வாயிவன் ஞானவிழி
யுணரவரு சீலமுடையா
னிப்புவித் தேருருளை மத்தேறு தறியா
யிழுப்புண்டு கட்டுண்பைநீ
யெஞ்ஞான்று மிவ்வெளிமை யெய்திடா திவனேவ
லிம்பரும் பருமாற்றுவார்



செப்புவெண் மணியா னெனத்தோன்று வாயிவன்
றேவசுப் பிரமணியனாந்
திகழுமெந் தம்பிரான் றன்பெருமை யறியாத
செல்வக் குழந்தையன்பா
லப்பிரச் செங்கையி னழைக்கவும் பெறுதியோ
வம்புலீ யாடவாவே
யமரர்கூட் டத்தர்பணி குமரகோட் டத்தனுட
னம்புலீ யாடவாவே. 73

### தானம் — வேறு

தரிக்கு முடலின் முயற்களங்கைத்
தண்ணார் கருணை மலர்நோக்கஞ்
சார்த்தி யொழிப்பன் மார்க்கண்டன்
றனைப்போற் கலைகள் பதினாறும்
பரிக்கும் பேற்றி னுவாமதியாம்
பரிசீய்ந் தென்றும் விளங்கவைப்பன்
படப்பாம் பசுரர் பகைமயிலாற்
பரவு மயிலான் மாற்றுவிப்பன்
விரிக்கும் புகழ்வெண் ணிலவெங்கோன்
வெகுளா முனஞ்சென் றடைதியிவண்
வெகுண்டான் முக்க ணரன்சிரிக்கும்
விழிக்கும் புகல்வே றுனக்கெங்கோ
வரிக்கு மருகன் முருகனுட
னாட வருவா யம்புலியே
யணிசேர் குமர கோட்டனுட
னாட வருவா யம்புலியே. 74

திருக்கோ கனக மலர்க்கைவிரற்
செய்ய பவளந் தனிற்சுட்டிச்
செல்வக் குழந்தை யெம்பெருமான்
சேணோக் கியநின் முகநோக்கத்
தருக்கோ டிருத்தி நின்சிறுமைத்
தன்மை யிதிலோர் வியப்பின்றாற்
றருவும் புயலு மிருநிதியுந்
தாழுங் கொடையா னிவன்செல்வப்
பெருக்கோ ரணுவு முணர்ந்திலைநின்
பேதை மதிதீர்ந் தெய்தினருட்

பேறு பெறலா மிதனின்மிகு
பேறொன் றுளதோ பசுமயின்மே
லருக்கோ தயம்போன் முருகனுட
னாட வருவா யம்புலியே
யணிசேர் குமர கோட்டனுட
னாட வருவா யம்புலியே. 75

**தண்டம**

எம்மான் மகிழ்கூ றறக்கருணைக்
கிலக்கா கிலைநீ மறக்கருணை
யியற்றப் பெறுதி போலுமந்தோ
விகற்போ ராற்றன் முடிவில்லாள்
கைம்மா மலர்வேன் மழுக்குலிசங்
கணைகார் முகமங் குசங்கதையுங்
காணா யிவன்கண் சேப்புறினிற்
காக்கத் தேவர் மூவர்களும்
தம்மா லொல்லா தொதுங்குவர்நின்
றரமென் னாம்பி னென்படுவை
நன்னேர் பொன்மே ருவைப்புடைத்த
சதிரோற் பகைத்து முய்திகொலோ
வம்மான் மடந்தை கேள்வனுட
னாட வருவா யம்புலியே
யணிசேர் குமர கோட்டனுட
னாட வருவா யம்புலியே. 76

**வேறு**

*தனனா தனன தாத்தத் தனனா*
*தான தானந் தனதான*

தகர்நீ டிருகு கோட்டிற் குழைவாய்
தான நாகந் தனதோர்கை
தனிலே கவள மாக்கப் பெறுவாய்
சாரு மாவொன் பதுவீர
ரிகல்வா ரெனின்மெய் வாழ்க்கைக் குயிரே
தேறு மோர்பைஞ் சிகிசேவ
லிவைபாய் தரிலு னாட்டிற் கிடரா
மேவி னாலென் புரிவாய்சொன்



மிகுசூர் மடிய வீட்டிப் புகழ்சேர்
வீர னாரென் றொருகேள்வி
வினவாய் கமல வீட்டிற் றிகழ்சேர்
வேத னார்தந் தலையோதும்
அகழ்சூழ் குமர கோட்டக் குகனோ
டாட வாவம் புலிவாவே
யடையார் பணியும் வேற்கைப் பரனோ
டாட வாவம் புலிவாவே. 77

## 8. சிற்றில்பருவம்

ஒளிர்பைஞ் ஞீலப் புவனமெலா
முனதா டரங்கின் வகுத்தகன்னி
யுமையாள் மகிழ்ந்துன் றிருமேனி
யொழுகு மழகு முகந்துண்டு
குளிர்கண் காண வென்னருமைக்
குழந்தா யாடி வருகவெனக்
கோல முற்றத் துனைவிடுப்பக்
குறுகி யாஞ்செய் மணல்வீட்டை
யெளிதி லழிப்ப தறனேயோ
விருஞ்சேற் றுவயற் குரம்புதொறு
மிமிழ்வெண் பணில மிப்பியுளைந்
தீன்ற முத்த நிலவினகுந்
தெளிநீர்க் காஞ்சி நகர்க்குமரா
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
சீர்சால் குமர கோட்டத்தெஞ்
செல்வா சிற்றில் சிதையேலே. 78

கன்னி யன்னக் குழாங்குலவு
கமல மலர்ந்த கடற்கூலங்
கவினு முத்தக் குவைவாரிக்
கருத்திற் கிசைந்த படியாங்க
ளுன்னி வகுத்த மணியரங்க
முன்பொற் சதங்கைச் சீறடிக
ளுறுத்த நெய்த்தோர் குழம்பவழித்
தோடி யூறுபே றென்னைகொலோ

மின்னி முகில்பெய் சரற்கால
விண்ணத் தியங்கு மதியாடி
விண்மீன் மாலை பெற வேட்டு
மின்னா ரேறு நீண்மாடச்
சென்னிக் காஞ்சி நகர்க்குமரா
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
சீர்சால் குமர கோட்டத்தெஞ்
செல்வா சிற்றில் சிதையேலே. 79

மொழிக்கு மொழியின் னமுதொழுக்கு
முகிழ்வெண் ணகைச்செவ் வாய்க்கொடிச்சி
முலைவெம் முயக்கத் தவளடிகண்
முடிமேற் புனைந்து முழுநீல
விழிக்கு னழகு விருந்தூட்டி
மிச்சின் மிசைந்து வேட்டபணி
விரைந்தாற் றியது மொழிந்தேமா
வெள்ளை யானை மகளூடிப்
பழிக்க நின்ற தறைந்தேமா
பணியா துன்னை யிகழ்ந்தேமா
பல்கா னெறிச்சென் றிமிழ்திரைநீர்ப்
பாலி பாய வயற்பைங்கூழ்
செழிக்குந் தொண்டை நன்னாடா
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
சீர்சால் குமர கோட்டத்தெஞ்
செல்வா சிற்றில் சிதையேலே. 80

கருத்துங் கண்ணுங் கலந்துவப்பக்
கனிவாய் முத்தா டருட்சிவனார்
கங்கைச் சடையி லெண்டோளிற்
கவுரி யம்மை மடித்தலத்தின்
மருத்துங் கவனச் சிலம்பிலன்பர்
மனத்தில் வேதா கமமுடியின்
வதிந்து குனிக்கு மலரடிகள்
வருந்த வெங்கள் வண்டன்மனை
மிருத்து மாசு படச்சிதைக்க
மிறையென் புரிந்தேம் பொங்கழியில்
விரவிச் சாலி யொடுமுத்தும்
விளங்கக் களங்கண் டுழவர்மகிழ்



திருத்தொண் டீர நன்னாடா
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
சீர்சால் குமர கோட்டத்தெஞ்
செல்வா சிற்றில் சிதையேலே. 81

கருவே ரறுக்கு நின்கமலக்
கடைக்கட் கருணை மலர்நோக்கிற்
கனிந்த வருட்பே றடைந்திடவெண்
காற்புள் ளனையார் தொண்டர்சில
ரிருவே றுலகத் தருந்தவஞ்செய்
தேத்தி யிருப்ப வவர்க்கருளா
தெம்மை யடைந்தாய் நின்வருகை
யெங்கட் கின்ப முடைத்தாக
மருவேய் கூந்தற் காமக்கண்
மடந்தை தனக்கு மாலாதி
வானோர் தமக்கும் வரங்கணல்கி
மாத்தண் ணிழலில் வீற்றிருக்குந்
திருவே கம்பர் கட்புதல்வா
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
சீர்சால் குமர கோட்டத்தெஞ்
செல்வா சிற்றில் சிதையேலே. 82

### வேறு

கொற்றமிகு திருவருட் பேராற்ற லாற்கொடுங்
கொலைபுலை மறங்க ணீக்கிக்
கோளறுஞ் சன்மார்க்க நெறியொன்று பொதுமையிற்
குவலய மெலாந் தழைப்ப
நற்றவர் புகழ்ந்தேத்த வொளிர்ஞான சித்தனாய்
நண்ணிவெங் கலியின் வன்மை
நலிவுறச் சித்தாட நீதிரு வுளம்புரியு
நாளையெதிர் நோக்கி நின்றே
முற்றறிவி னுணர்திமற் றுணரா யெனப்பல
மொழிந்திங்கு மங்கு மோடி
முன்னிற்கு நினைமறந் தொழிபோதெ மறதியை
முனிந்தருளு மூர்த்தி யொப்பச்

சிற்றறிவி னேஞ்செய்து விளையாடு மிம்மணற்
சிற்றில் சிதைத்தி டேலே
தெய்வானை வள்ளிபுணர் குமரகோட் டசசெட்டி
சிற்றில் சிதைத்தி டேலே. 83

மூலமுத லாதார மூவிரண் டுச்சியின்
மூவாத மலர்மாளிகை
முன்னிச் சமைத்தெம் முடற்கோயி லுண்மன்னி
முதல்வநீ விளையாடல்போற்
கோலமிகு பலபெயர்ச் சிற்றறை வகுத்துட்
குயிற்றிய வடுக்களையினிற்
குமுதத் தடுக்கிய குறட்டினிற் செம்மணிக்
குவையொளித் தீயை மூட்டி
வாலரிசி முத்தென வுலைப்பெய்து சிறியே
மகிழ்ந்தட்ட வின்னடிசினின்
வயிறார வுண்கபின் மிச்சிலுண் பேமெங்கள்
வாஞ்சைக் குடம்படாமே
சீலமொடி யாஞ்செய்து விளையாடு மிம்மணற்
சிற்றில் சிதைத்தி டேலே
தெய்வானை வள்ளிபுணர் குமரகோட் டச்செட்டி
சிற்றில் சிதைத்தி டேலே. 84

கொல்லாமை புன்புலா லுண்ணாமை யறமெனக்
கூறினுங் கேளார்களைக்
கொடியகள் ளுண்டுமயன் மனைவிழைந் துங்களவு
கொண்டும்வல் லாடுநர்களை
யில்லாமை யாற்குறை யிரப்பார் தமக்கணுவு
மீயா வுலோபர் தம்மை
யியலும்வரு ணாச்சிரம நெறிகடந் திருமையிலு
மெய்தின் பிழக்குமவரை
நல்லாமை போற்பொறி யடக்காது மெய்வேட
நாடகங் காட்டுவாரை
நன்றுனைப் பாடாது மானிடம் பாடுபுன்
னாவரை மனந்திருத்தச்
செல்லாமை வந்தெம்மை யெதிரெனக் கொண்டெமது
சிற்றில் சிதைத்தி டேலே
தெய்வானை வள்ளிபுணர் குமரகோட் டச்செட்டி
சிற்றில் சிதைத்தி டேலே. 85



**வேறு**

*தனனா தனன தாத்தத்*
*தனனா தத்தத் தனதானா*

பொறியோ கவரும் வேட்கைப்
புலனோ புத்திக் குறவாகா
புவிமே லிலகு தோற்றப்
பொருளோ பொய்க்குப் பிறிதாகா
நெறியா லுயிரின் மேற்பட்
டுறைவாய் நித்தப் பொருளானாய்
நினையே யடையு மார்க்கத்
தினிலே நிற்றற் கெமையாள்வாய்
பிறியா விருளி னீக்கித்
தனுவார் பெத்தத் திசையூடே
பிறழா துணவை யூட்டற்
கனைநேர் பெட்புற் றொளிர்வாயே
சிறியோ மடியர் கூட்டத்
தயலோ சிற்றிற் சிதையேலே
திருவாழ் குமர கோட்டத்
தரசே சிற்றிற் சிதையேலே. 86

*தாத்த தனன தாத்த தனன*
*தத்தத் தனதானா*

கூற்ற மனைய தோற்ற மருவு
கொக்கைக் கிளையோடே
கூர்த்த வயிலின் மாய்த்து நிலவு
கொற்றத் தினைவானோர்
சாற்ற வுயர்வி ணாட்டை யுதவு
தற்குத் தளராயே
தாட்சி யகல வேட்கு மறவர்
தத்தைக் கினியாய்நீ
யேற்ற முடிவி லாற்ற லொளிர
வெட்டுத் திசையாள்வா
ரேத்த மயிலின் மேற்செல் பவனி
யெற்றைக் கருள்வாயோ
தேற்றி யெமையு மாட்கொள் குரவ
சிற்றிற் சிதையேலே

சீர்த்த குமர கோட்ட முருக
சிற்றிற் சிதையேலே. 87

## 9. சிறுபறைப்பருவம்

கும்பசம் பவமேவு குறுமனி யகத்தியற்
கும்பரவு பாணினிக்குங்
குலவுசெங் கைத்தலத் தமருக முழக்கியொலி
கூருமக் கரம்விளக்கி
நம்பனரு டென்கலையும் வடகலையு மறுபத்து
நாற்கலையு முற்றுமுணரு
ஞானபண் டிதனும்வெண் கமலா தனச்செல்வி
நான்முகக் குரிசிலாதி
யும்பருட னிம்பரும் பேரன்பி னடிதாழ
வொளிர்கலா நிதியுமானோ
னுவமையறு நீயென்ப தகிலாண்ட கோடிக
ளுணர்ந்திட வுணர்த்தலேய்ப்பச்
செம்பவள வாய்மலரு மாமறை முழக்கெனச்
சிறுபறை முழக்கியருளே
செல்வநிறை குமரகோட் டத்துவளர் திருமருக
சிறுபறை முழக்கியருளே. 88

ஞானியென் றொருபெயர் தரித்தெமது கொடியாகி
நாடோறு மொய்ம்பினிற்கு
நாதவடி வானசெஞ் சூட்டுவெண் சேவலஞ்
ஞானநித் திரையுண்மூழ்கு
மானிடரை யாமந் தொறுங்கூவி யெம்பெயர்கொள்
வான்வரவு ணர்த்தியன்னோர்
வைகறைக் கடனாற்ற நிறுவுசெயன் முன்னிகழ
மற்றதன் பின்னலறவிண்
மேனிமிரு மாயிரங் கைப்பரிதி வரன்மான
வெம்மலக் கங்குலறநும்
விழிகாண வருளொளி பரப்பியாம் வருதுமுணர்
மின்னெனப் பக்குவர்க்குத்
தேனிமிர் மலர்க்கரத் தறிவிக்கு நெறியினொரு
சிறுபறை முழக்கியருளே



சேனாப தீசர்மகிழ் ஞானோப தேசகுரு
சிறுபறை முழக்கியருளே. 89

ஆயிரங் கட்காமன் மேனா ளெமைப்பகைத்
தமராடி முடியிழந்தா
னனையற்கு நிழலீயு மைந்தரு வளித்தனை
யலாதுதிரு வாலவாயை
நீயிரங் காவன்மை யுடனழித் திடுமாறு
நேர்ந்தெமது நெடுவேலினா
னீர்வறப் புண்டுரு வழிந்தனை பழம்பகையை
நெஞ்சில்வைத் திரவுபகலாய்
வாயிரங் காநின்று மெம்பறை முழக்கினொடு
மாறுகொள வல்லையானாய்
வாயடக் குவலெனக் கடலொலி யடங்கிட
மலர்க்கையி னொறுத்த லேய்ப்பச்
சேயிரங் கிடவிரங் கருளன்னை யன்னவா
சிறுபறை முழக்கியருளே
திகழ்குமர கோட்டத்துண் மகிழ்முருக நாயகா
சிறுபறை முழக்கியருளே. 90

புயலினங் குன்றுதொறு நின்றுவெங் கோடையைப்
பொருதலி னிடித்துமின்னிப்
பொழியுமழை வெள்ளநீர்ச் சிறைசெய்யு மாக்களுட்
புளகமொடு தாமுழக்கும்
வியனுறு குறிஞ்சியின் றொண்டகப் பறையொலி
வினாயேனை நானிலத்தின்
மிகுபறை முழக்கந் தொடர்ந்திடுதல் போனினது
விளையாட்டி னோருறுப்பாய்
நயமிகும் பறைமுழக் கொலிமுந்த மற்றெந்த
நாட்டுநின் பருவச்சிறார்
நனிமகிழ்வி னாற்கொட்டு பறைமுழக் கந்தொடர
நற்றிணையி லங்குறைகுவோர்
செயலினின் முதன்மைநிலை நாட்டலிற் காட்டலிற்
சிறுபறை முழக்கியருளே
சேந்தனென் றொளிர்குமர கோட்டத்துள்
வளர்வேந்த
சிறுபறை முழக்கியருளே. 91

மந்திரம் பதம்வன்ன மொடுதத்து வம்புவன
மன்னுகலை யாறத்துவா
மருவுகுண் டலியாதி யிருமூன்று சத்திகளை
மலர்வதன மூவிரண்டா
லிந்திரனை யயனைநெடு மாலைமுக் கட்சிவனை
யேரம் பனைக்கரத்தி
லேந்துபல் கருவியாற் காட்டியிக் கடவுள
ரெலாமுநின் விபூதி யென்னத்
தந்திரம் புகலிறைமை வாய்ந்தது குணந்தோய்ந்த
சகளமாய் நிட்களமுமாய்த்
தன்னிகர் கடந்தசம ரசஞான வீடுதவு
தன்மையை யுணர்த்த லேய்ப்பச்
செந்தியம் பதிமுதல வாறுபடை வீடுளாய்
சிறுபறை முழக்கியருளே
திமிரமல மிரியவொளிர் குமரகோட் டக்குரவ
சிறுபறை முழக்கியருளே. 92

வேறு

பாவா னின்புகழ் பற்பல நாவலர்
பாடி முழக்கிடவும்
பைந்தார் நீபத் தளிகுல மவரெதிர்
பண்கண் முழக்கிடவுங்
கோவா மூமரர்க டுந்துமி யெழு ர்
கோளின் முழக்கிடவுங்
குலவறு மீனா ருமையர மகளிர்கள்
குரவை முழக்கிடவு
மோவா தனையர்க் கின்பருள் செயுமா
றொருபன் னிருகைமுகி
லுயர்குண பூதர மருவிக் கொடைமுர
சொன்று முழக்குதல்போன்
மூவா முருகன் குமரக் கோட்டன்
முழக்குக சிறுபறையே
மொய்குழன் மான்மகண் மோக விசாகன்
முழக்குக சிறுபறையே. 93

எம்மத முற்றவ ருந்துதி புரிசீ
ரிலகிய பலதளிசே



ரெழிலார் காட்சி பயக்குங் கச்சியி
லெய்தித் தவமாற்றிச்
செம்மையி னறமெண் ணான்கும் வளர்த்த
சிறப்பொடு பிலமேவுந்
தேவா சனமிசை மூவா வரசு
செலுத்துபு வீற்றுறையு
மம்மையு மாமகள் காமக் கோட்டமு
மரனார் மாநிழலி
லமர்திரு வேகம் பமுமிரு பாலுற
வவைநடு வொளிர்கோயின்
மும்முர சும்மதிர் குமரக் கோட்டன்
முழக்குக சிறுபறையே
மொய்குழன் மான்மகண் மோக விசாகன்
முழக்குக சிறுபறையே. 94

தொழுதகை யந்தண ராகம மீரிரு
சுருதி முழக்கமெனத்
துதிபுரி மன்னவர் கொற்றப் பேரிகை
தோயு முழக்கமென
வெழுதகை நாய்கர் மணம்புணர் மாமுர
சின்ப முழக்கமென
வேருடை வேளாண் மரபினர் மழைபொழி
யெழிலி முழக்கமெனப்
பழுதறு வந்தியர் வண்கொடை முரசிற்
பரவு முழக்கமெனப்
பரதியர் முழவ முழக்க மெனப்பலர்
பலவகை யுரையாட
முழுதுணர் புலவன் குமரக் கோட்டன்
முழக்குக சிறுபறையே
மொய்குழன் மான்மகண் மோக விசாகன்
முழக்குக சிறுபறையே. 95

*தனன தாத்தத் தனதன தனதன*
*தத்தன தனனதனா*

இரவை நீக்கித் திருவமு தினையெம
தெய்ப்பற வருண்மதியே
யிதய நாட்டிற் குடிபுகு மிருளற
விச்சையி னொளிர்கதிரே

பரவி யேத்தத் தமிழ்மறை யருள்கிரு
பைக்கட லெனுமதலாய்
பரம வீட்டிற் புகவடி யரைவிடு
பட்சமு ணெகிழவிடாய்
கரவின் வேட்டுக் குறமக ளொடுபுணர்
கட்டிளை மையினொருவா
கவலை மாற்றப் புவிமிசை வளர்தரு
கற்பக மனையகுகா
குரவர் வாழ்த்தத் திகழொரு குருபர
கொட்டுக சிறுபறையே
குமர கோட்டச் சிவசர வணபவ
கொட்டுக சிறுபறையே. 96

*தத்தன தத்தன தத்தன தத்தன*
*தத்தன தனதனனா*

கைப்புய லிற்புவி யுற்றவர் கட்கொரு
கற்பக மெனமிளிர்வாய்
கற்றவர் நற்றவர் சொற்றணி பற்பல
கைப்பறு துதிவிழைவா
யொப்புயர் வற்ற மகத்துவ முற்றொளி
ருத்தம குணநிதியே
யொற்றை மருப்புடை யத்திமு கத்தவ
னுக்குடன் வருதுணையே
துப்பும லைக்கிணை பெற்றவு டற்பர
சுக்கர தலன்மதலாய்
துட்டர்க ளைக்களை வெற்றிய யிற்படை
தொட்டெயு முரனுடையாய்
குப்புக ழுக்கலி யிற்றிகழ் மெய்ப்பொருள்
கொட்டுக சிறுபறையே
கொற்றவ மிக்குயர் கச்சிய ருட்குக
கொட்டுக சிறுபறையே. 97

## 10. சிறுதேர்ப்பருவம்

காரைக் கறுத்தசெங் கரதலத் தாமரைக்
கட்குலவு மாயிரங்கைக்
கனலிபல ரோருரு வெடுத்தாங் கிமைக்குங்
கதிர்க்கற்றை சுற்றுதெய்வச்



சீரைப் படைத்தவைஞ் ஞாங்கரைத் தாங்கிச்
செழும்படைத் துணைவீரருந்
தேவரு மிலக்கருஞ் சூழ்வரத் தேர்மிசைச்
சென்றசுரர் தானையொடுவெம்
போரைப் புரிந்தாயி ரஞ்சிங்க மாமுகற்
போக்கிக் கொடுஞ்சூரனைப்
பொருதவன் போராற்றன் முற்றுமற மாப்போழ்ந்து
பொருவிலிந் திரஞாலமாத்
தேரைத் தெறுஞ்சன்ன வீரப் புயாசலன்
சிறுதே ருருட்டியருளே
சிவகாஞ்சி வளர்தேவ சேனாப திக்கடவுள்
சிறுதே ருருட்டியருளே. 98

பைம்புய லிடித்தென முழக்கித் தடித்தெனப்
பாய்ந்துநவ வீரரோடு
பாரிடப் படையேவு தெய்வமாப் படைகளெம
படரெனவிடாது பற்றித்
தும்பைபுனை தானவர் கடற்றானை யிகல்வீரர்
தொடுபடை படப்பொடித்துஞ்
சூழனையர் கவசமெய் துளைத்துஞ் சிரங்கரந்
தோடாடு ணித்துமீள
வெம்புலைச் செம்புனற் கடல்பாய் பறந்தலையின்
மிகுபிணக் குன்றுநிமிர
வீய்ந்தவரை விண்ணுய்க்கு மாறுசெல் விமானமென
வீறவுணர் தேர்களுருளச்
சிம்புளென நின்றொரு பெருந்தே ருருட்டிறைவ
சிறுதே ருருட்டியருளே
சிவகாஞ்சி வளர்தேவ சேனாப திக்கடவுள்
சிறுதே ருருட்டியருளே. 99

அஞ்சேன்மி னென்றயர் சயந்தனுக் கிந்திரற்
கமரர்க்கு நேரபயமு
மவுணர்க்கு நேர்பயமு மெற்றைக்கு மற்றாக
வானேறு தாதை மேனாண்
மஞ்சேறு பொற்சிலைச் சிலைகொண்டு முப்புரமும்
வாணகைத் தீயின் மாய

வைதிகத் தேரென்றன் மானமுந் நீரிடை
வயங்கியம கேந்த்ரபுரியு
நஞ்சேறு துற்குணத் தாரகன் சிங்கமுக
னமனஞ்சு சூரபன்ம
னாற்றானை யும்பாழ்ப டச்சமர மிருமூன்று
நாளாற்றி வெற்றிகூருஞ்
செஞ்சேவ லங்கொடித் தேரேறு சேவகன்
சிறுதே ருருட்டியருளே
சிவகாஞ்சி வளர்தேவ சேனாபதிக் கடவுள்
சிறுதே ருருட்டியருளே. 100

வில்வப் பசுந்தொடையு மம்பொற் கடுக்கையும்
விராய்நாறு கோடீரமேல்
வெண்பிறைக் கண்ணிபுனை யேகம்ப வாணரொடு
மிளிர்காம நோக்கம்மையும்
வல்விக் கினத்தந்தி மாமுகனு மாமகண்
மணாளனும் விணாளு வோரு
மலரகங் கண்குளிர நின்னிரு மருங்கினு
மணித்தே ருருட்டிவரநீ
பல்வக்கி ரப்புவிப் பேய்த்தேரை நிகர்வாழ்வு
பற்றியுட் பித்தேறிடாப்
பக்குவர் வினைக்குன்று பொடிபட வுருட்டியருள்
பரிசினைவி ளக்கலேய்ப்பச்
செல்வக் குமாரகுரு பரமுருக நாயகா
சிறுதே ருருட்டியருளே
சிவகாஞ்சி வளர்தேவ சேனா பதிக்கடவுள்
சிறுதே ருருட்டியருளே. 101

வேறு

பிறக்கும் பிறவி போக்கிடனும்
பிறந்தார்க் கிறவி நீக்கிடனும்
பீடார் முத்தி தருமிடனும்
பிறங்கெண் சித்தி வழங்கிடனு
மறக்கு முன்றா தையர்தாயர்
மருவு தமரைக் காட்டிடனு
மணிவே திகைநீள் பணைதவிசு
வயக்குந் தாருத் தடம்பறவை



வெறிக்கும் பொதும்பர் பொய்கைசிலை
வெளிகூ வலினாம் விம்மிதமு
மிகுகாஞ் சியினு ளாச்சிரம
மேன்மை விளங்கச் சைவநெறி
சிறக்குங் குமர கோட்டத்தாய்
சிறுதே ருருட்டி யருள்வாயே
செவ்வேண் முருகப் பெருமாளே
சிறுதே ருருட்டி யருள்வாயே. 102

அலுத்த சத்தி யுடைமையினீ
யடியார்க் கருளுந் திறனோக்கி
யடிகேள் வேட்ட தருளுகென
வகத்துட் கவலை மாற்றுகெனக்
கலித்த பிணிநோய் போக்குகெனக்
கடுங்கோண் மயலை விலக்குகெனக்
கனவாழ் வீய்ந்து காக்கவெனக்
கனிவாற் காலை மாலையிலஞ்
சலித்த கரத்தார் வலர்பலர்நின்
றடமா மதிற்பொற் கோயிலெய்தித்
தாட்டா மரைக டொழுதேத்தித்
தாந்தா நேர்ந்த பொருட்பகுதி
செலுத்துங் குமர கோட்டத்தாய்
சிறுதே ருருட்டி யருள்வாயே
செல்வ விசாகப் பெருமாளே
சிறுதே ருருட்டி யருள்வாயே. 103

ஊர்க்கு நடுவாழ் கற்பகம்போ
லோங்கி யன்பாற் கழல்பணிவார்க்
குசித விபூதி வழங்குதலா
லும்பர் காம தேனுவென
யார்க்கு மமுத மூட்டுதலா
லிருமா நிதிபோன் றெம்போல்வார்க்
கிம்மை மறுமைச் சுகந்தரலா
லெழின்மும் முரசு முழங்குதலா
லார்க்கு மணியாற் குடமுழவா
லைவாச் சியத்தாற் கரிபரியா
லணியாற் பருவ மகோற்சவத்தா
லாறு கால பூசையினாற்

சீர்க்குங் குமர கோட்டத்தாய்
சிறுதே ருருட்டி யருள்வாயே
திகழா றுமுகப் பெருமாளே
சிறுதே ருருட்டி யருள்வாயே. 104

வேண்டா திருக்க வேண்டாதும்
வெறுப்பொன் றாது பொன்றாதும்
வேட்ட விரும்புங் கவர்விரும்பும்
வீறுந் தருவாய்த் தருவாய்நீ
யாண்டா யெம்மை யாள்கின்றா
யாறு குணந்தோய்ந் தொளிர்ஞான
மளிப்பாய் சித்தி யெலாங்கொடுப்பா
யமலா னந்த வீட்டுய்ப்பா
யீண்டா ரெமக்கு நிகரென்று
ளிறுமாந் துனதா ளேத்துகின்றே
மெந்தாய் நின்றன் விளையாட
வெங்கட் கருளு நீரதன்றோ
சேண்டாழ் குமர கோட்டத்தாய்
சிறுதே ருருட்டி யருள்வாயே
திருக்கார்த் திகேயப் பெருமாளே
சிறுதே ருருட்டி யருள்வாயே. 105

**வேறு**

*தனனத் தாந்தத் தனனத் தாத்த*
*தனத்தன தனதானா*

தெளிவுற் றோங்கித் தினநிற் போற்று
திறத்தினில் விலகாதார்
திருவிற் சாந்தப் பெரியர்க் கூட்டு
செயற்குள மிளையாதார்
விளிதற் கேங்கித் துயிலற் றார்த்தி
மிகத்தவ முயனீரார்
விவிதத் தீங்குக் கொலையைத் தீர்க்கும்
விருப்புட னருளாள்வார்
களியுற் றீண்டுத் தழைதற் கேற்ற
கருப்பொருள் பெறுமாறே
கருதித் தாம்பற் றறமுற் றாற்று
கடைப்பிடி நமுவாமே



யொளிர்நற் காஞ்சிக் குமரக் கோட்ட
னுருட்டுக சிறுதேரே
யுயர்சித் தாந்தத் துரிமைத் தீர்த்த
னுருட்டுக சிறுதேரே. 106

*தனதன தனனத் தாத்தன தான*
*தனத்தன தனதானா*

நிருமலர் விழியிற் பூத்தொளிர் ஞான
நிதித்திர ளனையானே
நிபுணர்கள் பரவத் தோற்றரு மோன
நிலத்திடை யுறைவானே
தருமலி கனகப் பார்க்குயர் வாழ்வு
தரற்கென வருதீரா
தமியனுண் மருவிப் போற்றிடு மாறு
தடுத்தடிமை கொள்சேயே
செருமலி யசுரத் தூர்த்தர்கள் வீறு
சிதைத்தொளிர் கதிர்வேலா
திருவரு ணகிரிப் பேர்க்கிளி யோது
திருப்புகழ் நசையானே
யொருமயின் முதுகிற் காட்சிவி நோத
னுருட்டுக சிறுதேரே
யுருவளர் குமரக் கோட்டவி சாக
னுருட்டுக சிறுதேரே. 107

**கச்சிக் குமரகோட்டக் கடவுள் பிள்ளைத்தமிழ் முற்றிற்று**

உ

# கழுகுமலை
# அருள்மிகு சுப்பிரமணியக் கடவுள் பேரில் பிள்ளைத் தமிழ்
## தவத்திரு சிதம்பர சுவாமிகள்
## 1. காப்புப் பருவம்
### கணபதி

பூமங்க ளாகரவி நாயகப ஜேமந்த்ர
பூஜிதகு ணாமிர்த மகா
பொங்கமலி கொம்புலவு கிம்புரிது லங்குசம்
பூரணசு பங்குல வவும்
நாமங்க ளாரணச தாவிம்ப கரடமழை
ஞானம்பு ஜங்குல வவும்
நவரஞ்சி தாசிர்ய விகடகங் கணாதர
நடனசுந் தரம்பெ ருகவும்
சேமங்கெ டாதபய றுங்கடலை யும்பொரி
திரண்டயெள் ளுண்டை போளி
தேன்குழல் நறுங்கதலி மாம்பழ விளாங்கனி
தினம்படைத் துப்போற் றுவேன்
ஓமங்கி டாதவர மேதந்திஞ் ஞாலமதி
லுன்பாத சேவை தருவாய்
ஓங்கார மும்ப்ரணவ ரீங்கார மும்பழகு
முன்றம்பி தமிழ்த ழையவே. 1

### திருமால்

சீர்கொண்ட செங்கட் பரந்தாம தெய்வீக
தீர்த்தப்ர சாத தேவா



செம்பருந் துப்பரத சீங்குழ லிசைக்யான
தேனா மிர்தச்செவ் வாயா
பார்கொண்ட பாற்கடற் பள்ளிகொண் டாடும்
பரப்ரம ரூப பஞ்ச
பாண்டவர் சகாயபரி தூண்டிரத சாரதய
பத்ம நாபா முகுந்தா
வார்கொண்ட பைந்துளப மாலையணி மார்பா
வராகவை குண்ட நாதா
மதுசூத னாசரண மிதுவேளை வந்தெனது
வாக்கிற் புகுந்தா ளுவாய்
ஏர்கொண்ட கழுகா சலக்கருணை நாயக
னிலங்குங் குழந்தை வடிவாய்
யின்புற் றிருத்தல்போ லென்பத்தி பெருகிவள
ரிங்கிதத் தமிழ்த ழையவே. 2

### சரசுவதி

ஞானமக் கட்கிதய நாட்டத்தி லன்புருகு
நண்புப்ர சங்க வடிவாய்
நவரத்ன மணிமா லிகைச்சட வலங்கார
நளினவெண் டோட்டு லாவும்
மோனசித் தத்திட நவீன சித்ரக்கலை
முடிக்கொங் கையால் மருங்குல்
முற்றிலும் வளைந்திடக் கற்றவர்கள் சொற்புலன்
முதிர்ச்சித் தெளிச்சி வாழ்க
தேனினெக் கைப்பிழி செயற்பா விளக்கெனத்
தெய்வப்ர சாத சரணத்
தெண்டனிட் டேனெதிரில் வந்தருள் புரிந்துனது
சேவையுந் தந்தா ளுவாய்
வானர்தொக் கப்பரவு த்யானபச் சக்குமர
வள்ளல் புள்ளிக் கலாப
மயில்மீது விளையாடு மொயிலான முத்தமிழ்
மகத்வ மங்காது லவவே. 3

### அகிலாண்டவள்

மும்முலைப் பெட்புலக செம்மைபெற் றெழில்வளர
முத்தொ ழிற்குஞ் சிறந்த

மோக்கத்தி லுங்கருணை நோக்கத்தி லுங்கயிலை
முக்கட் சுடர்க்கி யன்ற
நன்மையிற் றன்மைவிரி ஞானப்ர சங்கத்தில்
நயனஞ் செலுத்தி விண்ணோர்
நாட்டத்தி லுந்தொண்டர் கூட்டத்தி லுங்குலவி
நற்றவப் பேறு பெறவே
தன்மையிற் றன்மன தயாளஞ் செலுத்திடச்
சாமர்த்ய புள்காங் கிதச்
சாம்பவி பதாம்புய துலாம்பர சலாஞ்செயச்
சந்தர்ப்ப விடையி லருள்வா
யம்மைபக வதிகுமரி யகிலாண்ட வல்லியெ
னாத்மப்ர காசி நீயே
யாதலா லித்தருணம் வேண்டினே னுன்மக
னனுக்ரகத் தமிழ்த மையவே. 4

**சிவன்**

மத்தகக் கோட்டிப மதத்தைப் பொழிந்தடல்
மடங்கா மனத்தி வேச
மார்க்கத்தி டித்தகுர ஊக்கத்தி னால்மதுரை
வருபோது நகரி லுள்ளா
ருத்தமர றிந்துவெரு வுற்றரசன் முன்சென்
றுரைக்க வந்தோ சுந்தரா
வூழிநா ளோபுதுமை யென்கொலோ நன்றென்
றுணங்கி நின்பாற் செப்பிட
வத்தருண முற்றபகை யைக்கடிந் துலகுபுக
ழானந்த வடிவ மாகி
அடியார் மனத்துளே யகலா திருக்கின்ற
வப்பனே யிதுவே ளையில்
முத்தர்க் கினித்தவுன் புத்ரசந் தானவேல்
முருகன் குழந்தை யாகி
முன்னின்று விளையாடு மென்னற் றமிழ்க்கருள்
முகாந்தரந் தரவ ருகவே. 5

**காளி**

பராபரி சுகானந்தி நீலியெண் டோளிபரி
பாலினி வராகி யோகி



பஞ்சாக் கரச்சட பயங்கரிப வானிதிட
பாரிட கணங்க ளாட
சராசரம் நடுங்கிடத் தேவர்கடு ணுக்கமுறு
சண்டாள மகிடா சுரன்
றலையைப் பிளந்துகுடர் குருதிச் செழும்புன
றதும்பத் தடிந்த சூலி
தராதலசிம் மாசனி சங்கடவி மோசன
சாம்ப்ரா ணிவாச கத்தி
சத்திகுண நாயகி சமர்த்திசெக தாயகி
சடாமகுடி தவபூ ரணி
நிராமய நிரஞ்சனி நிர்ணய சவுந்தரி
நித்யகல் யாணி ஜோதி
நேசமந்த் ரானுபூ திக்குமர நற்றமிழ்
நிதிக்குதவு தருண மிதுவே. 6

**திருமகள்**

கானச்சு ரும்பர்முரல் கமலக் கிழத்திவெண்
கற்பூர தீப சரணி
கலியுக நிரந்தரீ கலாபவல் லிக்ரீட
கனதன கதாப்ர சுங்கி
வானர்க்கு மிவ்வுலக மனிதர்க்கு மரசுபுரி
மன்னர்க்கு மதிக செயலாள்
வாக்கினிக் குஞ்செபச லாக்யசிங் காரி பொருள்
வாழ்வுக்கு மனவி வேக
தானதர் மப்புராண சகசமில் லாரெலாஞ்
சந்தோஷ மேகொ டாத
தாழ்வுக்கு மறிகுறி யெனத்துலங் கும்படி
சகத்திற் சொலிக்கும் நீயே
நானறிவி லாதபிச் சாகிலும் தாயென்ற
நன்மைச் சகாய மோங்க
நயனமூ வாறிலகு நளினவே லன்றமிழ்
நலம்புரிந் தருட ருணமே. 7

**நான்முகன்**

புவனத்தி லுள்ளமுன் யாபேரு மாதவம்
பூத்ததா லுண்மை ஞானம்

புரிகின்ற தாலவற் குபகார சங்கற்ப
புத்தி தீக்ஷண்ய சீலம்
கவனித் தளிப்பதுன் கடமையன் றோவேத
கர்த்தா வும்நீ யல்லவோ
கமலால யத்துளே புக்கிருந் தோதிமக்
காக்ஷிக் கிணங்கி வாவா
எவர்னித்த வெண்டோட்டு முண்டகக் கோதைவள
ரெழில்நா முகப்ர தானத்
தின்பப்ர சாதக்ருபை நண்பைக் கொடாவிடி
லிருந்தென்ன போயென் னநீ
சுவணப்பொன் னாபரண சுந்தர சுதந்தரச்
சுப்ரமண் யத்தெய் வமேற்
சொல்கின்ற நற்றமிழ்க் கருள்புரி கிர்பாகரா
சோதிப்ர காச வடிவே. 8

### முருகன் திருப்புகழ்

வம்போடு லாவுமணி மாலிகைபொன் னாபரண
மும்போடுல் லாசகுவ டோகடைவ லோசிறுத
னம்பீடி ராவடிவமோ மழைக ளோகுழல்கண்
வடிவேலோ

மங்காம யூரநடை யோமினிடை யோவதனம்
வண்டார்த டாகமல ரோகதலி யோதுடைகள்
மன்றூல மோகனவி காரகுண மோடிகள்செய்
மடமானார்

கொண்டாடு பாசவலை யாலுழல் செவ்வாயமிர்த
முண்டீய்கை நீதியற நூல்களறி யாதபடி
திண்டாடு மாடுமனை யாளர்தலை வாசலெதிர்
திரிபோதில்

கொஞ்சோலை மீதெழுதுத் யாககவி பாருமுல
கஞ்சாத வீரவிஜ யாகர்னவு தாரவென
வுஞ்சொலி நீளவிப காரகவி பாடுதொழி
லுழலாமல்



உன்பாத சேவைதரு வாயரகரா பரம
கெம்பீர கோலவத னாசமைய மீதருள்செய்
தன்பாத மேகெதியே னாநினைவி லாதவரந்
தருவாயே

ஒண்காத லோடுகுளிர் கானுலவு மாதுவளது
கண்பார்கிர் பாகரிசு சீலிகுயி லேமனதி
லெண்சேர்த யாளமுட னீயெனவம் மாதுதருந்
தினைமாவை

யுண்டேழின் மாமண விநோதநல் விவேககுக
பண்டார ரூபகர சேவல சதாபுவன
விண்டோர் தயாளகவ னாமுருக தேவநய
குணவாழ்வில்

ஒண்டாத பேயர்குலை காரர்தடி மூடர்சர்
சண்டாளர் [illegible]மலப்
பெண்டாளு லாவுகழு காசலவி சேஷமுயர்
பெருமாளே. 9

### இடும்பன் வணக்கம்

குடவயிறுகு லுங்கிடப் பூரணவி
கடகவளனு டன்பிறப் பாலுரக
வெரினடனமி டுஞ்சொலிப் பூர்திமயி
லுலவமிர்தவு டம்பகற் பூரகுக
திடகுழகதொ மும்பருச் சாடணச
ரணகருணைவி ளங்குபத் மாசனசு
ருதிவரதப்ர மன்செவிக் கோதுப்ரண
வசரவணவி ளம்பரத் ரோணகர
கடகளிறுக லங்கிடப் போதுகுளிர்
மடுபொருதவ லங்கிர்தப் பாரதவி
ஜெயனிதயமி ணங்குசக் ராயுதம
குடகெருடனி னிடஞ்சொ லித்தார்மருக
வுடுவிகசித மின்சரக் கோலமணி
குலவகலனி டங்குறிப் பானமொழி

புகலருமைபொ ருந்தெனக் காதரமு
ருககுமரவி ரும்புநற் காவடிகொ
டிடரகலந டந்துதைப் போடுவரு
பொழுதிவடமி ருந்துனைக் காதல்பெரு
கிடவனதின முந்துதித் தேவருவி
பரகவனமொ முங்குறப் பேணுசெயல்
லிடவதனகு றுஞ்சிரிப் பாரணவ
ரதகழகசு ரும்பெனக் கோமளபன்
னிருனயனசு தந்தரத் தேபழம்நீ
யெனவளர ணங்கெழிற் பூதகண
துடிமுரசுமு ழங்கிடச் சூழ்பணில
தொனிபழகவி யந்தவச் ரானுபவ
னுலகமரரி லங்கிடச் சோலைதிக
ழுவணகுடி ருந்தபெட் பாலபமுன்
றடிகடகக ரம்பிடித் தோகைமன
மடவிடயம கன்றிடச் சேவைதரு
திடகனகக டம்பனுக் கோர்துணையி
லிலகுசிதவி டும்பநற் பாவருளே. 10

### வேறு சந்தம்

புலவர்வி ருப்பக்ரு பாகரப் பூக்கழற்
புனிதக டப்பக்க லாமயிற் கூத்தினிற்
புடவிக டப்பப்ப ணாமுடிக் கூச்சலிற்
புரசைமி திப்பெட்ப யிராவதத் தார்க்கரு
டலைவனெ னப்பத்ம தேவனைப் பார்த்திது
ததிப்ரண வத்திற்ற ராதரத் தார்ப்பர்ய
தயிரிய சிருஷ்டிப்ர யோசனத் தீர்க்கசொற்
றகைமைகொ டெற்குச்சொல் வாயெனக் கேட்கவே
புலனல னற் றுச்ச லாமிடப் பார்ப்பவ
புயலை நடத்தப்பு லோமிசைக் கேற்பவன்
புதல்வி மணப்பக் குதூகல ஸ்ரேட்டர்கள்
புகழுரு மைக்குக்கு டாவெனத் தோத்திரம்
குலவுக ரத்திற்ப்ர மாதிடச் சேட்டையின்
குணமறு குட்டிற்ற னாண்மையைத் தீர்ப்பவன்
குழகன கத்திற் சதாநமைக் காப்பவன்
குமரி மணிக்கொற்ற வேலினைப் போற்றுவாம். 11



## 2. செங்கீரைப் பருவம்

காமக்க டுங்கனலின் மாய்கைக் களங்கமுறு
காற்றெடுக் கப்ர பஞ்சக்
கவலைத் தடாகத்தி லுழலக் களேபரக்
கன்மப்ர பல்ய மூளத்
தாமக்க ளொடுசென்ம சஞ்சிதப் பின்னல்போற்
றக்கசண் டாளம் வளரச்
சலியாத பேரின்ப சாகரம கான்கடன்
சங்கட மியாவு மொன்றாய்
நாமக்க டாமுடித் ரோக ராகப்புவி
நலிந்தோ ருதார லோப
நாட்டத் தியக்கமுறு வாட்டக் கலக்கமற
நம்பிக்கை கொண்டு பேணச்
சேமக்ரு பாகரசெ பத்தைக்கொ டுக்கும்நீ
செங்கீரை யாடி யருளே
செகமெய்த்தி டக்கழுகு மலையைப் புரக்கும்நீ
செங்கீரை யாடி யருளே 12

நாற்பெருங் கோட்டுக்க லங்கார மலிமுகடு
நவரத்ன மணிவி லாச
நவநீத குஞ்சரத் தருநீழ லுலவிடா
லபியோடு காத்தி ருக்கக்
கோற்பெருகி லாதவுண ரெமநாட கத்துறு
குறும்புக்கு வெருவு ராத
கோட்பாடி லாதெமது கோவொடு வியாகுலங்
கொண்டுளே மெம்மை நீயே
காப்பவ னெனத்தேவ ரிமையிலா நாட்டங்
கடாவித் துதித்து நிற்கக்
காரியம் நடக்கமன வீரிய மடங்கிடாக்
கருணைமழை பொழித யாளச்
சீர்ப்பெருமை மங்காத தெய்வக் குழந்தைநீ
செங்கீரை யாடி யருளே
செகமெய்த்தி டக்கழுகு மலையைப் புரக்கும்நீ
செங்கீரை யாடி யருளே. 13

மும்மைத் தராதல முகூர்த்தப்ர சன்னமும்
மூர்த்திப்ர யோக மாகி

முக்கட் சுடர்க்கனல் செனிக்கப் பறந்தபொறி
மூலத்து லோக நியாயச்
செம்மைக்கு மெம்மனோர் நன்மைக்கு முன்னுளோர்
செல்வச் செருக்க கல்கிலாச்
சேமங் கொடுக்குமிச் செல்வாண்டி யென்மக
டிருக்கல்யா ணஞ்செய் வனேல்
எம்மைச் சவாரிதரு நிழலரசு முடிதந்
தெமர்க்கெலாஞ் சேனா பதி
யென்றிந்த்ர பட்டங் கொடுக்கு மோகத்துட
னிருக்கிறான் முன்வா சலில்
சிம்மப் பறட்குநிக ரெல்லோரு மெய்க்கநீ
செங்கீரை யாடி யருளே
செகமெய்த்தி டக்கழுகு மலையைப் புரக்கும்நீ
செங்கீரை யாடி யருளே. 14

பெற்றன்னை மலைநீலி பெருவயற் றைங்கரப்
பிள்ளையா ரைக்கொஞ் சுவாள்
பிறைசூடி வுன்தந்தை பேய்கொண்ட சுடலையிற்
பொடிபூசு ப்ரீதி யாலே
சிற்றன்னை கலகமிட் டேசவும் பேசவுந்
திருவோ டெடுத்த னாளிற்
றில்லைக்கு ளாடெடுத் தடிபட்டு மைத்துனன்
செயல்கண்டு மாடு மேய்த்து
சுற்றன்னம் வாங்கியுண் டலைபோதி லுனதண்ணர்
தோன்றுபுண் யத்தி னாலோ
தொண்டர்கள் மயக்கிலோ் வண்டர்க டுயக்கிலோ
சோதியாய் வந்த மர்ந்தார்
தெற்றென வெழுந்தவர்கள் சூழநான் வாழநீ
செங்கீரை யாடி யருளே
செகமெய்த்தி டக்கழுகு மலையைப் புரக்கும்நீ
செங்கீரை யாடி யருளே. 15

பார்க்கச் செழுங்கருணை மங்காத பூதரப்
பண்டார வேட மாகிப்
பஞ்சாக் கரங்கொடுத் தண்டர்க ளிடுக்கம்
பறந்திடத் தெய்வ ஞானங்



கோர்க்குங் கடம்பார கூவிள சராசரக்
குறிப்புக் கிசைந்த மோக
குஞ்சிதப் பாதசெயல் ரஞ்சிதப் பரதநிலை
கொண்டாடு மந்த்ர கீதம்
பூக்கச் சதாகவன மங்கலச் செழுங்கதி
புகுப்பக் கலாப மஞ்ஞைப்
பொங்கரவ மும்புவன முங்கடல் நடுங்கப்
பொருப்பினில் நடித்து மண்ணோர்
சேர்க்கைக்கும் விண்ணவர்கள் வாழ்க்கைக்கும் வந்தநீ
செங்கீரை யாடி யருளே
செகமெய்த்தி டக்கழுகு மலையைப் புரக்கும்நீ
செங்கீரை யாடி யருளே. 16

**வேறு சந்தம்**

தேவிக் கொருசுத னெழிலற் புதகுக
சிங்கா ரன்சீலத்
தெளிவைப் புகல்பவ ரெவரிப் படியுளர்
திந்தா வென்றாடுங்
கோவிற் பெருமைகள் குலவப் பரமர்
குழந்தா யென்றோதார்
குடிகெட் டழிவது நிசமெய்ச் சரத
குணஞ்சே ருஞ்சாமி
நாவிற் றிருவுள நளினத் தினிய
ரசந்தோ ணுந்த்யான
நசைமைத் துனன்மரு கமணிக் குமர
நயம்பே சும்ப்ரீதி
சேவற் கொடிமணி திகழ்பொற் புயசெப
செங்கோ செங்கீரை
தென்பவ ணக்கிரி மங்கள சற்குண
செங்கோ செங்கீரை. 17

காக்குந் திடசட கருணைப் புணரி
கலந்தே தொண்டாளர்
ககனப் பெருவெளி கதுவத் துணைபுரி
கந்தா முன்வாவா
பூக்கம் பழகெழில் புதுமைக் கழல்புனை
பொன்போ லென்பாள்முன்

புளகத் திருநகை முறுவற் குமைமகிழ்
பொங்கே சிங்கார
மாக்குஞ் சிறுவனின் னழகைக் கடைவிழி
யன்பே கொண்டேபார்த்
தமையக் குமர சரவணக் கொலுவி
லமைந்தார் சந்தோஷஞ்
சேர்க்குங் கதிர்மணி சிவணச் செசுப
செங்கோ செங்கீரை
தென்பவ ணக்கிரி மங்கள சற்குண
செங்கோ செங்கீரை. 18

மார்பா டக்கர மணியா டக்கர
வளையா டக்கடல்சூழ்
மண்ணா டத்தரு விண்ணா டச்சிகை
மலரா டச்சிகிகள்
சீரா டப்பத செயலா டப்புரி
செபமா டக்கமலத்
திருவா டத்தரு சிவனா டத்துதி
திடமா டத்தமையன்
போரா டச்செறி புலனா டச்சட
பொடியா டத்தருவாள்
புகழா டக்குறள் புடையா டப்பல
பொருளா டப்பவளத்
தேரா டக்கெணி தெளிவா டற்புத
செங்கோ செங்கீரை
தென்பவ ணக்கிரி மங்கள சற்குண
செங்கோ செங்கீரை. 19

வதனமி லகுபவ ளமுறுவ லிளநகை
வரிசை புரிந்தாட
மதுரம ழலைமொழி வளரந டனகுரல்
மயிலெதிர் நின்றாட
மதியிர விபிருகு கலகமு னிவனரன்
மகனிவ னென்றாட
மறைவிரி பொருளதி சயமதி சயமென
மகிழொடு நின்றாட



துதிபர கெதிக்ருபை புரிவிம ரிசைவளர்
துளபனும் நின்றாட
தொழிலொடு கமலம துறைபவ னுளமலி
துணையுட னின்றாட
அடலவு ணர்கள்குல மினிமுழு தழியுமென்
றாடுக செங்கீரை
அரிமகள் மரிமகள் கிரிமக டுணையென
வாடுக செங்கீரை. 20

திலகவ னிதையர் விளரியிசை யுடையர்
செறிந்தார் நின்றோர்பால்
சிறுநகை புரியம ருவுசுர்தி வழமைசி
றந்தார் நின்றோர்பால்
பலகலை தெளிபவ ரரவுல கரசர்
பணிந்தார் நின்றோர்பால்
பகடெம னொடுமய னயனிர விமதி
பயந்தார் நின்றோர்பால்
கலியுக வரதக ருணைமழை பொழிசெயல்
கண்டார் நின்றோர்பால்
கரதல துடிமுழ வதிர்தொனி நிருபர்
கனிந்தார் நின்றோர்பால்
அலகில தரகர வெனுமொலி மகிமையி
லாடுக செங்கீரை
அரிமகள் மரிமக கிரிமக டுணையென
வாடுக செங்கீரை. 21

## 3. தாலப்பருவம்

பாவுந் தொடையும் பதவிகற்பம்
பழங்கார ணங்கள் பலவிதமாய்ப்
பவணக் கிரியிற் றிருவுளம்போற்
பாவித் திருக்குங் கடவுளரே
கூவுங் கிளியே வருணகிரி
குரலே தேனே குறத்திவடக்
கொங்கைக் குடத்தைப் புரக்குமணக்
கோலா கலனே குலவிளக்கே

நாவின் சுவையே நவரசமே
நலனே கலனே நயகுணமெஞ்
ஞானக் கொழுந்தே நறுமலரே
நலுங்கே தெலுங்கே நனிசிறக்கு
மாவின் பெருமைக் கழுகுமலைக்
கரசே தாலோ தாலேலோ
அகிலாண் டவட்கன் றுதித்தவருட்
கடலே தாலோ தாலேலோ. 22

சேலுங் கணையும் பிணையுமிணை
செகுத்த கருங்கட் டோகையர்தான்
றிரியக் குறிக்கு மோதிமங்க
டியங்கக் கமலப் பள்ளியறை
மேலுங் குலவும் பார்ப்பினந்தன்
வியன்றாய் வரவைக் காணாத
வெறுப்பா விறக்கை பறப்பனபோல்
விதிர்க்க மேதிக் கன்றுள்ளிப்
பாலுஞ் சுரக்க மடுவழங்கிப்
பரப்புஞ் சேற்றிற் பருகியபின்
பசிதீர்ந் துறங்கப் பசுந்தேரை
பழக்கக் களிப்பிற் றாலாட்ட
லாலும் பொழில்சூழ் கழுகுமலைக்
கரசே தாலோ தாலேலோ
அகிலாண் டவட்கன் றுதித்தவருட்
கடலே தாலோ தாலேலோ. 23

வீக்கிப் புரக்கு மென்கச்சு
வெடிக்கப் பருத்த வேட்கைமுலை
விருப்பக் கொழுந ருழுதொழிலார்
வெறுக்கப் பார்த்த கட்கருணை
நோக்கக் குறிப்பின் றண்டேறல்
நூங்கு மழலை மொழிபயின்று
நோன்மை காட்டி நுவன்றிருகை
நொடிக்கத் துடித்து நுதற்புருவந்
தூக்கச் சினத்தைத் தவிர்த்திருகாற்
றுணையைப் பிணிக்கத் துகைகமடத்



தோட்டுப் படத்தின் பிடிநழுவித்
துதிக்கத் திகைத்தோர் தனக்கடிசி
லாக்கும் பழனக் கழுகுமலைக்
கரசே தாலோ தாலேலோ
அகிலாண் டவட்கன் றுதித்தவருட்
கடலே தாலோ தாலேலோ. 24

வேனிற் குலவு மயிலினங்கள்
விளங்கும் பொழில்வாய் விண்மடவார்
மின்போற் பறந்து வாவிகளில்
மிளிர்நீ ராடி வீசுகுழல்
நானத் தூமம் பரிமளிக்க
நறும்பூங் கரத்தாற் சிக்காற்றி
நடக்கக் குளிர்கா லத்தருண
நலத்தைக் காட்ட நடம்புரிந்து
கானச் சுரும்பர் பாட்டயராக்
கமலம் பூத்துக் கட்சொரியக்
கண்டு வியக்க மனத்தழுங்கு
கஞலக் களிக்குங் கற்பகநா
டானிற் பெருமைக் கழுகுமலைக்
கரசே தாலோ தாலேலோ
அகிலாண் டவட்கன் றுதித்தவருட்
கடலே தாலோ தாலேலோ. 25

மாட்டைக் குறித்தம் மாட்டினுயிர்
மடித்து நடித்து மணிவேலை
வரவைப் பார்க்க வடகாற்று
மதிக்கத் துதிக்க மன்மதுரைக்
கோட்டைக் கொடுத்தார் கட்செவியைக்
குறிக்கி வசிக்கக் குலவழுதிக்
கோமான் மரபுக் கருங்கலன்போற்
கொழுக்கும் பிறையார் குலுங்குசடைக்
காட்டைத் தரித்த கடவுளருங்
கமலக் கோவுங் கண்ணனொடு
களிக்குங் குழந்தைப் பருவசெயல்
காட்டிக் கலபச் சிகியில்விளை

யாட்டைப் புரிந்த கழுகுமலைக்
கரசே தாலோ தாலேலோ
அகிலாண் டவட்கன் றுதித்தவருட்
கடலே தாலோ தாலேலோ. 26

## வேறு சந்தம்

ஞாலத் திருண்மலி சுவடத் தவுணர்
நமன்போல் விண்பூமி
நலியக் குரல்திமிர் சிலையிற் கணைதொடு
நண்பார் கொம்பூதச்
சாலத் தொழில்புரி சமரிற் கடுநிகர்
சண்டா ளங்கேண்மைத்
தறுகட் பகைவர்க ளுயிரைப் பருகு
தவஞ்சேர் கங்காளி
வேலுக் கதிபதி விசயச் சடில
விடஞ்சேர் கண்டாகர்
விமலக் கடவுளர் திலகச் சரவண
விம்பா சந்தானக்
கோலப் பரிமள பவணக் கிரிவளர்
குன்றே தாலேலோ
குஞ்சரி வள்ளி குடங்கை வளர்ந்த
கொழுந்தே தாலேலோ. 27

காவித் துணிமணி கலபச் சிகிநடங்
கண்டோர் கொண்டாடக்
ககனப் பெருவெளி கவனத் துடையவர்
கண்பா ரென்றோதப்
பூவிற் குறள்பசி புகுதக் கருணை
புரிந்தார் தன்பாலா
புதுமைப் பழனியி லிளனிப் பழவகை
பொன்றா திந்த்ராணி
கோவிற் குலமகள் குறவச் சிறுமி
குணந்தே டுந்தேவர்
குடியற் புதமுயர் கொலுவைப் புரிசெயல்
குன்றா மெஞ்ஞானந்
தாவிற் பொலிகழு குமலைச் சரவண
தாலோ தாலேலோ



சங்கரி தந்தப்ர சங்க பரஞ்சுடர்
தாலோ தாலேலோ. 28

மூலத் தெழுகனல் முடுகப் பரவெளி
முங்கா மஞ்சாளி
முனிவர்க் கிகபர முதவக் கருணை
முயன்றார் கங்காணி
மாலுக் கிடர்தவிர் மருகப் புதுமை
மயங்கா தன்பாகி
வதனத் தருள்மழை பொழியப் பொதிகை
வதிந்தோர் கொண்டாட
வேலைக் கொடுகடு விடயத் தவுணரை
வென்றோ யென்றாடும்
மிருகப் படர்துதி சமரிற் புகுதிட
மின்கோ லம்பேசுந்
தாலத் தருள்கழு குமலைச் சரவண
தாலோ தாலேலோ
சங்கரி தந்தப்ர சங்க பரஞ்சுடர்
தாலோ தாலேலோ. 29

வாணிக் கிழவிவிண் மலிகற் பகநிழல்
வண்டார் மண்டூகம்
வனசத் தலையணை யொழுகிற் பழகிட
வந்தாள் சங்கீதம்
பேணிக் கரமலி பெருமைக் கலையுணர்
பெண்பால் தன்காமி
பிரமப் பிரணவ மறைகற் றுலகு
பிறந்தான் றென்பூமி
காணிக் கொருதுணை ககனச் சுவர்தொடு
கங்கா டன்பாலா
கருணைக் கலியுக வரதப் புகழ்மலி
கந்தா வென்போர்சோ
தாணிர்த் தனகழு குமலைச் சரவண
தாலோ தாலேலோ
சங்கரி தந்தப்ர சங்க பரஞ்சுடர்
தாலோ தாலேலோ. 30

தேரிற் கொடிபரி சிவணக் கதியொடு
சென்றா னென்றூழ்வாழ்
செகமெய்த் தருள்மழை பொழிபொற் சாண
செபஞ்சேர் கங்காளர்
போரிற் புலவர்கள் புகழிற் றிருவருள்
பொன்றா தன்பாலே
புதுமைப் பரத குதுகலைக் குடிலை
புரந்தாள் கெம்பீரி
நேரிற் கரதல நிலையிற் புகுத
நினைந்தாள் விண்சோலி
நிலைபெற் றடியவ ரிதயத் துசிதம்
நிரைந்தே பொன்கோலத்
தாரிற் பொலிகழு குமலைச் சரவண
தாலோ தாலேலோ
சங்கரி தந்தப்ர சங்க பரஞ்சுடர்
தாலோ தாலேலோ. 31

## 4. சப்பாணிப் பருவம்

பாலசந்த் ரோதய சடானன தடாகப்
பகீரதித் தெய்வ கங்கைப்
பஞ்சாக் கரப்பதிக நமசிவய ஸோடஸப்
பக்திப்ர சாத ஞான
சீலசம் போகரசி வாலய புராதனச்
சித்தசன் மார்க்க ரூப
சிங்கார ருத்ரப்ர சன்னகோ லாகலத்
திவ்யபொற் புப்ர காச
தூலதோ ஜோன்மய சுகப்ரம கயிலாய
சூட்சவன் யாய கவடத்
துர்க்கந்த பாதாள நரகமுதல் யாவையுந்
தூர்த்து காந்தப் பிரளயத்
தாமபதீ தாமிர்த நடம்புரி சிவன்குமர
சப்பாணி கொட்டி யருளே
சதுர்முக னிணங்குபர கெதிமகன் வணங்கிட
சப்பாணி கொட்டி யருளே. 32



சேற்கொடி பிடத்திடச் செழியர்கோ னரசியற்
சேர்க்கைத் துவாத சாந்தச்
சித்திபக் திப்பெருமை முத்திக்கு முன்னின்ற
தெய்வீக மதுரா புரி
மாற்கரிய பூத்தான மரகதப் பெண்கிளி
மனத்துக் குகந்த கடவுண்
மாறியா டச்செழிய னார்வமங் காதுரக
மண்ணும்விண் ணுந்து திக்க
வாக்கொளி மனத்தொளி வழக்கொளி விளக்கொளி
மகாத்மத் ததீத வெளியில்
மல்குபே ரின்பத்தி லாழ்கின்ற தொண்டர்கள்
மயங்குறா தேம னெஞ்சிற்
றாக்குகா லூன்றிநட மிடுதந்தை யெதிர்நின்று
சப்பாணி கொட்டி யருளே
சதுர்முக னிணங்குபர கெதிமகன் வணங்கிட
சப்பாணி கொட்டி யருளே. 33

கற்பகத் தருநீழ லரசியற் குலிசனுங்
கண்ணாட்டி யிந்த்ராணியுங்
காமர்பூங் கொம்பிடைத் துவண்டசைய வூர்வசிக்
கன்னிபூ லோகரம்பை
பொற்புலவு மேனகை திலோர்த்தமை வசீகரப்
புலவோர்கு ழாஞ்சுற்றிடப்
பூரித்து வெண்கரித யாரித்து விண்ணைப்
புரப்பதற் கிந்த்ரநீலத்
துப்பிலோர் தேர்மரக தப்பாவை கைக்கிளி
துவர்க்கிலுக் குப்பொன்னூசற்
றொட்டில்சிறு கட்டிலொடு சீர்வரிசை கொணர்ந்து
சோதியைப் பார்க்கவந்தார்
தப்பிலா ரின்பத்தி லாழ்வதற் கெதிர்நின்று
சப்பாணி கொட்டி யருளே
சதுர்முக னிணங்குபர கெதிமகன் வணங்கிடச்
சப்பாணி கொட்டி யருளே. 34

ஞானதுங் கக்கலக நாரதன் கெர்ஜித
நவீனசிந் தைப்பெருமையால்

நாவழங் கச்சுருதி ஞாலவிந் தைக்குறவர்
நாமபண் புக்குரிமைசேர்
மோனதொந் தப்படு விவாகமின் கைச்சரச
மூலசங் கற்பநினைவில்
மூடடண் டட்டடட டுடுடுண் டுட்டுவென
மோதுசண் டைப்பறைகளால்
யீனதண் டக்கலக சூரவஞ் சத்தனுயி
ரீய்தல்சண் டற்கெனவரு
மீசசந் தச்சரப பாலகந் தப்புலவ
வேமுறும் பக்திவிரத
தானசங் கத்தமிழ்வி லாசகுன் றிற்குலவு
சப்பாணி கொட்டியருளே
சதுர்முக னிணங்குபர கெதிமகன் வணங்கிடச்
சப்பாணி கொட்டி யருளே. 35

பூர்வீக சென்மசா பல்யமில் லாதுலகர்
பொய்க்கான லிரதாச்சர்யப்
புனலென்று மதிகொண்டு திரிகின்ற மான்போற்
புராதன வழக்குமல்கு
வார்யோக சாதனவ தீதநூற் சங்கநன்
மார்க்கத்தி லெண்ணமில்லா
வஞ்சத் திருட்டுலவு நெஞ்சப் பகட்டர்மனை
மக்கள்சம் பத்துளான
சீர்மோக கொலைகளவு கட்குடி முதற்பல
திடத்தைப் புரிந்தகெட்ட
சித்தப் பெருக்கர்குல முற்றத் துறந்தெவர்ன
சித்ரக் கலாபமஞ்ஞைச்
சார்பால யக்கடவுள் வாழ்வே கடப்பகுக
சப்பாணி கொட்டியருளே
சதுர்முக னிணங்குபர கெதிமகன் வணங்கிடச்
சப்பாணி கொட்டியருளே. 36

**வேறு சந்தம்**

ஞானத் தருண்மழை பொழிதற் குனதடி
நம்பா வம்பேசார்
நரரைக் கொடுநர கிடைபுக் கிடுதல்
நலந்தா னென்போர்பால்



மோனச் சுடர்மணி முருகப் புலவ
முகஞ்சூழ் தண்டேன்வாய்
முறுவற் கிடையிடை யமிர்தத் தொனிவள
முந்தே னுந்தோனுங்
கானக் குறவர்கள் கலகத் தருள்புரி
கந்தா செந்தூரா
கவிகைப் பெருமித மதுரைக் கரசி
கரும்பா டன்பாலா
கூனற் பிறையணி குடிலற் கொருசுத
கொட்டுக சப்பாணி
கொங்குல வுங்கழ லிங்கித ரஞ்சித
கொட்டுக சப்பாணி. 37

வார்க்குஞ் சரசசிலை மகிமைத் துளப
மணஞ்சே ருங்க்ரீடர்
மருகச் சரவண பவகுக் குடகர
வண்டா ருஞ்சோலை
பூக்கும் பரிமள புனிதக் குலமலர்
பொங்கா ரஞ்சூடும்
புவனத் தடியவ ரிதயப் பெருமை
புரிந்தாள் கெம்பீரா
காக்குந் தினகர கதிரற் புதமலி
கண்பா ரென்போர்வாழ்
கதிவிற் பனசுப கனகப் பழநீ
கனிந்தாள் பண்டாரா
கோக்கொம் பதிர்திட குறவர்க் கருள்சுக
கொட்டுக சப்பாணி
கொங்குல வுங்கழ லிங்கித ரஞ்சித
கொட்டுக சப்பாணி. 38

மாயப் புணரி மயக்க வலை
வதிந்த குறும்பர்களால்
வருதுற் குணசெய லழியற் கெனதிடம்
வந்து பிறந்தவனோ
நீயிப் புவியென நிலவிற் பொலிகுறி
நின்ற நறுந்துவர்வாய்

ஞிமிறுக் குணவு தமிர்தத் தொனியுமை
நெஞ்ச மகிழ்ந்தணையா
டாயத் தடமுலை தரநிச் சயலபி
தங்கு கரங்களினாற்
றழுவிக் கொளகொள மவனமுத் தொழுகு
சரங்குல வுஞ்சொற்களாற்
கூயப் பழமறை குமுறத் தெளிவொடு
கொட்டுக சப்பாணி
கொங்குல வுங்கழ லிங்கித ரஞ்சித
கொட்டுக சப்பாணி. 39

வேதப் பொருள்விரி விடையத் தொழில்புரி
விஞ்சை பொருந்திடவாழ்
விமலத் தருமகள் விகிர்தப் பணிமணி
விம்ப கடம்பமகா
சீதப் புனல்வயல் சிவணப் பழநி
தினம்புரி யுந்திருநாள்
செறிபற் பலவிம ரிசைபெற் றழகு
சிறந்தப்ர சங்ககுகா
போதத் திருவுள புதுமைத் தவசு
பொருந்து வரந்தருவாய்
புலமைச் சரவண புனிதக் கடவுள்
புயந்தழு வுஞ்சிறுவா
கோதற் றமரர்கள் குடிபுக் கிடவெதிர்
கொட்டுக சப்பாணி
கொங்குல வுங்கழ லிங்கித ரஞ்சித
கொட்டுக சப்பாணி. 40

வானத் திரவியை மதியைப் புவிபொழி
மழையைச் சுழிமுனையின்
வடிவைப் பரிமள மலரைப் பரகெதி
வழியைத் தொனிகடலை
கானச் சரவண கனகச் சடமலி
கனியைக் கடவுளரைக்
கலியைப் பலிதரு கணையைப் புலவர்கள்
கவியிற் புகழழகை



ஞானப் பரவெளி நயனக் கிர்பைமலி
நதியைச் சிகியினில்வாழ்
நடனைத் துணைபுரி கடனைத் திருவுள
நலனைத் தருநிழலார்
கோனைத் தொழுமென வோதுத் தமரெதிர்
கொட்டுக சப்பாணி
கொங்குல வுங்கழ லிங்கித ரஞ்சித
கொட்டுக சப்பாணி. 41

## 5. முத்தப் பருவம்

முடங்கன் மதிய மிழைத்தவெயில்
முயற்றீங் கற்று முடித்தபிரான்
முறுவற் காட்சி குதுகலிப்ப
முனியத் தீய்த்த முப்புரங்க
ளடங்கப் பார்த்த பார்வையினா
லழியா தழியு மென்றுலகி
லாண்மைக் கோப மாய்கையிலா
தருளிற் குளிக்கு மடியவர்போல்
வடங்கொஞ் சாரப் பூண்முலையாள்
மகிமைப் புரக்கு மகிலாண்டாள்
மடிமீ திருந்து முத்தமிட
மகிழ்ச்சி கூர்ந்த கும்பமுலைக்
குடங்கை சேர்த்துப் பால்கொடுக்குங்
குழந்தாய் முத்தந் தருகவே
கொற்றக் கவிகை செழித்தகழுக்
குன்றே முத்தந் தருகவே. 42

வாவா முருகா சிறுகுழந்தை
வடிவே வுன்தாய் மாமன்வந்தார்
மயிற்குஞ் சிதுபார் நறுங்கதலி
வாழைக் கனியு மாங்கனியுங்
கூவாச் சேவற் குஞ்சுமுன்கை
கொடுக்கும் படிக்குக் கொண்டுவந்து
கொடுத்தா ரென்று கூவிநிற்குங்
கோதை யகிலாண் டவட்கெதிரே

பூவா முறுவற் பூத்திடப்பின்
பூத்த முறுவ லோடுகண்ணைப்
போத்தி நடக்க முத்தமிட்டுப்
பொறுக்கென் றெடுத்த சீராளா
கோவே மணியே குருபரனே
குமரா முத்தந் தருகவே
கொற்றக் கவிகை செழித்தகழுக்
குன்றே முத்தந் தருகவே. 43

ககன வெளியி லடியவர்பாற்
கருத்துக் கோட்டை யிட்டுமனக்
காலை நிறுவிப் புலனைந்தின்
கட்டுக் கதவல் நிலையாக்கி
செகமீ தீயா லோபகுணச்
செருக்கைச் செகுத்த வைராக்யத்
திடத்திண் கொடியா லலங்கரித்துச்
சீர்த்தி மணிகள் சேர்மாட
மிகவுண் டாக்கி மெய்ஞ்ஞான
விளக்கைப் பொருத்தி நிட்டைநிலை
விலகா திருக்குந் திருவுளத்தின்
மெத்தை விரித்து விளையாடுங்
குகனே வுமையாள் சிறுகுழந்தைக்
குமரா முத்தந் தருகவே
கொற்றக் கவிகை செழித்தகழுக்
குன்றே முத்தந் தருகவே. 44

அப்பா வண்ணன் றப்பிதங்க
ளதிக மென்னக் கயிலைவள
ரய்யன் கேட்கக் கடலைபொரி
யப்ப முருக்கு தோசைவடை
யொப்பும் போளீ யெள்ளுண்டைக்
கூரார் சிரிக்கப் பாதையினின்
றுண்டா னென்ற போதரனா
ருண்மை தானோ கணபதிநீ
செப்பா யென்ன யிவன்குறத்தி
தினைமா வுண்டா னென்னவுமை



சிரிக்க நறும்பூங் கொம்பரெனச்
செழிக்குஞ் செழியன் பொற்பாவை
குப்பென் றெடுத்து முத்தாடுங்
குமரா முத்தந் தருகவே
கொற்றக் கவிகை செழித்தகழுக்
குன்றே முத்தந் தருகவே. 45

அய்யா வரனே முன்பிறந்த
வண்ண னடித்தா னவன்செவியை
யடியேன் கிள்ள மறுபடியு
மவன்கண் ணெண்ணும் போதுதுதிக்
கையோ ரொம்ப நீளமென்னக்
கரத்தாற் பிடித்து முழமளந்து
காட்டச் சினந்தா னோடிவந்தேன்
கணத்தி லென்னக் கனபதியும்
வைதான் முருக னென்றுரைக்க
வடிவேல் சிரிக்க வகிலாண்ட
வல்லிக் கொடியுங் கடவுளரும்
வழக்கில் மகிழ நான்மறைகள்
கொய்பூங் கனிவாய் கொஞ்சவந்த
குமரா முத்தந் தருகவே
கொற்றக் கவிகை செழித்தகழுக்
குன்றே முத்தந் தருகவே. 46

**வேறு**

பொற்சதங் கைக்கனக குஞ்சிதக் கிண்கிணி
புலப்பந் திமிர்ந்த சரணம்
புந்தியிற் றோன்றுஞ் சராசர மழைக்கின்ற
பொட்டக மெனத்த ழைக்க
விற்சரத் தாமரை விநோதவத னச்செவாய்
விரல்சுவைத் திதழ்கள் குவிய
வெண்ணகைப் பனிமுறுவல் பூத்துநான் மறைகுமுற
வித்வப்ர சங்க ஞான
கற்சரப் பன்னிரு கரக்கங் கணஞ்சொலி
கபீனகுஞ் சந்து லங்க
கந்தப் பசுங்குழவி மழலைப் பசுந்தேன்
கரும்புக்கு வார்த்த நீர்போல்

மற்சரச் சிலைகொண்ட மங்கைதா லாட்டிலெமை
வாழ்விக்கு முத்த மருளே
மன்னர்க்கு மதுரைவளர் தென்னர்க்கு மரபிலக
வைத்தவோர் முத்த மருளே. 47

முகில்முழங் கக்ககன வெளியுலா வக்கனக
மோகனஞ் செறிகோபுர
முட்டப் பறந்ததங் கக்கொடி மரத்தடி
முருந்தின் சிகண்டிமூரல்
செககா வடிச்சன்னி தித்தொண்ட ரின்பஞ்
செழித்திடுங் கழுகாசலச்
சேத்ரபஞ் சாக்கர முகூர்த்தப்ர மானந்த
செங்கைப்ர சன்னவடிவேற்
பகவசங் கற்பப்ப தாம்புய கிர்பைக்கடற்
பண்டார மென்றதீத
பஜனாமிர்தத் தொனிமிர் தங்கசெய கண்டிவிண்
பார்த்திபர் முழங்கல்செய்ய
மகிமைகொஞ் சிக்குலவு பரலோக துணைஞான
வள்ளலே முத்தமருளே
மன்னர்க்கு மதுரைவளர் தென்னர்க்கு மரபிலக
வைத்தவோர் முத்தமருளே. 48

புள்ளிக் கலாபமயி லுஞ்சேவ லுங்கருணை
பூத்தவை தீகசெல்வப்
பொட்டகத் தெய்வக் கொழுந்தே கடம்பம்
புனைந்தசெல் வச்செருக்கே
வெள்ளிக் கிரிக்கடவு ளுள்ளுக் கிளர்ச்சிதர
விண்ணுளோ ரரசுவாழ்க
வேண்டிப் பிறந்தமுரு காண்டிக் குகாகங்க
வெற்புக்குண் டானமணியே
தெள்ளத் தெளிந்ததினை மாவுண்ட வாயனே
செக்கர்ப்ர காசவடிவே
தெட்சண சடாமகுட லட்சணக்ரு பாகரி
செகத்திற் சமர்த்திகொங்கை
வள்ளத்தி லமுதுண்ட மழலைப் பசுந்தேன்
மலிந்தவாய் முத்தமருளே



மன்னர்க்கு மதுரைவளர் தென்னர்க்கு மரபிலக
வைத்தவோர் முத்தமருளே. 49

வெள்ளப் பெருக்குற்ற கடலைச் செகுத்தமுனி
வித்வப் புகழ்ச்சி பொங்க
வீரப்ர தாபத்தி லுபதேச கற்பக
விளக்கே விளக்கி னொளியே
குள்ளக் குறட்கன்ன மிட்டமீ னாம்பிகை
குடக்கொங்கை யமிர்த மூரக்
குமுதத்தை யழகான பவளத்தை யொத்தவாய்
குறுநகைச் செம்மை காட்ட
துள்ளித் திரிந்தமயிலுஞ்சேவ லுங்கனக
தோரணக் காட்சி தோன்ற
சோதிக்கு மவுணர்கள னீதிக்கு மறுமுகத்
தோன்றலாய் வந்து தித்த
வள்ளற் பெருக்கே மகாசன விளக்கே
வணங்கவோர் முத்த மருளே
மன்னர்க்கு மதுரைவளர் தென்னர்க்கு மரபிலக
வைத்தவோர் முத்த மருளே. 50

பொற்பதிக் கன்னியர் குழாஞ்சுற்ற நடனப்
பொலன்கொடி துவண்ட தென்ன
போர்த்தமுத் துக்கவிகை காத்தசித் ரக்கங்க
பூதர விசாக ஜோதி
விற்பொலி கரம்பனீ ராறுமுக முங்கனக
விண்ணாட்டு மங்கை குறவர்
மின்பாக நகர்வலந் தோன்றுநா ளஞ்சலி
விளங்கும்ப்ர காச மான
கற்பதித் துலவுமுடி ராவணன் பருவதங்
கைவேழ மெகின பாய்மா
கதிமணிப் பல்லக்கு புட்பக விமானங்
கலாபமயிற் குறளி லங்கு
மற்புயக் குருபீட மாணிக்க தீபமே
வள்ளலே முத்த மருளே
மன்னர்க்கு மதுரைவளர் தென்னர்க்கு மரபிலக
வைத்தவோர் முத்த மருளே. 51

## 6. வருகைப் பருவம்

பூக்குங் கமலப் பொற்கழலிற்
பொன்றா நீழல் வண்டினங்கட்
போதை கான்றப் பறந்திருக்கப்
போம்போ திருகண் கூசலபித்
தீர்க்கக் கரத்தைக் காந்தளென்ற
திடத்தைக் கொண்டு சேர்ந்திறகைச்
சிலிர்க்கச் சிவிர்க்கா துழலமணிச்
செவ்வாய் மழலைத் தேனொழுக்கத்
தூக்கத் தினிலோர் விரல்சுவைத்துத்
தூதார் கொடுத்த பொன்னூசற்
றொட்டி கிடத்தித் தோராட்டுந்
தொழில்மீ னாட்குச் சுதன்கவலை
போக்கப் பிறந்த திரவியமே
பொன்னாட் டரசே வருகவே
பொழில்சூழ் கழுகும லைக்குள்வளர்
பொருளே வருக வருகவே. 52

வானத் தருவின் றேன்கணங்கள்
மழையிற் குலவி வரத்தரங்க
மடங்குங் கடலி னிப்பிகள்வாய்
வதிந்து குவிந்து மணிதிரண்டு
ஞானச் சுடரி னொளிபரப்பி
நகையுள் ளடக்கி நறுமுறுவ
நாப்பண் டொழும்பர்க் கின்பமல்கு
நலஞ்சே ராறு முகங்கொஞ்சுங்
கானக் குறவ ரிளங்குயிலுங்
கலப மயிலுங் கற்பூரக்
கருணைச் செபத்தில் நீவிளங்கக்
காட்சி கொடுக்குங் கந்தாவிண்
பூனைப் பறளுக் கருள்புரிந்த
பொன்னாட் டரசே வருகவே
பொழில்சூழ் கழுகும லைக்குள்வளர்
பொருளே வருக வருகவே. 53

குழலுக் கிசைந்து கூத்தாடக்
கோமான் குழுக்கள் குதூகலிப்பக்



கொட்டாட் டினிக்க நிர்த்தனத்தைக்
கொண்டோன் குரக்கி னதிகாரச்
செழுமைப் பாத தெரிசனத்திற்
றிகட்டும் வெங்கடே சுரரெட்டச்
சீமான் குலமுந் தலமும்நலஞ்
செழிக்குஞ் செந்தூர் வேல்முருகா
பழமைத் யான பூசனையும்
பணிவுந் துணிவும் பலகாரப்
பதியும் நிதியுங் கொடுத்தருளும்
பழனிக் கிறைவா நறுங்களபப்
புழுகைப் புனைந்த புயபாரா
பொன்னாட் டரசே வருகவே
பொழில்சூழ் கழுகும லைக்குள்வளர்
பொருளே வருக வருகவே. 54

குவியக் குவளைக் குறிவசிக்குங்
குறிப்புத் ததும்பு மங்கயற்கண்
குலவச் செழியன் றவத்தேந்தி
கொஞ்சு மயில்தன் மடிபுரண்டு
ரவியிற் பனகக் கனகமணி
நகையிற் கழுத்திற் கரந்தடவ
நகைக்கச் சொலிக்கும் பற்கீரி
நளினக் குதலைத் தேன்வளர்ச்சி
செவியிற் கதுவத் தாலாட்டித்
திமிர்ந்த களபக் குறும்பைமுலைச்
செவ்வா யிருத்திக் காலாட்டத்
தீம்பா லூட்டிப் பசிதவிர்க்கப்
புவியிற் றவழ்ந்த சிங்காரப்
பொன்னாட் டரசே வருகவே
பொழில்சூழ் கழுகும லைக்குள்வளர்
பொருளே வருக வருகவே. 55

மகரக் குழைகள் பிடரலைப்ப
மணிவா யூறி மழலைமொழி
வசனம் வளரக் கைமாறி
மாறித் தவள முகிலோகை

பகரக் குழலா ளுமைவயிறு
பல்லான் மாக்கள் செற்பமுலைப்
பாலை மறக்கக் கிலுக்குவர்ணப்
பாவை கொடுக்கச் சோதரனென்
றிகரப் பகரத் திம்மென்ப
தேய்ந்த முகவ னைங்கரங்க
ளெடுத்துக் கொஞ்ச முகந்தடவ
வெழுபூ வானத் திருவுந்தி
புகரக் கரங்க ளனுஷ்டானம்
பூத்த குழந்தாய் வருகவே
பொழில்சூழ் கழுகும லைக்குள்வளர்
பொருளே வருக வருகவே. 56

**வேறு**

சக்கெரி சலக்குறி தருக்கொடு சிரிக்கச்
சபாசென் றிடத்தி ரிபுரந்
தகனித்த கயிலாய பரமப்ர மானந்த
சந்தோட சம்பின் சுதக்
குக்குட கரக்குமர கொக்கு நறவக்கனி
குறித்துப் புவிப்ர காரங்
கொண்டரவ சட்டகச் சண்டமா ருதமயில்
குலுங்கப் ரசண்ட வீரா
சர்க்கரை மொழிக்குற வளிக்கொடி மணக்குமர
சந்தான பாக்ய வேலா
தருமோக னந்தந்த திருஞான சம்பந்த
சர்வ ஜீவப்ர யாணா
கைக்கிளி குஞ்சரி மணாளா கோலாகலக்
கடவு ணாயக வருகவே
கழுகாசலத் தில்வளர் கவிராசர் பக்திபுரி
கந்த நாயக வருகவே. 57

செனனக் குறிப்பறிகி லாதன்னை தந்தைநீ
சிறுவனென் றுண்மை கேட்கத்
தெய்வப் பரஞ்சோதி யுந்தேவி யுஞ்சித்த
சின்மயப் பாலூட் டவே
வினைமுத் தொழிற்கும்ம் மூர்த்திப் ரகாசம்நேர்
விக்ரகத் திருவு ளத்தால்



வேதாந்த சைவசம யச்சோதி யார்தந்த
வேட்கைப்ர சாத மென்ன
நினைவிற் கடங்காத கண்டவெளி நன்மார்க்க
நிலையென் றிடப்பிள் ளையார்
நீதன்வந் தான்குமர நாதன்வந் தான்றிருவெண்
ணீறன்வந் தானெ னுஞ்சொற்
கனவிற் பனாகர மயூரபரிபூரணக்
கடவு ணாயக வருகவே
கழுகாசலத் தில்வளர் கவிராசர் பக்திபுரி
கந்த நாயக வருகவே. 58

வானத் துடுக்கணஞ் செக்கரிற் றோன்றிய
வளப்பத் தின்மணி மின்னவே
மகுடகே யூரப்பொன் மாணிக்க மணிமாலை
மலிகங் கணங்க டாவ
ஞானப்ர காசமன மோகப்ர சாதக்ருபை
நயனம் பராமுக மில்லா
ஞாபக குதூகலத் தேவர்கள் குழாம்பக்தி
நவரஞ் சிதஞ்செ ழிக்க
மீனக்கொடிச் செழியர் வேற்றுமை தவிர்த்தகை
விபூதி மங்கா திருக்கு
வேதத்தி லும்விந்து நாதத்தி லுங்குடிசிலை
விலகாத சுழிமு னையிலும்
கானக் கலாபமயில் நடனமிடு சரவணக்
கடவு ணாயக வருகவே
கழுகாசலத் தில்வளர் கவிராசர் பக்திபுரி
கந்த நாயக வருகவே. 59

கரடகொம் பற்கிளைய கவிதை விம்பப்பரத
கவன கெண்டைக் கொடியினாள்
கனககும் பக்கலச முலைதரும் புத்தமுது
கமழநண் புற்றுணு செவ்வாய்
மருவுதங்கச் சரணில் மகரபைம் பொற்குழையில்
வதன தொந்தக் கருணையில்
வசனசிந் தைத்தெளிவில் மகுடபண் புச்சிரசில்
வரத சங்கற்ப நிலையில்

உரகர் கும்பர்க்குசித முலவுசந் தர்ப்பமதி
லுருகிடும் பற்றுடை யனான்
உனைவிளங் கப்புகலு மெனதிடந் தக்கசெய
லுதவுகந் தப்ப னெனவே
கருதுதென் புக்குரிய ரடியர்நெஞ் சத்திலுயர்
கடவு ணாயக வருகவே
கழுகாசலத் தில்வளர் கவிராசர் பக்திபுரி
கந்த நாயக வருகவே. 60

பாராள வருகவிண் ணூராள வருகவேற்
பண்டார ரூப வருக
பாராயணா வருக நாராயணன் மருக
பஞ்சா மிர்தா வருகவே
சீராள வருகசெய லேராள வருகசொற்
சிங்கார தூல வருக
சீமாட்டி வருகவென் பாள்ப்ராட்டி முத்தாடு
செல்வக் குழந்தை வருக
தாராள வருகசூர்ப் போராள வருகநற்
சந்தோஷ கோல வருக
சாலோக வருக சாமீப சாரூபசா
யுட்சியசம்போக வருக
காராள வருகமின் கற்பூர தெரிசனக்
கடவு ணாயக வருகவே
கழுகாசலத் தில்வளர் கவிராசர் பக்திபுரி
கந்த நாயக வருகவே. 61

## 7. அம்புலிப் பருவம்

இச்சமயம் நற்சமய மெச்சமய மாகிலு
மிதற்கீடு சொல்லப் படா
தித்தனை பகற்போது தொட்டபகை பட்டகதை
யெல்லாம் பறந்தோ டிடும்
நச்சர வுடற்குளே புக்கவிக் கக்கக்க
நாடுமோ கூடு மோநீ
நான்சொன் னபடிகேள்மெய் தானின்னம் விண்ணுலவ
ஞாயமோ கீழி றங்கு



பச்சவயி டூரிய பவளச்சர மணிக்ரீட
பஞ்சாட் சரப்ர சாதப்
பவணாச லத்திலுயர் தவயோக பக்தசொற்
பான்மைக் கினித்த குமரன்
அர்ச்சனை மகானெங்க ளாறுமுக நாதனுட
னம்புலி யாட வாவே
அகிலாண்ட வல்லிசுத னெனையாண்ட செல்வனுட
னம்புலி யாட வாவே. 62

கருமொய்த்த கொண்மூ கொலாமிது வெனஸ்லேடை
காட்டக் குழற்றோ கையர்
கடைவிழி பறந்தநஞ் சிற்பயந் தோமனக்
கள்ளங் கிடைத்த தெற்றோ
பெருமைக் குடன்பட்ட தன்றிமுன் னோர்சொன்ன
பேச்சுக் குடன்பட் டவோ
பித்தன் சடாமுடி வசிக்குந் தயாளமும்
பெட்பையார் தந்தார் கொலோ
வருவித்த தோகலை வளர்க்குமென் றோவிருண்
மயக்கந் தவிர்க்கு மென்றோ
வசனார்த்த வுண்மைநிலை யின்னதென் றறிகிலேன்
வானத்தை விட்டி றங்கு
அருமைப் பிரானெங்க ளாறுமுக நாதனுட
னம்புலி யாட வாவே
அகிலாண்ட வல்லிசுத னெனையாண்ட
செல்வனுட
னம்புலி யாட வாவே. 63

விண்ணெலாம் நிலவொளி பரப்புண்மை தந்தவர்
வெறுப்புளோ ரோபின் வந்த
வீம்புக்கு மணிகொண்ட பாம்புக்கு மீய்ந்தனை
விளங்கும்ப்ர காச மெல்லாம்
மண்ணெலா முய்யத் தடாகக் குளிர்ச்சிகள்
வழங்குமுன் கலைப னாறும்
மாண்டவோ நாவலர்கள் வேண்டவோ யாதோ
மகத்வமெங் கேபோச் சுதோ
கண்ணெலாம் நிறைகின்ற பூரண சுதந்திரங்
காண்பிப்ப தோர்நா ளதுங்

கறையொன் றிருப்பதா லறைகின்ற புலவர்நூற்
கட்சிக் கிடங்கொ டுத்தாய்
அண்மினால் நீக்கெங்க ளாறுமுக நாதனுட
னம்புலி யாட வாவே
அகிலாண்ட வல்லிசுத னெனையாண்ட
செல்வனுட
னம்புலி யாட வாவே. 64

பதுமபீ டக்குமரி யிடையொன்று மெஞ்ஞான
பக்தர்க ளிடத்தி ரண்டு
பண்டுள தமிழ்க்கொன்று பலவைண வர்க்கொன்று
பரமனார் வேணி மூன்று
குதுகல மனப்பெண்கள் வதனத்தி லன்னதே
கொஞ்சும்ப்ர காச மாகக்
குடிகொண்ட தன்றியும் பின்னுளவை போஞ்செயல்
குறிக்கா திருந்த தென்னே
இதுமகா வுசிதமோ யிவடத்து மவடத்து
மெளியர்போ லலைய வோசொல்
எவ்வித மிருந்தபோ துஞ்சரி சரிமகிழ்ந்
திப்போது கீழி றங்கு
அதைநலஞ் செயுமெங்க ளாறுமுக நாதனுட
னம்புலி யாட வாவே
அகிலாண்ட வல்லிசுத னெனையாண்ட செல்வனுட
னம்புலி யாட வாவே. 65

வையச் சராசர மெலாந்தழைக் கின்றகலை
வரவரக் குறைத லென்னே
மறுபடியு முன்போல வதிகின்ற செயல்தந்த
வள்ளல்யார் நிர்மூ டரோ
தையற் றயாளவனு போகமோகங் களாற்
சார்ந்ததோ சாப மடடா
சண்டாள வுன்மாட்டு மன்மதன் காமச்
சமர்த்தினைக் காட்டி னானோ
வெய்யற்பா ராவணன் குளிர்காய்ச்சல் சீதள
வியப்பிற் பயந்தி ராமேல்
வேலைக்கு ளானதா லுன்கவலை நோக்கான்
விலக்குவோர் தெய்வ மிலையா



அய்யனா ருளரெங்க ளாறுமுக நாதனுட
னம்புலி யாட வாவே
அகிலாண்ட வல்லிசுத னெனையாண்ட செல்வனுட
னம்புலி யாட வாவே. 66

மத்தகக் கடகளிற் றைங்கரக் கடவுளர்தன்
மாய்கைப் புணர்ப்பி னாலோ
வக்ரதந் தங்குலவு பற்களுக் கிணையென
மதித்திடும் பெட்பி னாலோ
சுத்தசின் மயகோ மளப்பகவ தீக்ஷண்ய
தொந்தமாம் பந்த மில்லாச்
சூட்சத் தினாலிதய காட்சிக் கிசைந்தோன்
றுதிக்கையி னாற்பி டிக்கச்
சித்தம்வைத் தருணோக்க முற்றாலு முன்செயல்
தெரிந்துளா னாகை யாலே
செய்யைச் சுருக்கிவுல குய்யத் தருக்கிலாச்
சிந்தையா னானுண் மையால்
அத்தன்மை சேரெங்க ளாறுமுக நாதனுட
னம்புலி யாட வாவே
அகிலாண்ட வல்லிசுத னெனையாண்ட செல்வனுட
னம்புலி யாட வாவே. 67

எரிசுடர்க் கற்றைவிரி பரிதியோ னுந்தமய
னித்தரணி முற்று லாவ
லேய்க்கின்ற காலத்தில் வாய்க்குமஞ் சனைபுதல்வ
னிச்சைக் கிணங்க லாலே
பரிபுரச் சரணம் பளீரென்று மின்னிடப்
பாய்ந்த னன்கனி யென்னவே
பாடிருட் கும்புகலை யக்கலை நிலாவொளி
பரப்பு முன்பா லுற்றிடா
துரிமையோ வச்சமய முதயமோ புதையுண்
டொழித்தவோ செய்கை யாதோ
வொப்பிலா வுன்கலை குறைந்ததால் நினைவிற்
குடன்படா தென்றெண் ணமோ
அருமைதா னீயெங்க ளாறுமுக நாதனுட
னம்புலி யாட வாவே

அகிலாண்ட வல்லிசுத னெனையாண்ட செல்வனுட
னம்புலி யாட வாவே. 68

இக்குறைகள் கையாண்டு முற்குறைகள் தோன்றிடா
தெவ்வண்ண முறுதி கொண்டாய்
இற்பெருமை யால்வரு குடிப்பெருமை யுங்கற்பு
மெச்சீரும் நற்சீ ரதாய்
நற்கருணை வாழ்கின்ற நாயக ருடன்சேர்ந்த
ஞாபகப் பெண்க ளோடு
ஞாயமில் லாமலோ வூழ்விதி வசத்திலோ
நாதன் பிரிந்த சமயம்
சொக்குமைய லோடனம் புக்கவிக் கக்கக்க
சோர்ந்துளாய் மேனி வாடித்
தோய்ந்திட்ட பஞ்சணை யுறக்கமற் றுப்பனீர்
தோழியர் தெளித்து மாறா
தக்குறி தவிர்த்தெங்க ளாறுமுக நாதனுட
னம்புலி யாட வாவே
அகிலாண்ட வல்லிசுத னெனையாண்ட செல்வனுட
னம்புலி யாட வாவே. 69

எவ்வித குறைப்பா டிருந்தாலு மென்னவுல
கெங்கணு முன்ப்ர காசம்
இல்லையேல் மக்களுயி ருய்யுமா றெவணிவ
ணிதன்செயல் பெருந்தன்மை யார்
எவ்வமர ரும்போற்ற முன்னுளோர் பழமையா
லின்புற ஸ்லேடை சொன்னார்
ஏற்பட்ட குறையொன் றிலாவிடி னுனக்கெதி
ரிசைக்கினுஞ் சரியா குமோ
ஒவ்வரசர் முதலாக வெங்கணும் புகழான
வுன்னாம மேது லங்கு
முற்சாக மேகொண்ட பிரக்யாதி யானநீ
வும்பர்புவி விட்டி றங்கு
அவ்வித மகிழ்ந்தெங்க ளாறுமுக நாதனுட
னம்புலி யாட வாவே.
அகிலாண்ட வல்லிசுத னெனையாண்ட செல்வனுட
னம்புலி யாட வாவே. 70



இத்தல முதற்றல மெனத்துதி வியப்பினா
லெங்குந் தயாள மான
வெழில்கொண்ட செல்வப்ர சங்கமெம் பீரனுல
கிந்த்ரப்ர சித்த கிரீட
பக்திப்ர யோசனக் ருபைக்ஷேம மங்காத
பாக்யவான் சொக்க லிங்கர்
பண்புற் றனுக்ரக செயம்பெற் றிடத்துயர்
பறந்தோடு மடியார் களுக்
கித்தருண மனமகி ழுதீதப்ர விர்த்தியி
லிலங்கும் விபூதி யாலே
எம்மனோர்க்கும் மெதிரில் வம்மெனோர்க் கும்புவியி
லின்பங் கொடுத்த முருக
னத்தல மகானெங்க ளாறுமுக நாதனுட
னம்புலி யாட வாவே
அகிலாண்ட வல்லிசுத னெனையாண்ட செல்வனுட
னம்புலி யாட வாவே. 71

## 8. சிறுபறைப் பருவம்

தாலாட்டு பாடற் றொழிக்குமை விரும்பச்
சபாமண்ட பத்தி னிற்றீம்
சர்க்கரைப் பந்தலிற் றேன்மாரி பொழிகின்ற
தன்மையா லும்பர் நாடர்
பாலாட் டுணைக்கவ தரித்தசண் முகநாத
பண்புக் கிசைந்த நீல
பச்சைவயி டூர்யகோ மேதக மழுத்தப்
பகட்டுப்ர காச மின்ன
காலாட்டி யன்னை முலைவீக்கத் திலேக்கங்
கனிந்திடப் பன்னி ரண்டு
கைத்தலம் நிறப்புவிரன் மணிமோ திரச்சுடர்
கவிக்கக் கலாப மஞ்ஞை
சீலாட்ட விற்பன கடம்பசிங் காரனே
சிறுபறை முழக்கி யருளே
சிவணத் திருக்கழுகு மலையிற் றழைக்கும்நீ
சிறுபறை முழக்கி யருளே. 72

வானத் தருங்கருணை மோனத் தரும்புவன
வாழ்வைப் பொருந்து வண்மை
மங்காத தெய்வீக லோகோப காரசெயல்
வாக்யானு கூல யோக
ஞானத்த ருஞ்சுபந மஸ்தென்று பூசையில்
நவின்றிடப் பிரம சூட்ச
நாப்பணகி லாண்டகோ டிச்சரம சரமெலாம்
நட்பற் றழித்த வேலைத்
தானத்தில் நின்றுநட னம்புரி மகேஸ்பரர்
தனக்கவ தரித்த பாலர்
தன்மையெற் றோவென நினைப்போர் மனத்திற்
றயாளம் பொருந்த வித்வ
தேனத்து லாசச் சரண்பூ மலர்ந்திடச்
சிறுபறை முழக்கி யருளே
சிவணத் திருக்கழுகு மலையிற் றழைக்கநீ
சிறுபறை முழக்கி யருளே. 73

நாமசித் தாந்தமுதல் நவையறக் கற்றவருண்
ணாட்டத்தி னன்புகொண்டு
ஞானப்ர மானந்த கோலாக லக்கயிலை
நாதன்வாழ் விற்புகுந்து
பூமட்ட விழ்ந்தகழல் வந்தனை புரிந்தடும்
போதவாள் வரவேற்கவே
புகலுவார் முருகவேள் சென்மலக் கினபலப்
பொற்பைக் குறிப்பதான
நேமதிட் டக்குறி தெளிந்திடுதல் நன்றென்ன
நீதனுஞ் சரியென்றிட
நேசிக்கும் வள்ளுவ ரழைக்கவந் துண்மையை
நிறுத்தப்ர விர்த்திமூளச்
சேமபத் மச்சரண கோமள மயிற்குமர
சிறுபறை முழக்கியருளே
சிவணத் திருக்கழுகு மலையிற் றழைக்கும்நீ
சிறுபறை முழக்கியருளே. 74

எவ்வுல கினுக்குமொரு தாயான வட்கிவ
னெழிற்சுத னெனத்தோன் றினான்



இச்சென்ம ராசிகள் சுபஸ்தான நன்மையால்
எழிலான சாத கந்தான்
செவ்விமுக மாறுங் கரங்கள்பன் னிரண்டாதற்
றிடகாத்ர நன்மை யோடு
திக்குவிஜ யம்புரி சிரோரத்ன மென்னலாம்
தெய்வீக பக்த ரெல்லாம்
தெவ்வென்ற வாக்யமே திருப்திகொண் டாடவுணர்
தீயவஞ் சகமாய்க் கையால்
செய்கின்ற துன்பங் கடிந்தாறு படைவீடு
சேர்வ னென்றுஞ் சொல்லலாம்
திவ்ய வசனச்செயல் சிறந்ததென் பார்கள்முன்
சிறுபறை முழக்கி யருளே
சிவணத் திருக்கழுகு மலையிற் றழைக்கநீ
சிறுபறை முழக்கி யருளே. 75

அப்பொழுது யாழ்வல்ல பக்கர னுரைத்தா
னரன்றந் தையாக மேலும்
அன்னை சம்பத் தளவிலா திருக்கும்போ
தனாதியா யாறு வீடு
பெட்புற வமைக்கு மென்றீர் சாதகத்திடம்
பேத கமெனச் செப்பவே
பேசுவார் வள்ளுவ ருலோப காரகுண
பெற்றியா லமர ராயோர்
முற்பொழு துரைத்திட்ட சூட்சதில வுணர்களை
மோது வைராக்ய மாலே
மோக்ஷப் பரங்குன்று செந்தி பழனாபுரி
முகூர்த்த நற்றிரு வேரகம்
சிற்பரக் குன்று தோறாடல்பழ முதிர்சோலை
சேர்ந்திடு மாறு வீடு
செப்பலா மென்பவர் விருப்பஞ் செழிக்கநீ
சிறுபறை முழக்கி யருளே
சிவணத் திருக்கழுகு மலையிற் றழைக்கநீ
சிறுபறை முழக்கி யருளே. 76

மூவுலகி னுக்கிடர் விழைத்த சண்டாளரை
முடித்த வேலொன்று பார்வை

முன்னேற்ற மென்றைக்கும் நீங்கா திருக்குமும்
மூர்த்திக்கு மூர்த்தி யாகி
காவடி யெடுத்தவர்கள் சன்னத முதிக்கவுங்
காவி வஸ்த்ரந் துவைத்துக்
காது குத்திக்கோ வணந்தரித் துத்தடி
கரத்தினிற் கொண்ட பின்பு
ஆவலொடு முப்பழ விபூதிப்ர சாதபா
லபிடேக பழனி மொட்டை
யாண்டி யென்றுந் தண்டபாணி யென்றுந்தொழு
தனுக்ரகத் தன்மை வேண்டி
சேவடி வணங்கிடுவ ரென்பவர் களித்திடச்
சிறுபறை முழக்கி யருளே
சிவணத் திருக்கழுகு மலையிற் றழைக்கநீ
சிறுபறை முழக்கி யருளே. 77

அளவிலாச் செல்வத் தருக்குளோ னொருவனென்
றனிக முற்சே னாபதி
யப்பனே நீயென்று செப்புவ னவன்பெணு
மன்றே கிடைக்கும் நிசமால்
களவிலொரு முனிமணஞ் செய்வனென வீணைக்
கரங்கொண்ட மாத வத்தோன்
கழறுவான் முன்சொன்ன காரண மிருக்கவுங்
கழறுமவ் விபர மென்னத்
தளர்விலா துரைசெய் யெனத்தினை வனத்திலே
சார்ந்துளாள் வள்ளி யென்பாள்
தன்மணம் புரிகுவப் னெனச்செப் பிடப்பரம
சந்தோட புளகாங் கிதத்
தெளிவுளா ரனையவர் செவிப்புல னடைத்திடச்
சிறுபறை முழக்கி யருளே
சிவணத் திருக்கழுகு மலையிற் றழைக்கநீ
சிறுபறை முழக்கி யருளே 78

பலகலை யுணர்ந்ததிரு வள்ளுவ மகாமுனி
பகர்ந்திடப் பரம பாகர்
பச்சைப் பசுங்கிளியும் நன்றென நகைத்திடப்
பக்க ரெல்லா மெஞ்ஞான



மிலகுமிர் தயாலய சுகானந்த வெள்ளத்தி
லின்புற் றிருக்க மேலும்
எத்திக்கு முற்றபய மற்றதென நான்மறைக
ளீடேறு மென்றொ லிப்ப
கலகலென மின்சதங் கைப்பதம் நடித்திடக்
கண்பன்னி ரண்டி லங்கக்
கருணைமுகில் குமுறக் கலாப மயிலாட
களித்த சங்கீதம் வளரத்
திலகபஜ னாமிர்த சுர்தித்தொனி முழங்கிடச்
சிறுபறை முழக்கி யருளே
சிவணத் திருக்கழுகு மலையிற் றழைக்கநீ
சிறுபறை முழுக்கி யருளே. 79

பெற்றவளு னக்கருமை பாராட்டு கின்றவோர்
பெட்பையார் பேச வல்லார்
பேதாதி பேதப் பிறப்பிறப் புக்கடல்
பிறங்காத வாழ்க்கை யோடு
பற்றலர் துணுக்கத் தடாமோடி வைதீக
பாக்யஞ் செழிக்க மூடர்
பட்சத் தலைந்திடா விச்சைத் தராதர
பழக்கத் திருப்ப தென்றோ
நற்றவப் பேறடைத லுற்றதச் செயலுதவு
ஞாபக முளேனென் னவும்
ஞாயத் தலத்திலே பேசுதர் மார்த்தநிலை
ஞான முண்டா மென்னவும்
தெற்றென வெழுந்திடி முழங்குசொல் லோடுநீ
சிறுபறை முழக்கி யருளே
சிவணத் திருக்கழுகு மலையிற் றழைக்கநீ
சிறுபறை முழக்கி யருளே. 80

பைங்குனி விழாவிரத சாரத்ய முஞ்சூரர்
பங்கமாங் கந்த சஷ்டி
பகருந் துலாரவி விஷாகடம் பச்செயல்
பழங்குஞ் சதாவி ஷேட
மங்காத மாதாந்த சுக்ரவாரச் சேவை
மகிமை சிந்தாக் கார்த்திகை
வருவார்க ளொருகோடி மனிதர் காவடிவகை

வகுக்கொணா தெண்ண மஃதே
எங்கணு முலாவுமுன் சீர்கதிக்கு நேர்த்திதான்
என்றெம் மனோர் கருத்தா
லெண்ணுந் தரத்ததோ வானாலு மாவலொன்
றென்னுளே விலகி டாது
செங்கைவடி வேலிலகு மங்கள குமாரனே
சிறுபறை முழக்கி யருளே
சிவணத் திருக்கழுகு மலையிற் றழைக்கநீ
சிறுபறை முழக்கி யருளே 81

## 9. சிற்றில் பருவம்

வேதா புவனத் தோகைமன்
வேட்கைக் காமர் வெண்கமலம்
விருப்புற் றிருக்கத் ராவிடத்தார்
வியக்குஞ் ஸ்லோகப் பெம்மாட்டி
மாதா பனுவற் கானரச
மகர வீணா மிர்தராணி
வாக்கிற் றவள நேத்ரக்ருபை
மங்கா தழைத்த பஞ்சவர்க்குத்
தூதா ருறங்கும் பாற்கடலிற்
றொனிக்குந் தரங்கக் கையோச்ச
சுலவு மணியும் பொன்மணலும்
தொகுத்தார் தொண்டர் வாழ்க்கைதமக்
காதா ரகத்தின் கழுகுமலைக்
கரசே சிற்றி லழியேலே
அமர சமர குமரவென்பார்க்
கடியேன் சிற்றி லழியேலே. 82

கங்கா தரனுங் கண்ணனொடுங்
கமலக் கோவுங் கண்டறியா
கருத்தே செனித்த பக்திரசக்
கந்தா கடம்பா தெய்வீக
மங்காப் பொருளே மருக்கொழுந்தே
மருவே வள்ளி மணவாளா
மகுடச் செழியன் றமிழ்தழைக்கு
மணியே மயிலி னின்றாடும்



பொங்கே புலவா விண்ணாட்டைப்
புரக்குங் கருணைப் பேராளா
பொன்னே புனலே புவனக்ருபைப்
புயலே வடியார் போற்றுபொழு
தங்கா தரத்தின் கழுகுமலைக்
கரசே சிற்றி லழியேலே
அமர சமர குமரவென்பார்க்
கடியேன் சிற்றி லழியேலே. 83

தாதை விரகத் தாதையலென்
றாயு மருவச் சந்தோடந்
தவழ நாத விந்தளித்த
சடமே பொய்யோ மெய்யோயான்
பேதை மனமோ கெட்டதுனைப்
பேணற் கில்லா தற்பர்கள்பாற்
பெருமைக் கவிதைப் பாராட்டிப்
பிழைக்கத் துணிந்தே னந்தோயென்
காதை நவிலற் கொண்ணாத
கவடக் களங்கக் கன்மவினை
கலக்க மறுத்துக் காப்பாற்றக்
கடன்காண் கந்தா சந்தோடத்
தாதை மகிமைக் கழுகுமலைக்
கரசே சிற்றி லழியேலே
அமர சமர குமரவென்பார்க்
கடியேன் சிற்றி லழியேலே. 84

தாலம் வருகை சப்பாணி
தனக்கோர் முத்தஞ் செங்கீரை
தளராக் காப்பம் புலிசிறுதேர்
சமர்த்துக் கொருவ ரீடாமோ
மூலா தாரத் தெய்வக்கிருபை
முளையிற் கிளர்ந்த பழம்பாடல்
முழக்கச் சரண கெம்பீர
முருகா னந்தச் சீர்தழைக்கும்
கோலா கலத்தின் மணப்பெருமை
குறத்தி வணங்கிக் கொண்டாட

குழந்தைப் பருவச் சீர்காட்டுங்
குகனே கிராத மின்னார்க
ளாலோ லத்தென் கழுகுமலைக்
கரசே சிற்றி லழியேலே
அமர சமர குமரவென்பார்க்
கடியேன் சிற்றி லழியேலே. 85

நீயும் நானு மொன்றெனவும்
நிதியும் பதியு மொன்றெனவும்
நினைப்பும் விழியு மொன்றெனவும்
நிறையுங் குறையு மொன்றெனவும்
தாயுந் தகப்ப னொன்றெனவும்
தனமுங் கனமு மொன்றெனவும்
சடமு முயிரு மொன்றெனவும்
தவமுந் தயையு மொன்றெனவும்
மாயுங் கவலை யொன்றெனவும்
மதித்துத் துதித்தே னென்பிறவி
மயக்கக் கடலின் கரையேற்று
மகிமைத் தோணி வல்லாளா
ஆயுந் தமிழ்சேர் கழுகுமலைக்
கரசே சிற்றி லழியேலே
அமர சமர குமரவென்பார்க்
கடியேன் சிற்றி லழியேலே. 86

தில்லைக் கடவுண் முத்தொழிற்கோ
செழியன் றவத்தோ கற்பகத்தாள்
திருப்பூட் டுதற்கோ தொண்டருக்கோ
சிற்றூர் வேட ராஜாத்தி
புல்லத் தானோ சேவல்மயில்
பொருந்து தற்கோ தேவர்குழாம்
புரக்கக் கருணை வெள்ளமழை
பொழிந்து கடைக்கண் பார்த்திடவோ
மல்லற் கழலுஞ் செஞ்சிலம்பும்
வடிவேல் துலங்குங் கண்காட்சி
வகைக்கோ நீஸ்ரீ மீனாட்சி
வயிற்றிற் பிறந்த தெய்வகைகாண்



செல்வத் துரையே சொல்வாயான்
சிறியேன் சிற்றில் சிதையேலே
சிவணத் துவண கிரிக்குமர
தேவா சிற்றில் சிதையேலே. 87

காம்பார் கமலப் பூநயனக்
கண்ணன் மருகா கற்பூரக்
கந்தா கடம்பா ருத்ராட்சா
கருணா கரத்தின் றெய்வீகப்
பாம்பார் க்ரீடத் தேவாரா
பரமா னந்தப் பக்திரசப்
பாதா பழனிப் பண்டாரா
பஜனை த்யானா பரிமளிக்கும்
வேம்பார் செழியர்க் கவதரித்த
மீனாள் புதல்வா சிறுகுழந்தை
வேலா கவிஞர் விர்த்தாந்தா
விமலா கும்பன் விஞ்சைமந்த்ரத்
தேன்பால் சொரியும் பழங்கவிதை
சிறியேன் சிற்றில் சிதையேலே
சிவணத் துவண கிரிக்குமர
தேவா சிற்றில் சிதையேலே. 88

கல்லா வஞ்ச நிர்மூடக்
காமக் குருட்டுக் கள்வருக்குக்
காலாள வீணர் முன்னோடிக்
கருப்பன் போலுங் காவல்கொள்வார்
எல்லாந் தனக்கே சொந்தமென்பார்
இருக்கு மனையிற் றியாகமென
என்போ லெளியர் சென்றாக்கா
லெடுப்பார் தடியா லடிவிழுமுன்
சொல்லா தோடென் றழிம்புசெய்வார்
சுற்றம் பேணார் துலையும்வண்ணம்
சுடர்வே லெடுத்தா லன்னவர்க்குத்
துணைவே றுண்டோ தொல்லுலகில்
செல்லார் குழலாள் வள்ளிமன்னா
சிறியேன் சிற்றில் சிதையேலே

சிவணத் துவண கிரிக்குமர
தேவா சிற்றில் சிதையேலே. 89

வேதப் பலகை வீற்றிருந்து
விதியார் முதலோர் முத்தொழிற்கும்
வேட்கை கூர்ந்து செழியர்குலம்
விளங்கத் தோன்றி வீர்யவிந்து
நாதத் தெளிவாய் எவ்வுயிர்க்கும்
நாட்டஞ் செலுத்தி நயந்தவிண்ணோர்
நாட்டுக் கரசன் வாழ்கமயில்
நடத்தை புரிந்த நட்பாளா
காதற் கனியே சொற்சுவையின்
கரும்பே சுரும்பே வள்ளியம்மை
கணவா முருகன் றுணையெனுஞ்சொற்
காட்சிக் கிசைந்த மெஞ்ஞான
சீதப் புனலே பக்திரசச்
சிறியேன் சிற்றில் சிதையேலே. 90

மோக மடந்தை சேருடம்பன்
முயக்கத் துதித்த மாயையென்பாள்
மோசத் தமர்ந்த பூவுலகில்
முயற்சிக் கிணங்குஞ் சம்சார
போக செனன மரணவலை
புக்கா தெளியார் பாலமைத்த
பொறுமைக் கருணை மழைபொழியும்
புயலே புலமைக் கெம்பீரா
நாக மணியாள் சிற்றூர்தன்
னாட்டுக் குறத்தி வேட்டகத்தில்
நட்பா ரிதயப் பண்புசித
நலத்தாற் றெய்வ மணம்புரிந்த
சிநேகப் பெருமை கொண்டாடுஞ்
சிறியேன் சிற்றில் சிதையேலே
சிவணத் துவண கிரிக்குமர
தேவா சிற்றில் சிதையேலே. 91



## 10. சிறுதேர்ப் பருவம்

ஞான சங்கற்ப சரணார விந்தத்துணை
நயந்துளே மெம்ம னோர்கள்
நட்புப் ரமானந்த வெள்ளத் தரங்கமெறி
நானென் னுமாண்மை போக்கி
மோனதொந் தத்தித யத்யான தொண்டூழிய
முழங்கும்ப்ர சங்க கோஷ்ட
மோக்கப்ர யோசன முதிர்ச்சிப் பெருஞ்செல்வ
முற்றப்ர பந்த ஸ்லோக
கானவிஞ் சைத்தவள சங்கந் தொனிக்கக்
கடம்புசெஞ் சேவ லாடக்
கற்பூர தீபப்ர காசநெய் வேத்யங்
கமழ்ந்த சங்கீத வேத
தேனலம் பப்பத்ப நாதன் றுதிக்கநீ
சிறுதே ருருட்டி யருளே
செகரட்ச கக்கழுகு மலைமெச்ச வந்தநீ
சிறுதே ருருட்டி யருளே. 92

கொல்லா விசேடக் குறிப்பார்ந்த கேண்மையிற்
குன்றா ததீத செல்வக்
கோலா கலச்செப திருப்புகழ் முழங்கக்
குதூகலச் சத்ய மார்க்க
வுல்லாச வித்வசம் பன்னக்ர காசலத்
துண்மைப்ரி யாப்ர மாத
வூக்கப் புலத்யான நோக்கத் துளோர்மந்த்ர
வுட்சா டணப்ர விர்த்தி
நல்லார் நடக்கைவழி செல்லார் தமக்குமுன்
னாட்டத் தெழுந்த கருணை
நந்தா தளிப்பது நிசந்தா னெனச்சுருதி
நயப்பதுஞ் சரத மாமால்
செல்லார் குழற்றிகழு மாதேவி செல்வநீ
சிறுதே ருருட்டி யருளே
செகரட்ச கக்கழுகு மலைமெச்ச வந்தநீ
சிறுதே ருருட்டி யருளே. 93

எவ்வுலகு மெவ்வுயிரு மேனைய வெலாந்தந்த
தெள்ளுளே யெண்ணெய் போலும்

எங்கணு மிலங்கொருவ னீயே யெனப்புக
லிருக்காதி புராண மெல்லாம்
கவ்வுரக மணிகொண்ட கட்டாணி முத்தே
கடாட்சப்ர சண்ட வெள்ளக்
கர்ச்சனை புரிந்தமுகி லேசந்த ணாசலா
கங்கா ளிருத்ர சூட்சத்
தொவ்வவிளை யாடுமயி லோட்டட்ட மாசித்தி
யொப்பிலா விடயாச் சர்யத்
துண்மையறி வானந்த நன்மைச் செழுஞ்சுட
ருதிப்பதெல் லாமுன் மாயை
தெய்வகரு ணாலய விளக்கத்வி தக்கந்த
சிறுதே ருருட்டி யருளே
செகரட்ச கக்கழுகு மலைமெச்ச வந்தநீ
சிறுதே ருருட்டி யருளே. 94

வானத் தெழுந்திரவி மரகதப் பாய்மா
வழக்கத் திழுக்கி லாமல்
வருபோத பாரகுர லிடிமின்னல் வான்சீலை
வழங்கத் திமிர்ந்த கொண்டல்
லீனச் செழுந்தரள மாரத்ன கோலத்
திருட்பிளம் புப்ர வேசத்
திடைநடன மிடுவுரகன் முடிகுவட சைந்துல
விறக்கைப் பறப்பு ருட்ட
கானச் சிகண்டிவிளை யாடக் கரைப்பரத
காற்றுத் தொகுப்பு ருட்டக்
கதிரோ னெழச்சூரி யன்கரக ணம்வீசுங்
கடைக்கணோக் கத்து ருட்ட
தேனத் துவண்டுளர் மலர்க்கழ லுருட்டிடச்
சிறுதே ருருட்டி யருளே
செகரட்ச கக்கழுகு மலைமெச்ச வந்தநீ
சிறுதே ருருட்டி யருளே. 95

உரகக் கொடிக்குரிசி லவனிடத் துள்ளார்
ஒழுக்கப் பழக்க ஞான
வுண்மையறி வில்லா தடர்ந்தங்கர் கோன்றனா
லூக்கஞ் செலுத்த பாரக்



குரல்கொக் கரித்தமரி லபிமனோ டக்கொடிய
கொலையிற் படுத்த சமயம்
குறியிற் றெளிந்தமுகில் விசயற்கு ளாகாத
கொள்கைக் களைந் தேகிட
விரகத் தெழிற்பணில தொனியிற் சிரித்தகுரல்
வேய்வைத் தவாய் விசேட
விமலத் துணைக்கடவுள் மருகக்கரு பாநயன
மிளிர்சர்க் கரைக்கு ணாளா
திரபக்த ருக்குசித பரமாத்ம நன்மையே
சிறுதே ருருட்டி யருளே
செகரட்ச கக்கழுகு மலைமெச்ச வந்தநீ
சிறுதே ருருட்டி யருளே. 96

சோதி ரத்ன மணியே கடப்பமலர்
சூழ்ப கட்டு மகலா
தூய ருக்மணி சகாய சொற்கவட
தூல கிருஷ்ணர் மருகா
ஆதி மத்தி முடிவார் குறிப்பவ
ரராந டித்த மயிலோன்
ஆழ்கடற் குலவு மேழ்புவிக் குறான
தாசை வைத்த சிறியேன்
மீது தித்த கருணா கரச்சுடர்
விடாவி ளக்கு நிகராய்
வீதி லட்சண விலாச சப்பர
விமான முத்தி தருவாய்
சேதி யெற்கருள் சுதாவெ னப்புகல்
சிவால யக்க டவுளார்
தேடு சுப்ரமண்ய மேஜொ லித்தசிறு
தேரு ருட்டி யருளே. 97

சேவலுக் குரிய சேவகக் குமர
சீர்செ ழிக்கு மணியே
தீன ரட்சக தடாக சட்டக
திடாவி சித்ர வடிவேல்
காவி வஸ்த்ர செபகா வடிப்பஜனை
காண திர்ஷ்ட முடையார்

காரணக் குழக வார ணக்கொடி
கடாவு கட்ட ழுகனே
நீவ சிப்பது சதாதி ருக்கழுகு
மாம லைப்ப தியிலே
நேசம் வைப்பது மகாவி ருப்படியார்
நியாய சித்த மதுளே
சேவை யைத்தருப வாகு றத்திகுல
தீப பொற்ச ரணனே
சேயொ ளிர்ப்பவள தூணி றுத்துசிறு
தேரு ருட்டி யருளே. 98

பூத ரப்பகடு லாவெ மக்கொடியர்
போரி டற்கு வருதற்
போது வெற்றிவட வேல்பி டித்தவர்
புகாதெ னக்கெதி ரில்வா
சோத ரத்திபர் விசாக சற்குண
சுகாகு றத்தி கணவா
தோகை யைப்பரி யதாய்ந டத்திய
சுராண சர்க்கி றைவனே
வேத ரத்னமணி யேவிளக் கினொளி
யேகெர் வக்கெள சிகர்
வேள்வி யைச்செய விடாத ரக்கிவரு
வீர்ய மட்ட சிலையார்
சீத ரர்க்குமரு காதி கட்டுமுரு
காசெ பத்த ழுகனே
சேயொ ளிர்ப்பவள தூணி றுத்துசிறு
தேரு ருட்டி யருளே. 99

கோல தண்டரள மாலை யங்கள
குமாரி குஞ்ச ரிமகா
கோவிலும் பெரிய கோபுரங் ககன
கூட மண்ட பசபா
வேலு மந்த்ரவிதி வேதமும் பயில
வேணு மென்று நினையா
வேளை சந்தன விபூதி குங்கும
விவேக முந்த ருபவா



ஞால சம்ப்ரம நவீன சுந்தர
நமோ கடம்ப மணியே
ஞான ரஞ்சித விமான துங்கமயில்
நாட கம்பு ரிபதா
சீல விஞ்சைவச னாமிர் தங்குலவு
சீரி ளங்கு மரனே
சேய சந்த்ரனொளிர் வாழ்வ மைந்தசிறு
தேரு ருட்டி யருளே. 100

கோமளம் புனைகுசால் விளங்கு குழற்
கோதி ளங்குயி லினாள்
கூவ விம்பமுலை தாவெ னுங்குரல்
குலாவி டுஞ்ச மயமே
மாமன் வந்தன ரடாக டம்பவென
வாரி டுங்கர மதால்
வாய்மு கந்துமடி மீதி ருந்துமணி
மாலை கொண்ட பொழுதில்
நீமகிழ்ந்திடவும் நான்வ ணங்கிடவும்
நேர்மை யும்பெருகவே
நீற ணிந்துசிவ பூசை யும்புரிய
நீதி யின்கிரு பையால்
சேம முஞ்சரண சேவை யுந்தரு
தியாக நெஞ்ச தனே
சேய சந்த்ரனொளிர் வாழ்வ மைந்தசிறு
தேருருண்ட தருளே. 101

கழுகுமலை அருள்மிகு சுப்பிரமணியக் கடவுள்
பேரில் பிள்ளைத்தமிழ் முற்றிற்று

உ

# காஞ்சிபுரம் திருக்குமரகோட்ட முருகன் பிள்ளைத்தமிழ்

## வ. த. இராம சுப்பிரமணியம்

### 1. காப்புப் பருவம்

சீரார்ந்த தேவியாம் காமாட்சி யன்னையார்
செம்மையாய் ஆட்சி செய்யத்
தேசார்ந்த நலமெலாம் சீராகக் காணவே
திண்மையாய் ஓங்கி நிற்கப்
பேராயி ரத்தொடும் பித்தான ஏகனின்
பெருமையை வாழ்த்தி என்றும்
பேறாக வாய்த்துநற் பிள்ளையாய்ப் பூவினிற்
பீடுறும் சிவக ணேசா
ஏரார்ந்த வேலினை ஏந்துங்க ரத்தனாய்
இனமுறும் வள்ளி மானை
இன்பப் பெருக்குடன் நன்மணம் நாடிநல்
ஏசலை விழைந்த முருகன்
காராளும் காஞ்சியிற் கனிவாக மேவினன்
கருத்துடன் காக்க வாவே
கயிலாய நாதனுக் கரும்பொருள் சாற்றிடும்
கந்தனைக் காக்க வாவே. 1

சிந்திடும் முறுவலால் திரிபுரம் தீய்த்தவன்
தேவியும் மலைக்கு மாறு
சீலமார் பூசையில் சந்தமார் கங்கையைச்
சீற்றமாய் ஏவ விட்டு
முந்துறும் அன்பினாற் றழுவிடத் தோன்றிடும்
முதல்வனின் திறத்தை விஞ்சும்
மூலமாய் முதலதாய் மும்மலச் சேற்றினை
முற்றுமாய் அகற்றும் முதல்வா



நந்துறும் நல்லருள் புரிந்திடும் ஐங்கரா
நாரணன் போற்றும் திலகா
நாளெலாம் நின்னையே நினைபவர்க் கின்னருள்
நலமுடன் அருள்க ணேசா
முந்தையார் காஞ்சியிற் குமரகோட் டத்துறை
முருகனைக் காக்க வாவே
முன்னுருத் திரமணி கமண்டலம் ஏந்திடும்
முத்தனைக் காக்க வாவே. 2

மேனாளில் தக்கனின் தீச்சொலாற் றேய்ந்திடும்
வெம்மையைப் பெற்ற மதியை
மேன்மையாய்க் காக்கவே தரித்தருள் நல்கிடும்
விமலனை மணம்பு ரிந்த
மீனாட்சி யம்மையின் மணமலர்ச் செல்வனே
மிகையுடன் அருளும் வண்ணம்
மெய்மையைக் காத்திடும் முகுந்தனின் மருகனாய்
விளங்கிடும் ஆனை முகனே
வானாளும் தேவரும் வாணரும் முனிவரும்
வாழ்வுறச் செய்யும் சீரால்
வடிவேலும் சேவலும் வளமுடன் தாங்கிமா
மஞ்ஞையில் அமரும் முருகன்
தேனாடும் காஞ்சியின் குமரகோட் டத்தனாம்
தேவனைக் காக்க வாவே
திகழக்க மணியுடன் கமண்டலம் ஏந்திடும்
சேந்தனைக் காக்க வாவே. 3

சொற்றமிழ்ச் சுந்தர வள்ளலின் வாய்மொழிச்
சுருதியை ஏற்று கந்துத்
தொன்மையார் நேயனாய்த் தோழனாய்த் தரணியில்
சூழ்மணம் புரிந்த நோக்கில்
பற்றுடன் ஆட்கொளும் ஈசனார் திருவருட்
பாங்கினில் புதுமை சேர்க்கப்
படர்விழிப் பார்வையைத் தந்திடும் அம்பிகை
பரவிடும் ஆனை முகனே
உற்றநற் புத்தியும் ஒளிதரும் சித்தியும்
உவப்புடன் அமர்ந்தி ருக்க
ஓதரும் பிரணவப் பொருளென நின்றனை
உலகெலாம் போற்றி நிற்கக்

கற்றநற் காஞ்சியின் குமரகோட் டத்தனைக்
கனிவுடன் காக்க வாவே
காணக்க மணியுட ன் கமண்டலம் ஏந்திடும்
கந்தனைக் காக்க வாவே. 4

மகமாயி கங்கையாய் நீலியாய்ச் சத்தியாய்
மனோன்மணி கௌரி யாகி
வாசமிகு சாமளை துர்க்கைமீ னாட்சியாய்
மனோகரி வராகி யாகி
அகமோங்கும் நங்கையாய்த் திகம்பரி நிமலையாய்
ஆயகல் யாணி யாகி
அபிராமி யன்னையாய்க் காளியாய்க் கன்னியாய்
அணிமிகும் பவானி யாகிப்
பகர்கின்ற மாரியாய் மலையனூர் வல்லியாய்ப்
பதிவிளக் கன்னை யாகிப்
பரிவாக அருள்தரும் அம்பிகை தந்தருள்
பார்புகழ் ஆனை முகனே
புகழோங்கும் காஞ்சியின் குமரகோட் டத்துறை
புனிதனைக் காக்க வாவே
புகழக்க மணியுடன் கமண்டலம் ஏந்திடும்
புனிதனைக் காக்க வாவே. 5

தக்கனின் வேள்வியைக் காய்ந்திடும் ஈசனும்
தகவுடன் உவந்து போற்றும்
தனிப்பெரும் வண்ணனே நேயனே நாதனே
தடாதகைக் குகந்த மக்னே
மிக்கசீர் தந்திடும் மோதகச் செல்வனே
மேன்மைகொள் திறத்தி னோடு
விமலனோ டன்னையை வலம்வரும் செம்மையால்
மேவுநற் கனியை யேந்தி
தக்கநற் பதிதனை விளக்கிடும் அண்ணலே
தரணியிற் றிகழும் முதலே
சந்ததம் ஓங்கிடும் வானவர் தலைவனே
தைவளர் ஆனை முகனே
அக்கமார் காஞ்சியில் ஓங்கிடும் குமரனை
அன்புடன் காக்க வாவே
அணிமயில் மீதமர் அறுமுகச் செம்மலை
அன்புடன் காக்க வாவே. 6



வேதனைச் சிறையிடும் அறுமுகன் கங்கையார்
விமலனின் இளைய மைந்தன்
விலங்கலை யழித்துவெவ் வசுரனை யடர்த்திடும்
விடையனின் இனிய செல்வன்
மாதினை மாவினை விழைந்துநல் வள்ளியை
மணங்கொளும் தணிகை முருகன்
மதியுடன் வன்னியும் மெய்யுறக் கொண்டருள்
மாசிலா மணியின் மகனாய்
வேதமார் காஞ்சியின் குமரகோட் டத்தினில்
விருப்புடன் விளங்கி நாளும்
மேனலம் புரியவும் செவ்வருள் மலரவும்
மேன்மையாய் வீற்றி ருக்க
நாதமார் கணபதிச் செம்மலே வாகைசேர்
நலமுடன் காக்க வாவே
நானிலம் காத்தருள் நலமிகும் நாதனே
நயமுடன் காக்க வாவே. 7

பாற்கடல் நாயகன் வாழ்த்திடும் சேந்தனாய்ப்
பாரினிற் செம்மை தேக்கிப்
பரிவுடன் அருள்தரும் அம்பிகை மைந்தனாய்
பாலசுப்ர மண்ய னாகி
வேற்படை கொண்டருள் சீலனாய் வேந்தனாய்
வேடனாய் விருத்த னாகி
வெற்றிகொள் குக்குடப் பதாகையும் சேர்ந்திடும்
வீரனாய்ச் சூரன் றன்னைக்
காற்படுத் தியாண்டருள் கந்தனாய் எந்தையாய்
காஞ்சியிற் கோலம் தாங்கிக்
காணரும் முதற்றொழில் மேவிடும் முருகவேள்
கனிவுடன் விளங்கி நிற்க
நாற்புயத் தண்ணலே ஐங்கரத் தோன்றலே
நயமுடன் காக்க வாவே
நற்றொழில் காத்திடும் ஆனைமா முகத்தனே
நலமுடன் காக்க வாவே. 8

பச்சைமா மஞ்ஞையில் இச்சையாய் அமர்ந்துநற்
பாரெலாம் வலமும் வந்து
பாங்குடன் காசிபன் வேள்வியைக் காத்திடும்
பரிவினிற் றிகழ்ந்து மேவும்

செச்சைமீ திவர்ந்திடும் சேந்தனாய்க் குறமகள்
செம்மையாய் அளித்த தேனைத்
தேட்டமாய் அருந்திடும் சீரினைப் போற்றிடும்
திருவினார்க் கருளும் முருகன்
மெச்சுநற் பண்பினாற் போற்றிடும் தொண்டரை
மேன்மையாய்க் காக்கு மாறு
வித்தையார் காஞ்சியின் குமரகோட் டத்தினில்
விழைவுடன் வீற்றி ருக்கக்
கச்சையார் அரவுகொள் கணபதிச் செல்வமே
கவினுடன் காக்க வாவே
கனிவுடன் அருள்தரும் ஐங்கரத் தண்ணலே
கந்தனைக் காக்க வாவே.

பனிமலை மேவிடும் பரமனின் நுதலினிற்
பரிவுடன் உதித்த குமரன்
பச்சைமா மயில்மிசைப் பாரினை வலம்வரும்
பழமுதிர் சோலை முருகன்
கனிவுடன் வள்ளியைக் கடிமணம் புரிந்தவன்
கருத்தினிற் றிகழும் அழகன்
கலைமகள் நாதனுக் கருளுரை செய்தவன்
காசினி போற்றும் அமரன்
இனிமையார் காஞ்சியிற் குமரகோட் டத்தினில்
எழிலுடன் காட்சி நல்கி
ஏத்திடும் அடியவர் நெஞ்சினிற் குடிபுகுந்
தேற்றமாய் நிலைத்தி ருக்கத்
தனிப்பெரும் வள்ளலே கணபதிச் செம்மலே
சால்புடன் காக்க வாவே
சாலநற் பெருமைசேர் சண்முகத் தண்ணலைச்
சந்ததம் காக்க வாவே. 10

## 2. செங்கீரைப் பருவம்

துவராடை தாங்கிநற் றவம்புரிந் தோங்கிடும்
தூயநற் பிருங்கி மேனாள்
துயருற்ற வேளையிற் றண்டினைப் பெற்றிடும்
துணையிலா மரபு கண்டு
சிவமுற்ற வாய்மையாற் பூசனை புரிந்துநற்
சீரிடப் பாகம் ஏற்றுத்



திருவோங்கு நல்லருள் புரிந்திடும் தேவியின்
செம்மைசேர் சிவகு மரனே
தவறுற்ற அசுரரைத் தனிப்பெரும் வேலினாற்
சமரினிற் செருத்து மேவும்
தவமுற்ற செந்திலிற் றண்ணருள் புரிந்திடும்
தலைவனே ஞான குகனே
சிவமோங்கு காஞ்சியின் குமரகோட் டத்தனே
செங்கீரை யாடி யருளே
திருவக்க மணியுடன் கமண்டலம் கொண்டவா
செங்கீரை யாடி யருளே. 11

மோனமாம் நிலையினிற் செம்பொருள் காட்டியும்
முந்துறும் கருணை மேவி
மொய்வினை மாய்த்திடும் மொழிபகர்ந் தோதரும்
உவகையோ டாடல் செய்தும்
ஏனமாய்ப் பால்சுரந் தருள்தரும் விமலனை
எழிலுடன் வரிக்கு மாற்றால்
இன்மனத் தையனாம் மலையனின் புதல்வியாய்
இயம்பிடும் எண்ணம் கொண்ட
வானதிச் செல்வமாம் தேவியின் மைந்தனே
மாயவன் மருக னேதெய்
வானையின் கணவனே தேவரின் தலைவனே
வள்ளியை விழைந்த குகனே
தேனலர் காஞ்சியின் குமரகோட் டத்தனே
செங்கீரை யாடி யருளே
திருவக்க மணியுடன் கமண்டலம் கொண்டவா
செங்கீரை யாடி யருளே. 12

மருள்நீக்கும் அண்ணலார் தொழுதேத்தும் வேளையில்
மயல்நீக்கி யாண்டு ஞாலம்
மதிசேர்க்குங் குரவனாய் வலிந்தாளும் பாங்கினில்
மாதேவி மகிழும் வண்ணம்
திருநாவுக் கரசெனும் ஒருநாமம் நல்கிநற்
செம்பொன்னும் சோறும் ஈந்து
செயலோங்கு மதுரையிற் றிருவோங்கச் செய்திடும்
சீலத்த டாத கைதன்

திருவார்க ரந்தனைச் செறிவாகப் பற்றிடும்
சிவனார் நயந்த குமரா
தென்தமிழைக் காக்கவும் தீயோரைக் காயவும்
திகழ்வேல் எடுத்த முருகா
திருவோங்கு காஞ்சியிற் செயலோங்கு குமரனே
செங்கீரை யாடி யருளே
திருவக்க மணியுடன் கமண்டலம் கொண்டவா
செங்கீரை யாடி யருளே. 13

உம்பரின் தலைவனாய் நீலகண் டத்தனாய்
உமையொடும் காட்சி நல்கி
ஓயாது வீசிடும் அலையெனும் வினைகளைந்
துறங்காது பித்த னாகிச்
செம்பதச் சீரினைத் தந்தருட் பாங்கினிற்
றில்லையம் பதியில் மேவிச்
செறிவான ஆடலைப் புரிந்தருள் ஈசனைச்
சிந்தையில் நினைந்து போற்றும்
செம்மைக் குவந்தருள் இராகவன் மருகனே
சேந்தனே சிவகு மரனே
தேற்றமார் நற்பதம் தந்திடும் கடம்பனே
சீலனே செந்தி லோனே
செம்மையார் காஞ்சியின் குமரகோட் டத்தனே
செங்கீரை யாடி யருளே
திருவக்க மணியுடன் கமண்டலம் கொண்டவா
செங்கீரை யாடி யருளே. 14

அறமோங்கு நாட்டினில் அருளோங்கி மல்கவே
அறுபத்து நான்கெ னும்சீர்
அருளோங்கும் ஆடலைச் செய்துநற் செம்மைசேர்
அருந்தமிழ்ச் சங்கம் ஏறிப்
புறமோங்கிப் பாரெலாம் புகழ்ந்தோங்கும் பித்தனாய்
போகத்தைச் சேர்க்கு மாறு
பொற்போங்கு நங்கையை இடந்தனிற் கொண்டருள
புரிசடைக் கடவுள் ஈன்ற
திறமோங்கும் குமரனே தேவர்தம் தலைவனே
சீரோங்கும் திருமு ருகனே
தேனோங்கும் தலைவனே குன்றோங்கும் குமரனே
திருவோங்க அருளும் குகனே



சிறந்தோங்கும் காஞ்சிவாழ் செய்யார் பதத்தனே
செங்கீரை யாடி யருளே
திருவக்க மணியுடன் கமண்டலம் கொண்டவா
செங்கீரை யாடி யருளே. 15

சீரோங்கு வள்ளியின் செங்கரம் பற்றிடும்
செம்மையைக் கொண்ட முருகா
தீராத வினையெலாம் தீர்த்தருள் புரியநற்
றிருவேலை ஏந்தும் குமரா
பாரோங்கி உய்ந்திடும் மாட்சியில் செவ்வரம்
பரிசாக அருளும் குழகா
பாராளும் மங்கையாய்த் தோன்றிடும் அன்னையாம்
பராசக்தி ஈன்ற அழகா
ஏரோங்கி மல்கிடும் ஏரகத் தண்ணலே
ஏகம்பர்க் குரைபு கன்ற
ஈராறு விழிகொளும் சீராறு முகத்தனே
எளியேனை யாளும் குகனே
தேரோங்கு காஞ்சியின் குமரகோட் டத்தனே
செங்கீரை யாடி யருளே
திருவக்க மணியுடன் கமண்டலம் கொண்டவா
செங்கீரை யாடி யருளே. 16

நீலகண் டத்தனாய் நீள்சடை யணணலாய்
நிமலனாய்ப் பித்த னாகி
நெடிதுயர்ந் தோங்கிடும் சோதியாய் அயனொடு
நெடியவர்க் கரிய னாகிக்
கோலமார் வெண்பிறை சூடிடும் அழகனாய்க்
குலமுறை வளர்க்கும் நெறியிற்
கொற்றமேர் பாண்டியன் மருகனாய் மதுரையின்
குழகனாய் வேந்த னாகி
ஞாலமார் கூலியாய்க் குரவனாய் மறவனாய்
நல்வளை வணிக னாகி
நலமெலாம் தந்திடும் ஈசனின் மைந்தனே
நற்றொழில் இனிது மேவும்
சீலமார் காஞ்சியின் குமரகோட் டத்தனே
செங்கீரை யாடி யருளே
செம்மையார் மணியுடன் கமண்டலம் கொண்டவா
செங்கீரை யாடி யருளே. 17

அம்மையாய் அப்பனாய் அத்தனாய் அண்ணலாய்
அறுமுகச் சிவனு மாகி
அழகனாய்க் குமரனாய் விருத்தனாய் வேடனாய்
அணிதிகழ் வேங்கை யாகி
மம்மரைத் தீர்த்திடும் மணியனாய் வேலனாய்
மதிநிறை புலவ னாகி
வல்வினை போக்கிடும் வாசனாய் வள்ளியின்
மனம்வளர் செல்வ னாகி
நம்பனே கம்பனின் நுதலினிற் றோன்றிடும்
ஞானமார் தழல தாகி
நற்றவம் மல்கிடும் திருமுறைப் பனுவலை
நாள்தொறும் ஓதி மேவும்
செம்மைகொள் காஞ்சியில் ஓங்கிடும் சேந்தனே
செங்கீரை யாடி யருளே
சிந்தையார் மணியுடன் கமண்டலம் கொண்டவா
செங்கீரை யாடி யருளே. 18

பகலவன் றன்னொடு மதியையும் பரிவுடன்
பகர்கின்ற விழிக ளாக்கிப்
பார்திகழ் குக்குடப் பதாகையும் கொண்டுநற்
பரிசமாய் அத்தி தன்னை
மகபதி யளித்திடத் திருமணம் புரிந்துநன்
மஞ்ஞையில் அமர்ந்து பாரில்
மகிழ்வுடன் அறுபடைக் கதிபனாய் வரதனாய்
மாட்சிமை புரிந்து சீரார்
தகவுறும் அருணகி ரிக்கருள் முருகனே
தலந்தொறும் வீற்றி ருக்கும்
தனிப்பெருங் கந்தனே வள்ளியின் காந்தனே
சந்ததம் விழாமு யங்கித்
திகழுநற் காஞ்சியின் குமரகோட் டத்தனே
செங்கீரை யாடி யருளே
சீரக்க மணியுடன் கமண்டலம் கொண்டவா
செங்கீரை யாடி யருளே. 19

ஆர்கடல் ஈட்டிய ஆலமும் வாய்த்திடும்
அமுதெனப் பருகி வானோர்
அயர்வினைத் தீர்த்துநல் உலகினைக் காத்திடும்
அமரனுக் குரைபு கன்று



தேர்ந்தருட் பாங்குடன் பாம்பனார் போற்றிடும்
சிந்தையார் வடிவில் தோன்றித்
திருத்தலம் காட்டிடும் தனிப்பெரும் குமரனே
தேவானைக் குகந்த குகனே
போர்திகழ் தேவரா யர்தமக் கருள்தரும்
பிரியனே சுப்ர மண்யா
பெருமைசேர் அழகொடும் இலட்சதீ பங்களாற்
பிரணவப் பொருளை வாழ்த்தும்
சீர்திகழ் காஞ்சியின் குமரகோட் டத்தனே
செங்கீரை யாடி யருளே
சீலமார் மணியுடன் கமண்டலம் கொண்டவா
செங்கீரை யாடி யருளே. 20

## தாலப் பருவம்

முகமா றுடையாய் மஞ்ஞையமர்
முருகா அருளார் அழகோனே
மூவா சேவற் கொடியுடனே
முந்தும் அருளைப் பொழிவோனே
இகவாழ் வினிலே ஏற்றமுடன்
எழிலார் கருணை புரிவோனே
ஈசன் போற்றும் குமரோனே
இமவான் மடந்தைப் புதல்வோனே
புகலும் அடியார் நலம் பெறவே
புரக்கும் வானோர் பெருமானே
பூவைக் குறத்திப் பணியதனைப்
போற்றும் தணிகைப் பதியோனே
தகவான் காஞ்சிப் பதியினில் வாழ்
தலைவா தாலோ தாலேலோ
தரமார் படைப்புத் தொழில் மேவும்
தனிவே லவனே தாலேலோ. 21

அருளார் கனியைப் புவிக்களிக்கும்
அமைப்பாற் பழநிப் பதியிலுறை
அமுதே தேவர் குலப்பதியே
அயன்மால் போற்றும் அரும்பொருளே

அருணை முனிவர் அருந்தமிழில்
அழகாய் நிலவும் கருப்பொருளே
அணியார் தெய்வ யானையுடன்
அணங்காம் வள்ளிக் குறமகளை
அருளால் மணங்கொள் முருகோனே
ஆறு படைகொண் டொளிர்வோனே
அருவாய் உருவாய் அருவுருவாய்
அனைத்தும் ஆகும் தனியோனே
அருளார் காஞ்சிப் பதியினில்வாழ்
அழகா தாலோ தாலேலோ
அருளார் படைப்புத் தொழில்மேவும்
அமரா தாலோ தாலேலோ. 22

புனிதம் காக்கும் பரந்தாமன்
புகழார் இராமன் காகுத்தன்
பொங்கும் கடலிற் றுயில்மாயன்
போதன் போற்றும் வேங்கடவன்
நனிசீர் வரதன் கோவிந்தன்
நாதன் கண்ணன் கோபாலன்
நலம்சேர் ஆழிப் படைகொள்ளும்
நாரா யணனாம் நரசிங்கன்
இனியன் துளபன் வாமனனாய்
இகவான் அளக்கும் கார்வண்ணன்
எனவாய் விளங்கும் திருவரங்கன்
எழிலார் மருகா பேரின்பக்
கனியார் காஞ்சிப் பதியினில் வாழ்
கந்தா குகனே தாலேலோ
கவினார் படைப்புத் தொழில் மேவும்
கனியே தாலோ தாலேலோ. 23

பழநிப் பதியில் சிறந்தொளிரும்
பதியே பால முருகோனே
பாவைக் குறமா மகளுடனே
பரவும் வேடர் போற்றிடவே
அழகார் வேங்கைத் தருவாகி
அருளும் தணிகைக் குமரோனே
ஆடும் மஞ்ஞை மகிழ்ந்திடவே
அமரும் பதியே வேலவனே



வழங்கும் தமிழைக் குறுமுனிக்கு
வகையாய் ஓதும் புலவோனே
வணங்கும் அடியார் வாழ்வுறவே
வரங்கள் அருளும் குருபரனே
முழங்கும் காஞ்சிப் பதியினில்வாழ்
முதல்வா தாலோ தாலேலோ
மொழியும் படைப்புத் தொழில்மேவும்
முருகா தாலோ தாலேலோ. 24

வலமார் சூரன் றனைமாய்த்து
மகிழ்வால் சேவல் மயிலாக்கி
வடிவார் தெய்வ யானையுடன்
வள்ளிக் குறமா மகளோடு
நலமே புரியும் தகைமையிலே
நாளும் விளங்கும் அடியவர்கள்
நனிசேர் புகழும் செல்வமுடன்
நற்றாள் போற்றும் செம்மையுற
நிலங்காண் தெய்வ மணிவிளக்காய்
நிலவும் முருகா சிவகுமரா
நெடியோன் போற்றும் வடிவழகா
நெறியார் தேவர்க் கிறையோனே
குலமார் காஞ்சிப் பதியினில் வாழ்
குமரா தாலோ தாலேலோ
குணமார் படைப்புத் தொழில் மேவும்
குகனே தாலோ தாலேலோ. 25

செந்திற் பதிவாழ் சிவகுமரா
சீரார் தணிகைப் பதிமேவித்
தெய்வத்தலமாம் பரங்குன்றில்
திகழும் பொருளே வேலவனே
வந்திப் பவரைக் காத்தருளும்
வாழ்வே என்றன் மனக்கொழுந்தே
வளமைக் கனியாய் செழித்தோங்கும்
வயலூர் மேவும் நன்மணியே
முந்தைப் பொருளே மேதினியின்
முதல்வா சைவத் திருமணியே
முந்தி யருளும் முதற்பொருளே
மூவர் போற்றும் விழுப்பொருளே

கந்தா காஞ்சிப் பதியினில் வாழ்
கார்த்தி கேயா தாலேலோ
கனிவார் படைப்புத் தொழில்மேவும்
கடம்பா தாலோ தாலேலோ. 26

பாட்டும் பொருளும் தானேயாய்
பாடற் கினிய வாக்களிக்கும்
பரமாய் நின்றவ் வடியவர்தம்
பரவும் நெஞ்சிற் புகுந்திருந்து
வாட்டம் போக்கும் நிலைபுரிந்து
வளமும் நலமும் செய்வித்து
மகிழும் முருகா குறமகளை
வரிக்கும் அழகா இளங்குமரா
தேட்டம் பெருகப் போற்றிடவே
தெவிட்டா இன்பம் பரிந்தளிக்கும்
திருவே தணிகைப் பதியரசே
சிவனார் போற்றும் இளவரசே
காட்டும் நலங்கொள் காஞ்சியில்வாழ்
கந்தா குகனே தாலேலோ
கவினார் படைப்புத் தொழில்மேவும்
கடம்பா தாலோ தாலேலோ. 27

அழியாச் சூரன் செருக்கடக்கும்
ஆறு முகனே அருணகிரிக்
கருளும் குகனே அவனிதனில்
ஆறு படைகொண் டொளிர்பவனே
விழியீ ராறும் வேற்படையும்
மேவும் புகழார் ஆறெழுத்தும்
மெய்யுறை யாக அடியவர்க்கு
மேலாய் அருளும் நன்மணியே
விழைவாய் மயிலம் இரத்னகிரி
வேலூர் வயலூர் குமரகிரி
மிளிரும் பேரூர் மருதமலை
மின்னும் புகழார் தலத்தமர்ந்து
மொழியார் காஞ்சிப் பதியினில்வாழ்
மோன ஒளியே தாலேலோ
முதலாம் படைப்புத் தொழில்மேவும்
முருகா தாலோ தாலேலோ. 28



தேவர் துயரைத் தீர்த்தருளச்
சேனா பதியாய் வந்தவனே
தேராச் சூரன் றனைமாய்த்துத்
தேரும் செயலைப் புரிந்தவனே
கூவற் செங்கட் கிடாவதனின்
கொட்டம் அழிக்கும் குமரோனே
கூறும் மறையின் பொருளறியாக்
குறைசேர் அயனைத் தடிந்தவனே
ஏவும் கிறிசெய் மலையனுடன்
இகலே புரியும் மாகறனும்
இனங்கெட் டழியச் செய்திடவே
இனிமை புரியும் வேலவனே
சேவைக் குரிய காஞ்சியில்வாழ்
சிவனார் புதல்வா தாலேலோ
திருவார் படைப்புத் தொழில்மேவும்
சேந்தா தாலோ தாலேலோ. 29

அன்னப்பறவை எனவாகி
அரனைத் தேடும் வழியினிலோர்
அமையா வொருசொல் புகன்றமையால்
அலரை யடைந்த நான்முகனும்
மன்னும் மறையின் நற்பொருளை
மயங்கும் அறிவால் மறந்திடவே
வளரும் அருளாற் சிறையிருத்தி
வயங்கும் பொருளை நனியுரைக்கும்
மின்னும் ஞானப் பெருநிதியே
மேவும் சுவாமி மலைக்கரசே
வெல்லும் தனிவேற் படையுடனே
விளங்கும் பதியே செம்மையெலாம்
நண்ணும் காஞ்சிப் பதியினில்வாழ்
ஞானக் குமரா தாலேலோ
நயமார் படைப்புத் தொழில்மேவும்
நாதா தாலோ தாலேலோ. 30

## 4. சப்பாணிப் பருவம்

பரநிந்தை செய்திடும் பான்மையில் தக்கனும்
பகரொணா வினையி லாழ

பரிவுறா வேள்வியைப் புரிந்திடும் நாளினிற்
பகர்வீர பத்ர னாகிக்
கரமேந்திப் பார்த்தனும் போற்றிடும் வேடனாய்க்
கானிடை யமர்பு ரிந்து
கனிவுடன் பாசுப தத்தினை ஈந்துநற்
கவினுறு வரங்கள் தந்தும்
புரமெரித் தருள்தரும் தனிப்பெரும் வேந்தனாய்ப்
புலவனாய்க் கூலி யாகி
போற்றிடும் அடியவர் நற்பதம் எய்தவே
போந்தருள் பரமன் ஈன்ற
தரமிகும் காஞ்சியின் குமரகோட் டத்தனே
சப்பாணி கொட்டி யருளே
தனியக்க மணியுடன் கமண்டலம் கொண்டவா
சப்பாணி கொட்டி யருளே. 31

சிலையேந்தித் தீயரைச் செறுத்திடும் நோக்கினால்
செம்மையாய் நாட்ட முற்றுச்
சீரோங்கும் சக்கரப் படைகொளும் செய்கையால்
சிவனாரைப் போற்றி நிற்க
நிலையான ஒருமலர் மறையவே புரிந்திடும்
நிலைதனைக் காண மேவும்
நேயமாய்க் கண்ணிடந் தருச்சனை செய்திடும்
நெடியமால் நயந்து தந்த
கலைமேவும் வள்ளியின் கருத்தினைக் காத்திடும்
கனிவுறும் அருள்புரிந்து
காடுற்ற கருணையால் குன்றெலாம் ஓங்கிடும்
கந்தனே பால முருகா
தலையான காஞ்சியின் குமரகோட் டத்தனே
சப்பாணி கொட்டி யருளே
தகவக்க மணியுடன் கமண்டலம் கொண்டவா
சப்பாணி கொட்டி யருளே. 32

பாரோங்கு வாய்மையால் குறுமுனிக் கருள்செயும்
பரிவினில் தமிழ்ப கர்ந்து
பணிமேவும் ஔவையின் பொன்மனம் மகிழ்வுறப்
பாங்குடன் கனியும் ஈந்து
தேரோங்கும் அருணையின் தவமுனிச் செம்மலாம்
சீர்மேவும் அருண கிரியின்



திருப்புகழ்ப் பனுவலில் விருப்புடன் விளங்கிநற்
றினைப்புனம் தனில்தி ரிந்தும்
சீரோங்கு இளையவேல் தாங்கிநன் னலந்தரும்
செவ்வேள்வி காத்து கந்தும்
சிற்றினச் சூரனைத் தடிந்திடும் செம்மையால்
திகழ்வே லெறிந்த முருகா
தாரோங்கு காஞ்சியின் குமரகோட் டத்தனே
சப்பாணி கொட்டி யருளே
தகவக்க மணியுடன் கமண்டலம் கொண்டவா
சப்பாணி கொட்டி யருளே. 33

நித்தமாய் மேவிநற் செம்பொரு ளாகிவான்
நிலையமாய் மலர்ந்தி ருந்தும்
நிறைவுறும் மகிழ்வொடும் நான்மறை போற்றவும்
நின்மலப் பொருளு மாயும்
பத்தியாய்ப் போற்றுநற் பாவலர் நெஞ்சினிற்
பாங்குடன் விளங்கி நின்றும்
பாரினில் மாந்தரின் பாசமோர் துயரினைப்
பரிவுடன் தீர்த்து வானோர்
அத்தியும் வள்ளியும் சூழவே வீற்றிருந்
தருள்சுரந் தாண்டு நிற்கும்
ஆறுமா முகத்தனே அம்பிகை மைந்தனே
அண்ணலே தெய்வ மணியே
சத்தியார் காஞ்சியன் குமரகோட் டத்தனே
சப்பாணி கொட்டி யருளே
தகவக்க மணியுடன் கமண்டலம் கொண்டவா
சப்பாணி கொட்டி யருளே. 34

வண்மைசேர் அறங்களை வகையுடன் நாட்டிநன்
மாவடிப் பூசை செய்தும்
மலையத் துவசனின் மகளெனும் பேற்றினில்
மாண்புடன் தவம்பு ரிந்தும்
திண்மைசேர் கூடலின் தனிப்பெருஞ் செல்வியாய்ச்
சிறப்புடன் ஆட்சி செய்தும்
சீலமார் பட்டரின் செந்தமிழ்ப் பாடலைத்
திருச்செவிக் கமுத மாக்கி
உண்மையாய் ஏத்திடும் அடியவர்க் கருள்தரும்
ஒண்ணருள் தாயு மாகி

உலகெலாம் பரவிடும் உண்மயருள் மைந்தவென்
னுளந்தனில் விளங்கு குகனே
தண்மைசேர் காஞ்சியின் குமரகோட் டத்தனே
சப்பாணி கொட்டி யருளே
தனியக்க மணியுடன் கமண்டலம் கொண்டவா
சப்பாணி கொட்டி யருளே. 35

குருவருள் புரியும் குறிப்பினிற் றொன்மைக்
குருந்தையின் நிழலொ துங்கும்
குரிசிலாய்க் கூத்துக் கதிபனாய்க் கோலக்
கூலியாய் வணிக னாகி
மருவிடும் மாதின் பங்கனாய் மேவும்
மாமனாய் மகிழ்ந்து காக்கும்
வரதனாய் சோதிப் பிழம்பதாய் மாலும்
வாழ்த்திடும் முதல்வ னாகித்
திருவருள் புரியும் திகம்பர னாகிச்
செவ்வருள் காட்டும் ஈசன்
திருச்செவிக் கமுதம் தந்திடும் குகனே
சீரருட் கமண்டல மேந்தித்
திருவளர் காஞ்சிப் பதிவளர் முருகா
சப்பாணி கொட்டி யருளே
தனியக்க மணியைத் தாங்கிடும் குமரா
சப்பாணி கொட்டி யருளே. 36

அஞ்செழுத் தாகி யதனுளே வைகி
அம்மையும் அப்பனும் ஆகி
அஞ்செழுத் துறவால் அரும்பொருள் காட்டி
அஞ்சிடும் வினைய கற்றி
அஞ்செழுத் தோதும் அரியதும் ஆகி
அதனுளே ஒளிரும் வண்மை
ஆறெழுத் தாகி அன்பருக் கருளும்
அரும்பதச் செழுமை காட்டி
அஞ்சலென் றாளும் அறுமுகத் தரசே
அத்தியும் வள்ளி மானும்
அழகுடன் திகழ அறுபடை மேவும்
அண்ணலே முருக வேளே
சஞ்சலம் தீர்க்கும் காஞ்சியின் குமரா
சப்பாணி கொட்டி யருளே



தகவுடன் அக்க மணிகொளும் குகனே
சப்பாணி கொட்டி யருளே. 37

பற்றாக நின்னையே பற்றாத சூரனைப்
பணிசெயும் மஞ்ஞை மற்றும்
பாரினில் நின்புகழ் பாடிடும் சேவலாய்ப்
பரிவுடன் மேவ வைத்து
நற்றாளின் தண்ணருள் நித்தமும் காட்டிடும்
நல்லருட் பாங்கு தன்னை
நானிலத் தன்பர்கள் யாவரும் போற்றவே
நளினமாய்ச் செந்தில் மேவி
வற்றாத வண்மையை வாசமாய்த் தந்திடும்
வடிவேல னேசண் முகனே
மன்னுதெய் வானையும் வள்ளியும் சூழவே
மகிழ்வொடும் வீற்றி ருக்கும்
சத்தான காஞ்சியின் குமரகோட் டத்தனே
சப்பாணி கொட்டி யருளே
தகவக்க மணியுடன் கமண்டலம் கொண்டவா
சப்பாணி கொட்டி யருளே. 38

மாலவன் தங்கையாய் மாதரி யன்னையாய்
மலையனின் மகளு மாகி
வானமார் கங்கையாய் தேவிகா மாட்சியாய்
வளந்தரும் மாரி யாகிக்
காலனைக் காய்ந்திடும் கன்னியாய்க் கௌரியாய்க்
காலபை ரவியு மாகிக்
கனிந்தருள் புரிந்திடும் ஏலவார் குழலியாய்க்
கற்பகத் தன்னை யாகி
நீலியாய்ச் சத்தியாய் நேயமார் மாந்தரின்
நினைவில் நிலைத்து நிற்கும்
நிகிலமாய் விளங்கிடும் நிமலையின் மைந்தனே
நித்தமாய் மேவும் குகனே
சாலநற் காஞ்சியின் குமரகோட் டத்தனே
சப்பாணி கொட்டி யருளே
தனியக்க மணியுடன் கமண்டலம் கொண்டவா
சப்பாணி கொட்டி யருளே. 39

நீலகண்டத்தனாய் நித்தனாய் வேந்தனாய்
நிமலனாய் ஏன மாகி
நேர்கொளும் வணிகனாய்ச் சித்தனாய் மறவனாய்
நிறைமிகு மறையு மாகிச்
சீலமுத் கண்ணனாய்ச் சிந்தையார் வண்ணனாய்
செம்மைசேர்ப் புலவனாகித்
தேவமா தேவனாய்க் குருந்தையார் குரவனாய்த்
தேவியோ டொன்றி மேவும்
சூலமார் கரத்தனாய்க் கங்கையார் சடையனாய்ச்
சுந்தரக் கடவு ளாகிச்
சூழ்வினை தீர்த்தருள் ஈசனின் மைந்தனே
தொழும்பரைக் காக்குங் குகனே
சாலையார் காஞ்சியின் குமரகோட் டத்தனே
சப்பாணி கொட்டி யருளே
தனியக்க மணியுடன் கமண்டலம் கொண்டவா
சப்பாணி கொட்டி யருளே. 40

## 5. முத்தப் பருவம்

வினையிலே கிடந்து வேர்த்திடும் வகையில்
வேதனை பெருக்கி வாடும்
வெய்யனேன் றன்னை நின்னருட் கருணை
விளையுமா றுகந்து காட்டித்
தினையள வெனினும் செய்திடிற் குகனே
சிந்தையும் தேறி நிற்பேன்
தினைப்புனம் காக்கும் திருவினை மணநத
செல்வனே மஞ்ஞை யேறி
அனைவரும் போற்ற அவனியில் விளங்கும்
அமுதனே ஆறு முகனே
அருவமாய் உருவ அருவுரு எனவாய்
அருள்தரும் சிவகு மாரா
மனைவளர் காஞ்சிக் குமரகோட் டத்தின்
மணியனே முத்த மருளே
மாதிகழ் கமண்ட லத்துடன் திகழும்
மணியனே முத்த மருளே. 41



சீர்மிகும் தெய்வச் சக்கரப் படையைச்
செருக்குடன் மார்பில் தாங்கித்
தேவரும் வான யாவரும் மருளத்
தெவ்வரைத் தாக்குந் தீயன்
தேர்மிகுஞ் சூரன் தாருகன் வெருளத்
தீரவேல் செலுத்தி வென்று
செப்பருஞ் சீரா றெழுத்தினைப் பருகும்
சிந்தனைச் செல்வர் மகிழ
ஊர்தொறும் ஏகி ஒண்ணருள் புரியும்
உம்பர்தம் தலைவ மாந்தர்
உற்றிடும் இடரைத் தீர்த்தருள் நல்கும்
ஒருவனே முருக வேளே
கார்வளர் காஞ்சிக் குமரகோட் டத்தின்
கந்தனே முத்த மருளே
கைவளர் கமண்ட லத்துடன் மேவும்
கடம்பனே முத்த மருளே. 42

அருளோங்கு தேவியின் திருக்கரந் தன்னிலோர்
அறுமுகத் தண்ண லாகி
அழகுறும் கார்த்திகை மாதரின் அன்பிலார்
அணிதிகழ் பால னாகித்
திருவோங்கு வாய்மையால் தரணிவாழ் மகிமையால்
அருள்நிறை ஆறு பதியின்
சேந்தனாய் வீற்றிருந் தின்னருட் கருணையைச்
செம்மையாய் மகிழ்ந்து நல்கிப்
பொருளோங்கு பிரணவப் பெரும்பொருள் மாட்சியைப்
புகன்றிடும் பெற்றி காணாப்
பொன்மலர் வாசமார் பிரமனின் செருக்கினைப்
போக்கவே தடிந்து காக்கும்
தருவோங்கு காஞ்சியின் குமரகோட் டத்தனே
சத்தான முத்த மருளே
தனித்திரு மணியுடன் கமண்டலம் கொண்டவா
சாலநல் முத்த மருளே. 43

வேங்கையின் தோலுரித் தணிந்து மான் மழுவொடும்
வெற்றிகொள் சூலம் தாங்கி

வெங்கரித் தோலுரித் தொல்லைமுப் புரந்தனை
வீழ்த்திடும் முறுவல் காட்டி
ஓங்குயர் வாதவூர் அண்ணலார் அருள்மொழிக்
குகந்துநற் குருந்தை யேகி
ஓதரும் கங்கைநல் வைகையின் மேவலால்
ஒருதனிக் கூலி யாகி
ஏங்கிடும் வந்தியார் பிட்டினை மாந்திநல்
எளியனாய்க் காட்சி நல்கும்
ஈசனார் போற்றிடும் வாசமார் மைந்தனே
ஈறிலா உமையின் மகனே
பாங்குயர் காஞ்சியின் குமரகோட் டத்தனே
பரிவுடன் முத்த மருளே
பகர்திரு மணியுடன் கமண்டலம் கொண்டவா
பரந்தரும் முத்த மருளே. 44

தேவமா தேவனாய் நேயனாய்ப் பாணனாய்த்
தேர்ந்தநல் தோழ னாகிச்
செய்யமுக் கண்ணனாய் நாதனாய் வேடனாய்ச்
செவ்வருள் தாயு மாகி
மாவடி யேகுநல் ஏகனாய்க் கம்பனாய்
மங்கைநற் பாக னாகி
வாதிடும் வண்ணனாய் வேதனாய் வேந்தனாய்
வன்னியைத் தாங்கி மேவும்
கோவணத் தண்ணலாய்க் கூலிக பாலியாய்க்
கூத்தனாய்ப் பித்த னாகிக்
கோலமார் அரவொடும் திங்களைத் தரித்திடும்
கொன்றையார் பரமன் ஈன்ற
ஆவளர் காஞ்சியின் குமரகோட் டத்தனே
அன்புடன் முத்த மருளே
அரன்விழி மணியுடன் கமண்டலம் கொண்டவா
அன்புடன் முத்த மருளே. 45

பாண்டவர் பசியறப் பாத்திரம் நல்கியும்
பார்த்திபன் நேய னாகிப்
பரிவுடன் சுபத்திரை நங்கையைத் தந்துநற்
பாங்குடன் மணமு டித்தும்



மாண்புடன் கீதையைப் பகர்ந்திடும் ஞானியாய்
மாபெருங் காட்சி நல்கி
மன்னுயிர் காத்திடும் வாமனன் மருகனே
மஞ்ஞையில் அமருங் குகனே
வேண்டுவார்க் கருள்தரும் வள்ளலே குன்றமர்
வேலனே கார்த்தி கேயா
வெற்றியார் சேவலும் நின்புகழ் சாற்றநல்
மேதினி காக்கும் முருகா
நீண்டுயர் காஞ்சியின் குமரகோட் டத்தனே
நித்தனே முத்த மருளே
நீலநன் மணியுடன் கமண்டலம் ஏந்திடும்
நிமலனே முத்த மருளே. 46

முன்வினை தந்திடும் வெம்மையால் நைந்துயான்
முறைபடல் காண விலையோ
முந்துறும் தீமையால் உருக்குலைந் தழிந்திடும்
முறியனைக் காண விலையோ
என்வினைக் கீழ்மையை நின்னருட் கருணையால்
இணைத்தருள் புரிய நின்றன்
எழில்மிகும் பதமலர் காட்டிடும் பாங்கினில்
இன்னமும் தாம தித்தால்
பின்னையும் காப்பவர் யாருளர் எந்தையே
பேரருள் புரியும் குகனே
பிஞ்ஞகன் மைந்தனே காஞ்சியின் குமரனே
பிரணவப் பொருள்ப கர்ந்த
வண்ணனே நின்னருட் கருணையின் அங்கமாய்
மகிழ்வுடன் முத்த மருளே
மருளெலாம் தீரவும் திருவருள் சேரவும்
மகிழ்வுடன் முத்த மருளே. 47

அஞ்சியே வாடும் அடியவன் மனத்தின்
அச்சமும் போக்கி மேவும்
ஆவலாற் செய்யும் செய்கையால் தோன்றும்
அல்லலைத் தீர்த்தும் என்றன்
நெஞ்சமும் நின்னை நேயமாய்ப் போற்றி
நித்தமும் வாழ்த்தும் திறமும்

நேரிடும் வாழ்வில் மிடியுறா நிலையும்
நெக்குறும் மனமும் மற்றும்
விஞ்சுநின் சீரைச் செப்பிடும் பண்பும்
விருப்புடன் வழங்குஞ் சீரும்
மேன்மையாய் நல்கும் வாய்மைசேர் பாங்கும்
மேதினி தனிற்சி றக்க
நெஞ்சமார் காஞ்சிக் குமரனே என்றன்
நேயனே முத்த மருளே
நீலநன் மணியும் கமண்டலம் ஏந்தும்
நிமலனே முத்த மருளே. 48

பத்தரைப் போற்றும் பாங்கினை யறியாப்
பாவியேன் தேரும் வண்ணம்
பத்தியும் பண்பும் பாரினில் தந்தும்
பரிவுடன் காத்து நின்றும்
நித்தமும் சேரும் நீள்வினைப் பிணியால்
நீத்திடும் வாழ்வு தன்னில்
நேரிடும் துயரைத் தீர்த்தருள் புரியும்
நியமமும் வண்மை சீரும்
முத்தியின் நலமும் மோனமும் நின்பால்
முனிதலில் லாத அன்பும்
மூப்புறா எழிலும் மிடியுறா வளமும்
முந்துறும் கருணை யோங்க
வித்தையார் காஞ்சிக் குமரனே குகனே
வேலனே முத்த மருளே
வேயுநன் மணியைக் கனிவுடன் ஏந்தும்
மெய்யனே முத்த மருளே. 49

காலனைக் காலால் தடிந்திடும் செம்மை
காட்சியைத் தந்த பரமன்
காலபை ரவனாய்த் திகழ்ந்திடும் தூயன்
கங்கையைத் தாங்கும் இறைவன்
மாலவற் காழி தந்திடும் வரதன்
மங்கையோ டொளிரும் அழகன்
வன்னியோ டரவும் சூழவே விளங்க
வள்ளலாய் அருளும் தேவன்
சீலமாய்த் தில்லைச் சபையினில் ஆடும்



செம்மலாம் ஈசன் பெற்ற
சேந்தனே வள்ளிக் காந்தனே நிலவும்
தினைப்புனம் திரிந்த கோனே
கோலமார் காஞ்சிக் குமரனே குகனே
குழைவுடன் முத்த மருளே
கொன்றையார் சடையன் மைந்தனே
குணமிகும் முத்த மருளே. 50

## 6. வருகைப் பருவம்

வாதவூர் அண்ணலார் வாசகம் தன்னிலோர்
வண்ணமாய் விளங்கி நின்று
மாலயன் காண்கிலா மாண்புசார் சோதியாய்
மலர்ந்தருள் வாய்மை யாகி
மாதரார் பிறையுடன் விடைதனிற் றோன்றியும்
வாணிகா மாட்சி மகிழ
வரித்தருள் சிறக்கநல் லுலகெலாம் காத்தருள்
வடிவமாய்க் கோல மேற்றுச்
சீதமார் கங்கையைத் தரித்திடும் ஈசனின்
சிந்தையும் குளிரும் வண்ணம்
செம்மைகொள் பிரணவப் பெரும்பொருள்
பகர்செயும்
சேந்தனே சுவாமி நாதா
வேதமார் காஞ்சியின் குமரகோட் டத்தனே
வேதனே வருகை புரிவாய்
வேயுநன் மணியுடன் கமண்டலம் கொண்டவா
விழைந்துநீ வருகை புரிவாய் 51

மாயமான் வீழ்வுறச் செற்றுகா னத்திடை
வாழ்தவச் சபரி மேவும்
மாவளர் சாலைகண் டன்புசார் அமுதினை
மகிழ்வுடன் ஏற்று கந்து
ஆயநற் கலைஞனாம் அனுமனை யாண்டுகொண்
டகந்தனில் இனிமை நல்கி
அருள்தரும் இராகவன் மருகனாய்த் திகழ்ந்தருள்
அழகனே மஞ்ஞை யேறி
தூயநல் லுலகெலாம் ஏத்தநல் வளந்தரும்
சோதியே பால குகனே

தூமறை போற்றுமா தேவனே தேவர்தம்
துயரெலாம் தீர்க்கும் பரனே
நேயமார் காஞ்சியின் குமரகோட் டத்தனே
நிமலனே வருகை புரிவாய்
நீலநன் மணியுடன் கமண்டலம் கொண்டவா
நித்தனே வருகை புரிவாய். 52

மூவடி மண்கொளும் வாமனச் செம்மலாய்
முதல்வனாய் உலக ளந்து
மூலமாய்த் தோன்றிநல் யானையைக் காத்தருள்
முகுந்தனின் மருக னாகிக்
காவடி கொண்டுனைப் போற்றிடும் மாந்தரைக்
கருத்துடன் காக்கும் வகையிற்
கார்மயில் மீதமர்ந் துலகெலாம் வலம்வரும்
கந்தனே சுப்ரமண்யா
பூவடிக் குறமகள் அன்பினிற் றிகழ்ந்தருள்
புனிதனே ஈசன் மகனே
புகலரும் சூரனைத் தடிந்தருள் நல்குநற்
புண்ணியா தணிகை நாதா
மாவடிச் சீர்கொளும் காஞ்சியின் குமரனே
மாரனே வருகை புரிவாய்
மணியுடன் கமண்டலம் கொண்டருள் வேலனே
வரதனே வருகை புரிவாய். 53

கீசகன் செய்பிழை கண்டுசீற் றத்தினிற்
கிளர்ந்துடற் கிழித்து வென்று
கேடிலா வாய்மையாற் றிகழுமா வீமனின்
கீர்த்திகொள் இளவ லான
ஆசறு பார்த்தனார் தேரினிற் சாரதி
ஆகிய கண்ணன் மருகா
ஆர்த்திடும் சூரனைப் பார்புகழ் மஞ்ஞையென்
றவனியிற் றிகழ வைத்து
வாசமார் வள்ளிதெய் வானையோ டிருந்துநல்
வரங்களை நல்கி மகிழும்
வண்மையோ டறுபடை வீடுகொண் டருள்தரும்
வள்ளலாய் விளங்கும் முருகா



நேசமார் காஞ்சியின் குமரகோட் டத்தனே
நிமலனே வருகை புரிவாய்
நீலநன் மணியுடன் கமண்டலம் கொண்டவா
நித்தனே வருகை புரிவாய். 54

தந்தையார் தாளறுஞ் செயல்புரி மைந்தனின்
தரமிகு பூசை யேற்றுத்
தாழ்விலாத் திருவடிப் போதினால் தடவியும்
தண்ணொளிர் விழியை யப்பிச்
சிந்தையே சிவமெனத் திகழ்ந்திடும் அண்ணலாம்
திண்ணனார் மகிழும் வண்ணம்
செவ்வையாய்த் திருமொழி பகர்ந்துடன் முத்திநற்
சீரினை யுகந்து நல்கி
எந்தையாய்த் திகழுமுக் கண்ணனின் மைந்தனே
என்றனை யாளும் குகனே
இளங்குற மகளொடும் விளங்கிடும் அமுதனே
ஈடிலா வரங்கள் நல்கும்
சந்தமார் காஞ்சியின் குமரகோட் டத்தனே
சார்ந்துநல் வருகை புரிவாய்
தண்மைசேர் மணியுடன் கமண்டலம் கொண்டவா
தளிர்நடை பயின்று வருவாய். 55

அருணையின் முனிவரும் அருணகி ரித்தமிழ்
அமுதினை விழைந்து மேலாய்
அருள்சொரிந் தாற்றலார் கீரனின் செந்தமிழ்
அரங்கினில் மேவி நின்று
மருவிலாக் குறுமுனிக் கருள்தரும் வண்மையால்
மாண்புடன் தமிழ்பு கன்று
வண்ணமாய்ப் பாம்பனார் தவமுனி வாழ்த்தவும்
மன்பெரு பாதை காட்டிக்
கருணையோ டருள்தரும் கந்தனே நேயனே
காமனை வென்ற குகனே
கற்றவர் போற்றிடும் வித்தகச் செம்மலே
காலத்தில் அருளும் குமரா
தருவளர் காஞ்சியின் குமரகோட் டத்தனே
சால்புடன் வருக வருக
சாலநன் மணியுடன் கமண்டலம் கொண்டவா
தனிவே லுடன்வ ருகவே. 56

மாசிலா அடியவர் வாழிடம் தேடியும்
மகிழ்வுடன் நாடி நின்றும்
மாவருள் சேர்த்தவர் மனமுறைந் தாட்கொளும்
வடிவேற் குமார வேள்என்
மாசுறு மனத்தினும் வாசமாய் ஏற்றிடும்
வண்மையாற் குடிபுகுந்து
மாண்பொடும் அருள்செயும் வாய்மையை மறந்திடும்
மாசினைக் கொண்டு வாடும்
மாசுடை யேனைநின் மாநெறிக் காக்குநல்
வரமெலாம் விழைந்து நல்கி
மாநிலம் உய்யநல் வள்ளிதெய் வானையும்
வகையுடன் அருள்சு ரக்க
மாசிலாக் காஞ்சியின் குமரகோட் டத்தனே
மாநடை கொண்டு வருக
மன்னுநன் மணியுடன் கமண்டலம் கொண்டவா
மணிவே லுடன்வ ருகவே. 57

தீவினைச் சேர்க்கையால் போரிடும் சூரனைத்
திருவளர் மஞ்ஞை யாக்கித்
தீங்குசெய் தகர்செருக் கடக்கிவான் காத்தருள்
செம்மையைப் புரிந்து வேதன்
நாவினில் உறைந்திடும் கலைமகள் நாணமாய்
நாசியை இழந்து நிற்கும்
நலமறும் வேள்வியைத் தீய்த்தவன் மைந்தனாய்
ஞானமாய் விளங்கும் முருகா
காவியம் தந்திடும் கந்தனே சேந்தனே
கானுறை வள்ளி மானைக்
காதலாற் பற்றிடும் சண்முகச் செம்மலே
கனிவுடன் நல்வேல் ஏந்தி
மாவியற் காஞ்சியில் மேவிடும் அழகனே
மாநடை கொண்டு வருக
மகிழுநன் மணியுடன் கமண்டலம் கொண்டவா
மாவேலு டன்வ ருகவே. 58

**வேறு**

வாமசந் திரனைச் செஞ்சடை தாங்க
வாகையார் கொன்றை சூடி



மானொடு மழுவும் நற்கரம் தாங்க
மங்கைதன் னிடத்தி லோங்க
ஏமமார் கங்கை இணங்கிமேற் சேர
இடபமாய் மாயன் ஏந்த
இபந்தனை யுரித்த இணைக்கரம் தன்னில்
ஏற்றமார் சூலம் தாங்கித்
தாமமார் முக்கண் தண்ணருள் சேர்க்கத்
தழைத்தருள் ஈசன் மகனே
தமியனேன் றன்னைத் தடுத்தருள் புரியும்
சரவண பவகு மரனே
காமகோட் டத்திற் கனிந்தருள் காஞ்சி
கந்தனே வருகை புரிவாய்
காலனை வாட்டும் பாலனே குகனே
கனிவுடன் வருகை புரிவாய். 59

**வேறு**

ஈசனார் மைந்தனே இராகவன் மருகனே
இமவான் மடந்தை மகனே
ஏற்றவைந் தொழில்செயும் அறுமுகச் செல்வனே
இடும்பனுக் குகந்த குகனே
வாசமார் கார்த்திகை மாதரார் ஏத்திடும்
வடிவேல னேசண் முகனே
மன்னுதே வேந்திரன் மாமகள் தன்னொடும்
மதிமிகும் வள்ளி மாதை
ஏசலாய்க் கொண்டருள் வேடனே வணிகனே
இதயத்தில் ஒளிரும் பரனே
ஏறகா லாயுதப் பதாகையும் மஞ்ஞையும்
இனிமையாய்ப் போற்றி நிற்க
நேசமார் காஞ்சியின் குமரகோட் டத்தனே
நெருங்கிநீ வருகை புரிவாய்
நித்தமார் மணியுடன் கமண்டலம் கொண்டவா
நிகரிலா வருகை புரிவாய். 60

## 7. அம்புலிப் பருவம்

தேவமா தேவனாய்ச் சூரனை வென்றவன்
தேவருக் குகந்த தலைவன்

தீரமாய்த் தாருகன் வீழ்வுறச் செற்றவன்
செவ்வேல் ஏந்துங் குமரன்
சேவலும் மஞ்ஞையும் சேர்த்திடப் பெற்றவன்
செந்தமிழ் பகர்ந்த செல்வன்
செந்திலில் நின்றவன் தென்பரங் குன்றிலே
செவ்வருள் புரியும் அழகன்
பூவையாள் வள்ளியும் போற்றிடும் நாயகன்
புண்ணிய மாந்தர் நெஞ்சில்
போந்தருள் செய்பவன் தொல்வினை தீர்ப்பவன்
பூதலத் தருளும் குகனே
ஆவளர் காஞ்சியின் கந்தவேள் வாழ்த்தவே
அம்புலி ஆட வாவே
ஆயக மண்டலத் தண்ணலும் வாழ்த்தவே
அம்புலி ஆட வாவே. 61

வானவர் காவலன் நாரணன் இராகவன்
வாமனன் யசோதை மைந்தன்
மாலவன் கேசவன் இராதையின் காதலன்
மாதவன் பரசு ராமன்
ஏனமாய் வந்தவன் சங்கொடும் சக்கரம்
ஏந்திவான் அருளும் தேவன்
ஏற்றமார் பாற்கடல் நாயகன் கோவலன்
ஏணுறும் தூய செம்மல்
மேனலம் செய்பவன் வேங்கடன் சீதரன்
மேதினி காக்கும் கண்ணன்
வேதனின் தாதையாய் ஆண்டருள் அச்சுதன்
விரும்புநல் மருக னாய
ஆனநற் காஞ்சியின் கந்தவேள் போற்றவே
அம்புலி ஆட வாவே
ஆயக மண்டலத் தண்ணலார் போற்றவே
அம்புலி ஆட வாவே. 62

தக்கனின் வாக்கினால் தேய்ந்தநின் எழில்தனைத்
தரணியில் திகழ வைக்கும்
சக்தியார் பாலகன் நற்றமிழ்க் காவலன்
தவமெலாம் காக்கும் தீரன்



பக்கலில் நின்றுநின் பையிருள் போக்குநற்
பரமனே சுப்ர மண்யன்
பாங்குடன் நின்றனக் காருயிர்த் தோழனாய்ப்
பரிந்தருள் புரியும் குமரன்
மிக்கபே ரழகனாய் நிலவிடும் நித்தியன்
மிகையுடன் அருளும் முருகன்
மெய்யெனக் காப்பவன் மெய்யனாய் நிற்பவன்
வெம்மையில் லாத விமலன்
அக்கமேர் காஞ்சியின் கந்தவேள் வாழ்த்தவே
அம்புலி ஆட வாவே
ஆயக மண்டலம் தாங்கிடும் குமரனோ(டு)
அம்புலி ஆட வாவே. 63

திறத்துடன் வரத்தொளிர் பெற்றிகொள் சூரனைத்
திருக்கரத் தொளிரும் வேலாற்
செருக்குடன் யாக்கையும் மாற்றிமாக் கருணையால்
திருவருள் புரிந்த குமரன்
புறத்தினில் திரிந்திடும் நின்னியற் பாங்கினிற்
பொலிவினைச் சேர்க்கும் நோக்கில்
புரந்தருள் செய்பவன் பேரெழில் சண்முகன்
பூமகள் மருக னாகிச்
சிறந்தருள் சரவணன் தெய்வானை நாயகன்
திருப்பரங் குன்ற மர்ந்து
சீரருள் செய்பவன் தணிகையின் வேந்தனாய்த்
திகழ்ந்திடும் சீல முருகன்
அறம்வளர் காஞ்சியின் கந்தவேள் மகிழவே
அம்புலி ஆட வாவே
ஆயக மண்டலம் தாங்கிடும் குமரனோ(டு)
அம்புலி ஆட வாவே. 64

### வேறு

பிரமனைத் தடிந்து சிறையில் வைத்துப்
பேரருள் புரிந்த குமரன்
பேசரும் பொருளை ஈசனார்க் குரைத்துப்
பெரியனாய் விளங்கும் சதுரன்
சரவணப் பொய்கை சார்ந்தெழில் மலரத்
தவழ்ந்திடும் நேயன் அமரன்

தண்ணருள் புரியும் சண்முகத் தரசன்
சந்ததம் காக்கும் தேவன்
வரந்தரும் வரதன் பதந்தரும் பரமன்
வள்ளிம ணாளன் மணியன்
மகபதிக் கருளும் வித்தகன் நிமலன்
மதிநலம் புரியும் மேலோன்
அறம்வளர் காஞ்சிக் குமரவேள் மகிழ
அம்புலி ஆட வாவே
அரன்விழி மணிகொள் அண்ணலார் மகிழ
அம்புலி ஆட வாவே. 65

**வேறு**

பழமாகி நின்றவன் பரங்குன் றமர்ந்தவன்
பத்தியாய்ப் பாடி நின்று
படியேறித் தணிகையில் மனமலர் சாற்றிடப்
பதமருள் பால முருகன்
கிழமாகிச் சென்றுநற் குறமகள் வள்ளியின்
கிளையுடன் வார்த்தை பேசிக்
கீர்த்தியார் நன்மணம் புரிந்தவன் அமரினிற்
கிளர்ந்தெழில் புரியும் தேவன்
தழலாக நின்றவன் றன்நுதற் றீயினிற்
றழைக்கவே தோற்றம் ஏற்றுத்
தளராத தண்டமிழ் செய்தருள் குருபரன்
சரவணன் நின்னின் மேலோன்
அழகான காஞ்சியின் குமரவேள் மகிழ்வுற
அம்புலி ஆட வாவே
அருளக்க மணியுடை யண்ணலார் மகிழ்வுற
அம்புலி ஆட வாவே. 66

பணியாத பண்டனைப் பாரினில் வீழ்த்திநற்
பாங்கொடும் நன்மை சேர்த்துப்
பற்றாத மாந்தரைப் பக்குவம் ஆக்கிநற்
பரிவுடன் ஈர்த்து மேவும்
பிணிநீக்கி மாறிலா வரமெலாம் தந்தருட்
பேற்றினை நயந்து நல்கி
பிறவாத தன்மையும் மாறாத மெய்ம்மையும்
பெருமைசேர் முத்தி நலமும்



தணியாத அன்புடன் தந்தருள் அம்பிகை
சக்தியின் இனிய குமரன்
தண்ணருள் புரிபவன் நின்னினும் மேலவன்
சந்ததம் வாகை சூடும்
அணியான காஞ்சியின் கந்தவேள் வாழ்த்தவே
அம்புலி ஆட வாவே
அலங்காரச் செம்மைகொள் குமரகோட் டத்தனோ
டம்புலி ஆட வாவே. 67

உண்மையாய் ஒருகணம் எண்ணிடும் போதெலாம்
உடனருள் ஒருவ னாகி
ஓதரும் இருவரை உடையனாய்ச் சீலமார்
மூவரும் ஏத்தி நிற்கத்
தண்மையார் நான்மறை போற்றநல் ஐந்தொழில்
தலைவனாய் ஆறு முகனாய்ச்
சந்ததம் ஏழிசை யாகியெண் குணத்தனாய்ச்
சாலஒன் பதின்மர் காணக்
கண்ணுறும் பத்தருக் கருள்தரும் சண்முகன்
கருத்தொடும் நின்னை ஏற்பன்
காலனைக் காய்ந்தவன் றன்மகன் முனிவுறக்
கருதியேல் மீட்சி யுளதோ
அண்மைசேர் காஞ்சியின் கந்தவேள் மகிழவே
அம்புலி ஆட வாவே
ஆயக மண்டலம் கொண்டருள் குமரனோ
டம்புலி ஆட வாவே. 68

நாவலா ரூரனின் நற்றிருத் தோழனாய்
நலந்தரும் தேவ னாகி
நங்கையாள் நாணநல் ஆடலும் புரிந்துநன்
ஞாலமும் போற்றும் வண்ணம்
மூவரும் காணவெம் முப்புரக் கோட்டையை
முறுவலால் எரித்த பரமன்
ஒண்பொருள் நாடிடத் தண்ணருள் பாங்குடன்
ஒருமொழி பகர்ந்த முருகன்
மாவளம் கொண்டவன் வேலவன் சண்முகன்
வள்ளியை விழைந்த செவ்வேள்

மம்மரைத் தீர்ப்பவன் சினமுறின் நின்றனை
மாநிலம் ஏற்கு மோகாண்
ஆவளர் காஞ்சியின் கந்தவேள் மகிழவே
அம்புலி ஆட வாவே
ஆயக மண்டலம் கொண்டருள் குமரனோ
டம்புலி ஆட வாவே. 69

சீதரன் போற்றிவாழ் செந்திரு மருகனாய்த்
தேர்ந்தநல் வரங்கள் நல்கும்
செஞ்சடை யண்ணலார் சிந்தைகொள் மைந்தனாய்ச்
செந்திலில் மேவி என்றும்
மாதரார் சூழ்ந்திடத் தண்ணருள் புரியுநல்
வள்ளலாய்த் தணிகை தன்னில்
வாகையாய் வீற்றருள் வேலவன் விரும்புநல்
வகையுடன் வருதி இன்றேல்
போதனார் கண்டவெஞ் சிறையுனக் காகுமே
புண்ணுறும் மேனி யாமே
பொற்பிலாச் சூரனின் கதியுனக் காகுமே
புகலுதல் எளிய தாமோ
ஆதமார் காஞ்சியின் குமரவேள் மகிழவே
அம்புலி ஆட வாவே
ஆயக மண்டலம் கொண்டருள் குமரனோ
டம்புலி ஆட வாவே. 70

## 8. சிற்றில் பருவம்

வேறு

முருகா ஈசன் புதல்வோனே
முத்தமிழ்த் தேவா வேலவனே
முகுந்தன் மருகா சரவணனே
முதல்வா வள்ளிக் கினியவனே
அருவாய் யாண்டும் திகழ்பவனே
அணியார் தணிகைக் குமரோனே
அருளார் செயலைப் புரிபவனே
ஆறு படைகொண் டருள்பவனே
மருவும் அடியார் மனத்துறையும்
மதியே செந்திற் பதியோனே



மயக்கும் வினைதீர்த் தருள்பவனே
மயிலத் துறையும் அழகோனே
கருவார் காஞ்சிப் பதியினில்வாழ்
கந்தா சிற்றில் சிதையேலே
கனிவார் காஞ்சிப் பதியினில்வாழ்
கனியே சிற்றில் சிதையேலே. 71

பாவைக் குறமா மகள்நாடிப்
பாங்காய்த் தேனும் தினைமாவும்
பரிவாய் அருந்தி மகிழ்பவனே
பரவும் தருவாய் நிற்பவனே
மாவார் கானில் திரிபவனே
மயில்மீ தமரும் மாண்பினனே
வடலூர் வள்ளற் பெருமான்றன்
வண்மைத் தமிழில் நிற்பவனே
தேவர் போற்றும் குருபரனே
திருவார் தணிகைத் தனிப்பரனே
சேரும் வினையைக் களைபவனே
சேவற்கொடியின் நாயகனே
பூவார் காஞ்சிப் பதியினில்வாழ்
புனிதா சிற்றில் சிதையேலே
பொன்னார் படைப்புத் தொழில்மேவும்
பொருளே சிற்றில் சிதையேலே. 72

அறத்தின் நிலையாய் நிற்பவனே
அனுதினம் காக்கும் அரன்மகனே
அருளார் பாம்பன் பெருந்தகையின்
அருந்தமிழ்ப் பண்ணில் ஒளிர்பவனே
திறஞ்சேர் சூரன் மாய்ந்திடவே
சேவலும் மயிலாய்ச் செய்தவனே
திகழும் வள்ளிக் குகந்தவனே
திருவார் திருமால் மருகோனே
பிறவா நிலையைத் தருபவனே
பிஞ்ஞகன் போற்றும் சரவணனே
பிணிசேர் வினையைக் களைபவனே
பேறுக ளெல்லாம் அருள்பவனே
உறவார் காஞ்சிப் பதியினில்வாழ்
உருவே சிற்றில் சிதையேலே

ஒளியார் படைப்புத் தொழில்மேவும்
ஒருவா சிற்றில் சிதையேலே. 73

கார்த்திகை மாதர் போற்றிடவே
கனிவாய் அருளும் குமரோனே
காமனைக் காயும் பரமனுக்கே
கருதும் மறையைப் பகர்ந்தவனே
ஆர்த்தெழு சூரன் மாய்ந்திடவே
அணிவேல் எறியும் சண்முகனே
அழகார் வள்ளிக் குறமகளின்
அன்பினில் திகழும் முருகோனே
சார்ந்திடும் அடியார்க் கருள்பவனே
சாம்பவி போற்றும் சிவகுகனே
சத்தினி பாதம் அருள்பவனே
சந்ததம் காக்கும் வேலவனே
சீர்வளர் காஞ்சிப் பதியினில்வாழ்
திருவே சிற்றில் சிதையேலே
திகழும் படைப்புத் தொழில்மேவும்
தேவா சிற்றில் சிதையேலே. 74

அங்கியும் மானும் மழுவுடனே
அரவும் மதியும் உடுக்கையுடன்
அருளார் மாதோர் பங்கினனாம்
அரனார் நுதலில் திகழ்பவனே
செங்கையில் ஆழிப் படைகொள்ளும்
சீலத் திருமால் மருகோனே
சினவெஞ் சூரன் மாய்ந்திடவே
செருவேல் எறியும் சண்முகனே
திங்களும் கதிரும் முதலாகச்
சேரும் கோளால் உறுபிணியைச்
செறுத்துக் காக்கும் முருகோனே
திகழும் உமையின் புதல்வோனே
மங்கலக் காஞ்சிப் பதியினில்வாழ்
மணியே சிற்றில் சிதையேலே
மகிழும் படைப்புத் தொழில்மேவும்
மறவா சிற்றில் சிதையேலே. 75

அகரப் பொருளாய் விளங்கியொளிர்
அமுதே ஆறு முகத்தரசே



அகிலம் புரக்கும் தனிப்பொருளாய்
அருளும் சோதி நடத்தரசே
இகரப் பொருளாய் இனிதோங்கி
எல்லா நிலைக்கும் கருப்பொருளாய்
இனிமை வழங்கும் இகத்தரசே
இடரைத் தீர்க்கும் மணியரசே
உகரப் பொருளாய் எஞ்ஞான்றும்
ஒளிரும் தெய்வப் பதிக்கரசே
உகப்பாய்ச் சேவற் கொடியுடனே
உயர்ந்த மயில்மீ தமர்ந்தருளும்
சிகரக் காஞ்சிப் பதியினில்வாழ்
திருவே சிற்றில் சிதையேலே
சிந்தைக் குகந்த குகனேயென்
செல்வா சிற்றில் சிதையேலே. 76

**வேறு**

மயலே விளங்கித் துயரால் ஒடுங்கி
மதிமேவு நெஞ்சம் தடுமாறிச்
செயலே மயங்கி வினையால் நலிந்து
சிவநிந்தை காணும் செயலாலே
அயலே நினைத்தும் அணுவாய் நினைக்கும்
அடியாரைக் காக்கும் முருகோனே
மயிலே றிவந்து திருத்தாள் சிவக்க
வயமான சிற்றில் சிதையேலே. 77

நினையா மனத்திற் பதியா திருந்து
நினைவோரின் நெஞ்சின் அமுதாகி
வினையாவு நீக்கித் துணையாகி நின்று
விரைவாக நல்ல செயலோங்கக்
கனையாற் செழிக்கும் பதிக்காஞ்சி யிற்கண்
கனிந்தோங்கி மேவும் முருகோனே
உனையே நினைக்கும் பனையேன் உகக்கும்
ஒளியான சிற்றில் சிதையேலே. 78

**வேறு**

சிவனார் நெற்றிக் கண்ணொளியாய்ச்
சேவற் கொடியின் அதிபதியாய்ச்

சிந்தைக் குகந்த மஞ்ஞையினில்
சேவை யருளும் ஒருசுடராய்ப்
புவனம் யாவும் வலம்கொண்டு
புரக்கும் பழனிப் பெருநிதியாய்ப்
புகலும் கீரற் கருள்புரியும்
புகழூற் றோங்கும் பண்டிதனாய்
நுவலும் மொழியின் நுண்பொருளாய்
நூபு ரத்தின் நல்லொலியாய்
நுகரும் எல்லாப் பொருள்களிலும்
நுண்மைப் பொருளாய் ஒளிர்பவனே
தவமார் காஞ்சிக் குமரோனே
தலைவா சிற்றில் சிதையேலே
தனியார் காஞ்சிப் பதிமேவும்
தலைவா சிற்றில் சிதையேலே. 79

மித்தை யகற்றும் மணிவிளக்கே
மேதினி காக்கும் ஒளிவிளக்கே
மேவும் மனத்திற் பதிவிளக்கே
மேலாம் கருணைக் கணிவிளக்கே
சித்தத் தொளிரும் சுடர்விளக்கே
செழுஞ்சுட ராகும் தனிவிளக்கே
சிவனார் நுதலின் அருள்விளக்கே
செந்திற் பதியின் நனிவிளக்கே
பத்தர்க் கருளும் மனவிளக்கே
படியார் சோதி நல்விளக்கே
பணிவார்க் கருளும் குலவிளக்கே
பழைமைக் குயிராம் பொன்விளக்கே
முத்தார் விளக்காய் முன்னியருள்
முருகா சிற்றில் சிதையேலே
மூலச் சுடராய் விளங்கியருள்
முதல்வா சிற்றில் சிதையேலே. 80

## 9. சிறுபறைப் பருவம்

### வேறு

மருவையின் சத்தியாய் மாரியாய்க் காளியாய்
மலையனூர் நீலி யாகி



வாராகி கௌரியாய்த் துர்க்கையாய்க் கங்கையாய்
வரந்தரும் காமாட் சியாகிக்
கருமுகில் தேவியாய்க் கன்னியா குமரியாய்க்
காசிவி சாலாட் சியாகிக்
கண்ணனின் தங்கையாய்க் காத்திடும் வாமியாய்க்
கனிந்தருள் அபிரா மியாகி
அருள்புரி ஆதியாய் ஆகமப் பொருளதாய்
அருமறை போற்று கின்ற
அரியதாய்க் கற்பகத் தன்னையாய் விளங்குநல்
ஆரணி பெற்ற முருகா
திருவளர் காஞ்சியின் குமரகோட் டத்தனே
சிறுபறை முழக்கி யருளே
திகழுநன் மணியுடன் கமண்டலம் கொண்டவா
சிறுபறை முழக்கி யருளே. 81

வெம்மைகொள் வினையுடன் முன்வினை யாவையும்
இனிமையாய் ஆக்கி நின்சீர்
இதமுடன் ஏத்துநல் லடியவர் தமக்கெலாம்
இன்மலர்ப் பாதம் நல்கி
வெம்மையைக் காய்ந்திடர் நீக்கிநல் வாழ்வருள்
வேலனே அம்பிகேயா
வேதனும் நாரணன் மறையொடுந் தேடவான்
மேன்மையாய்த் திகழ்ந்து யாண்டும்
அம்மையாய் அப்பனாய்த் திகழ்ந்தருள் ஈசனின்
அன்பினில் விளைந்த குமரா
அரியநல் வேடனாய் வேங்கையாய் விருத்தனாய்
அருவுரு வாகும் முருகா
செம்மைகொள் காஞ்சியின் குமரகோட் டத்தனே
சிறுபறை முழக்கி யருளே
திகழுநன் மணியுடன் கமண்டலம் கொண்டவா
சிறுபறை முழக்கி யருளே. 82

### வேறு

முந்தையாய் முதலாய் முற்றுறும் வினையை
முற்றறுத் தாளும் வகையில்
முழுமுதற் பொருளாய் நிலவிடும் எந்தை
முருகனே குமார வேளே

நந்துறும் கோளால் நேரிடும் புன்மை
நலிவுறும் பிணிகள் மற்றும்
நன்மனம் காணும் அச்சமும் மயலும்
நாடவொண் ணாது புரிவாய்
பந்தமாம் இடரிற் படுதுயர் தம்மைப்
பரிவொடு நீக்கி நின்று
பதந்தனைக் காட்டி நல்லருள் புரியும்
பாலசுப்ர மணிய னேயென்
சிந்தையார் காஞ்சிக் குமரகோட் டத்தா
சிறுபறை முழக்கி யருளே
திகழுநன் மணியும் கமண்டலம் கொண்டாய்
சிறுபறை முழக்கி யருளே. 83

நெய்யுடன் பாலும் தேனுடன் கன்னல்
நெத்துறு தெங்கும் சேர்த்து
நிரவுநற் சூட்டின் நிலையொடும் வாழை
நீலமாங் கனியின் சாறும்
துய்யவே சேரும் சுவையினும் மிக்கத்
தோன்றுநற் சுவையின் நல்கும்
தூயனே நேய தூமறை வாச
சோதியாய்த் துலங்குங் குகனே
மெய்யுறை தேவ வள்ளியின் காந்த
விமலனே மஞ்ஞை யேறி
விண்ணெலாம் வலங்கொள் அமரனே முருகா
வெற்பினில் ஓங்கும் அழகா
தெய்வமா காஞ்சிக் குமரகோட் டத்தா
சிறுபறை முழக்கி யருளே
திகழுநன் மணியும் கமண்டலம் கொண்டாய்
சிறுபறை முழக்கி யருளே. 84

சூலமும் பிறையும் மான்மழு கங்கை
சூழவீற் றிருந்து யாண்டும்
சோதியாய்த் தோன்றி ஆதியாம் நங்கை
அன்புடன் வரிக்க மேனாள்
ஆலகா லத்தை அருந்திமுப் புரத்தை
அழலுறுங் காட்சி தந்தும்
அலகிலா வரங்கள் சூரனுக் களிக்கும்
அண்ணலாம் ஈசன் நுதற்கண்



ஞாலமே ஓங்கத் தோ றுநற் குகனே
நாடுநல் தணிகை யானே
நாடொறும் போற்றும் பாவலர் நெஞ்சில்
நடமிடும் ஞான முருகா
சீலமார் காஞ்சிக் குமரகோட் டத்தா
சிறுபறை முழக்கி யருளே
செம்மைநன் மணியும் கமண்டலம் கொண்டாய்
சிறுபறை முழக்கி யருளே. 85

பழமையார் பதியிற் பாங்கொடும் மேவி
பழமையிற் புதுமை சேர்க்கும்
பரிவினால் காதல் கிழவனாய் ஏகிப்
பத்தியார் வள்ளி தன்னை
உழுவலாய் மணங்கொண் டுலகினைக் காக்கும்
ஒருதனி முதல்வ னாகி
ஓமெனும் மொழியின் விளக்கமாய் ஓங்கும்
ஒருவனே கந்த வேளே
தழுவுநல் பத்தர்க் கருள்தரும் பதியாய்த்
தரணியிற் குன்ற மர்ந்த
தணிகைநன் னிதியே பழனியம் பதியே
தரியலர்க் கரிய கோவே
செழுமையார் காஞ்சிக் குமரனே நாதச்
சிறுபறை முழக்கி யருளே
சிற்குணத் தொளிரும் சீலனே வேதச்
சிறுபறை முழக்கி யருளே. 86

உருவெலாம் கடந்த ஒருவனும் ஆகி
உருவினுள் அருவும் ஆகி
உண்மையும் உண்மைப் பொருளெனும் ஆகி
உண்மையின் ஒளியும் ஆகிக்
கருவினுட் பொதியும் கருப்பொருள் ஆகிக்
கருத்தினுட் கருத்தும் ஆகிக்
கனிவுறும் பொருளிற் கனிந்தருட் கனியாய்க்
காத்தருள் பரமும் ஆகிப்
பெருவெளித் திரளாய்ப் பேரொளிப் பிழம்பாய்ப்
பெருந்தவப் பொழிலும் ஆகிப்
பேதபே தமுமாய்ப் பேரெழில் தருவாய்
பெருகுநல் லாறு முகனே

திருவளர் காஞ்சிக் குமரனே ஞானச்
சிறுபறை முழக்கி யருளே
சிற்குணத் தொளிரும் சேந்தனே நாதச்
சிறுபறை முழக்கி யருளே. 87

இம்மையின் பயனாய் ஏற்றநற் றுணையாய்
இகநலம் புரியும் பரமாய்
ஏந்திழை இருவர் சேர்ந்திடும் நடுவாய்
இனியசெவ் வேளெனும் ஆகி
மும்மையின் பயனாய் மன்னுமெய்ப் பொருளாய்
முந்துறும் வினையைத் தீர்க்கும்
மூலமாய் அருளும் வேலனாய்க் குகனாய்
முத்துவேல் ஏந்திக் காத்து
மம்மரைத் தீர்க்கும் மணியனாய் வேத
வண்ணனாய் ஞான ஒளியாய்
வரந்தரும் ஆறு படைகொளும் பதியே
வாசவன் மருக னேநல்
செம்மையார் காஞ்சிக் குமரனே நாதச்
சிறுபறை முழக்கி யருளே
சிந்தையார் வாஞ்சைச் சேந்தனே சீலச்
சிறுபறை முழக்கி யருளே. 88

நாவலார் செயலில் நனிமகிழ் வுறவே
நாவலா ரூரர் தம்பால்
நவமுறும் தோழன் ஆகிநற் பரவை
நாச்சியார் அகத்தை நாடி
மூவெயிற் பொடிக்கும் முறுவலைச் சொரிந்த
மூலமாய்த் திகழும் வாயால்
முத்தெனும் உரையைப் பாரினிற் பகர்ந்த
முழுமுதற் பரமன் யீன்ற
சேவலங் கொடிகொண் டோங்குசண் முகனே
சிந்தையார் பால் முருகா
சீற்றமோர் நிருதர் செருக்கினைத் தகர்க்கும்
சேந்தனே சுப்ர மண்யா
தேவமாக் காஞ்சிக் குமரனே மேவும்
சிறுபறை முழக்கி யருளே
திண்மைகொண் டாளும் இருவினை நீங்கச்
சிறுபறை முழக்கி யருளே. 89



தந்தையும் தாயும் தனிப்பெரும் பொருளாய்த்
தரணியும் அறியும் நிலையில்
தகவுடன் பணிந்து செழுங்கனி யடைந்து
தடையெலாம் நீக்கும் மருந்தாய்
விந்தையார் பாலச் சந்திரன் என்றே
வேண்டுவார்க் கருளும் வள்ளல்
வேதக ணேசர்க் கியைந்தசோ தரனே
வேலனே பால குகனே
கந்தனே கார்த்தி கேயனே வள்ளிக்
காந்தனே அமரர் கோனே
கடம்பனே பழனிக் குமரனே வெற்பிற்
கனிந்தருள் ஆறு முகனே
சிந்தையார் காஞ்சி முருகனே நேயச்
சிறுபறை முழக்கி யருளே
தெறித்திடும் வினையைத் துரத்திடும் நாதச்
சிறுபறை முழக்கி யருளே. 90

## 10. சிறுதேர்ப் பருவம்

மாதவம் புரிந்து நாதனை மணந்து
வளமார் அறங்கள் செய்து
மாணருள் சொரிந்து மாநிலம் புரந்து
வடிவார் நடம்ப யின்று
மாதவன் தங்கை யாயநன் நங்கை
மலையான் மகிழ்ந்து பெற்ற
வாசமார் அன்னை நேசமாய் ஈன்ற
வடிவேற் குமார வேளே
நாதமார் காஞ்சிச் செல்வனாய் ஒளிர்ந்து
நலமாய்ச் செழிக்கும் முருகா
ஞானமார் வள்ளி மங்கையும் தெய்வ
நங்கையும் மலர்ந்தி ருக்கத்
தீதகன் றேகிச் செவ்வருள் நாடும்
சிறுதேர் செலுத்தி யருளே
தெவ்வரும் காயத் தொல்வினை ஓயச்
சிறுதேர் செலுத்தி யருளே. 91

வேலனே வெற்பின் நேயனே மாந்தர்
மிடியைத் தகர்க்குங் குகனே

மீனவன் மகனே வேடனே கடையூர்
விமலைக் குகந்த சுதனே
மாலயன் போற்றும் வேந்தனே தெய்வ
மயில்மீ தமரும் பரனே
மாநலம் நல்கும் மன்னனே மன்னும்
வடிவேற் கரத்த னேவெங்
காலனைக் காயும் கந்தமா மணியே
கச்சிக் குமார வேளே
கார்த்திகை மாதர் போற்றுநன் மழலைக்
கனியிற் கலந்த தேனே
சீலரைக் காக்கும் செம்மலே தேற்றும்
சிறுதேர் செலுத்தி யருளே
தீவினை வாடிச் சீரெழில் நாடச்
சிறுதேர் செலுத்தி யருளே. 92

முத்தனே மேவும் மூலநான் மறையின்
முதலாய் விளங்குங் குகனே
முருகனே போற்றும் வானவர்க் கருளும்
மொழியார் பதத்த னேசெம்
பித்தனின் மகனே பேணுமால் மருகா
பிரமன் புகழ்ந்து போற்றும்
பெரியனே வள்ளிக் காந்தனே சீரார்
பெருஞ்சொல் பகர்ந்த கோனே
நித்தனே காஞ்சி நாதனே நேய
நிதியார் படைப்பு முதலாய்
நேயநன் மணிகொண் டொண்முதற் றொழிலில்
நிதமும் சிறக்கும் நலனே
சித்தமே மலரச் செழுமையே பெருகச்
சிறுதேர் செலுத்தி யருளே
செய்யவள் நாடச் சுற்றமும் வாழச்
சிறுதேர் செலுத்தி யருளே. 93

ஈசனை வணங்கிப் பூசனை புரிந்தின்
இணையாய் நிலைத்து வானோர்
ஏத்திடத் திகழ்ந்தித் தரணியும் விளங்க
எழில்வேற் கரத்த னாகிக்
காசிபன் விளைக்கும் வேள்வியைப் புரக்கும்
கருத்துற் றிளைய வேலூர்



காணரும் சிறப்பின் மேவிநல் லருளைக்
கனிவாய்ச் சொரிந்து காக்கும்
வாசமார் காஞ்சி முருகனே யக்க
மணிகொள் முதல்வ னேயென்
மாசெலாம் தீர்க்கும் மணியனே முத்தி
வழங்கும் தனித்த பொருளே
தேசமார் சுடர்கொண் டியாவையும் புரிவோய்
சிறுதேர் செலுத்தி யருளே
சீலமேர் ஆறு படைகொளும் குமரா
சிறுதேர் செலுத்தி யருளே. 94

**வேறு**

பாயவந் தேபொரும் மானொடு வேங்கையும்
பணியும் திறத்தில் நோக்கிப்
பைரவன் பார்த்திபன் பாவலன் என்றருட்
பரிவாற் சிறந்து மேவி
மாயவன் வேண்டுநல் லாழியும் தந்துசெவ்
வருளே வடிவ மாகி
மாதொடு விளங்குநற் பரமனின் மைந்தனே
மணிவேற் கரத்த னேநல்
தூயமாக் காஞ்சியின் குமரகோட் டத்தனே
சுருதிப் பொருட்கும் முதலே
சோதியார் சேவலும் மஞ்ஞையும் தேர்ந்துவெந்
துயரைத் தீர்க்கும் முருகா
தீயரை மாற்றவும் சீலரைக் காக்கவும்
சிறுதேர் செலுத்தி யருளே
தீமைகள் சாயவும் தேவைகள் நாடவும்
சிறுதேர் செலுத்தி யருளே. 95

வாமனன் தங்கையாய்ப் பர்வதன் நங்கையாய்
ஏராகி நீலி யாகி
மாரியாய்க் காளியாய்க் கங்கையாய்த் துர்க்கையாய்
வாணிகா மாட்சி யாகிப்
பூவளர் அங்கமாய்க் கற்பகத் தன்னையாய்ப்
புகலுமீ னாட்சி யாகிப்
பொன்னியாய் வன்னியாய்க் கன்னியாய்க் காத்தருள்
பூவைக் குகந்த குமரா

நாமமார் காஞ்சியின் கந்தனே வேலனே
நலமே வளர்க்கும் குகனே
நாதனே வேதனே ஞானமார் பாதனே
நவிலும் மறைக்கு முதலே
தேமணம் சூழவும் செவ்வருள் நாடவும்
சிறுதேர் செலுத்தி யருளே
சீர்மலிந் தோங்கவும் செம்மனம் வாழவும்
சிறுதேர் செலுத்தி யருளே. 96

பாரோங்கி வாழுநற் பான்மையால் விளங்குசீர்
பாண்டிப் பிரானென் றாகிப்
பத்தியாய்ப் போற்றுநற் றொண்டர்தம் நெஞ்சிலே
பஞ்சாட் சரமும் ஆகி
ஏரோங்குந் தில்லையும் திருமுது குன்றமும்
எழிலார் கயிலை மலையும்
இனிதோங்கி வீற்றிருந் தாட்கொளும் ஈசனின்
இடப்பா கத்தில் ஓங்கிக்
காரோங்கு காஞ்சியும் ஆலவாய் நெல்லையும்
காசியாம் செம்மைப் பதியும்
கனிந்தோங்கச் செய்தருள் அம்பிகை நன்மனக்
கருத்திற் கிசைந்த முருகா
சீரோங்கு காஞ்சியின் தனிப்பெருந் தேவனே
சிறுதேர் செலுத்தி யருளே
செம்மைகொள் சேந்தனே வேலனே கந்தனே
சிறுதேர் செலுத்தி யருளே. 97

**வேறு**

ஞாலமேர் அறங்கள் நாளெலாம் புரியும்
நலமிகுந் தொளிரும் மாண்பும்
நாநிலம் புரக்கும் நற்றிருப் பணியும்
நலமாய் மொழியும் சீரும்
பாலறா வாயன் பைந்தமிழ் இசைக்கும்
பண்பால் ஒளிரும் நிலையும்
பயன்தரும் சொல்லைப் புகன்றிடும் கலையும்
பரிவால் திகழும் மனமும்
சாலநல் வளமும் சார்ந்தநற் பொருளும்
தருமம் தழைக்கும் வாழ்வும்



சந்ததம் நின்னைப் போற்றுநற் பதமும்
தரமாய்த் தழைத்து மேவச்
சீலமார் காஞ்சிக் குமரனே கோலச்
சிறுதேர் செலுத்தி யருளே
செவ்வருள் புரியும் சேந்தனே மன்னும்
சிறுதேர் செலுத்தி யருளே. 98

**வேறு**

இரும்புமனத் தடியேனின் இகல்கொள்ளும் ஒருநிலையை
இயல்பாய்ப் பகர்வ தென்றால்
இமயத்தின் பெரிதான தோற்றத்தின் பொருளாகி
எதிர்கொண் டலைக்கும் அந்தோ
கரும்புமனப் பரம்பொருளே நின்னடியைப் போற்றுஞ்சீர்க்
கருத்திற் செழிக்கும் அன்பர்
காண்கின்ற நலங்காணப் புவிகளிக்கும் மனமினிக்கும்
கருவில் திருவும் சேர்க்கும்
விரும்புமனத் தடிசிலென உனைக்காணும் உத்தமரின்
மிடிதீர்த் தருளும் முருகா
விழைகின்ற நெஞ்சமதில் தழைக்கின்ற செழுஞ்சுடரே
விரைவாய் அருள் செவ்வேளே
செருமனத்தின் செலவொழித்துச் சிவஞானம் செழித்தோங்கச்
சிறுதேர் செலுத்தி யருளே
திருவோங்கும் காஞ்சியினில் சிறந்தோங்கும் திருக்குமரா
சிறுதேர் செலுத்தி யருளே. 99

**வேறு**

பாதச் சிலம்பின் நாதத் தொளிரும்
பரிவாற் கருணை புரிந்தோங்கும்
பான்மைக் குவந்து பாரில் தவழ்ந்து
பரணில் திளைக்கும் தவமானைக்
காதற் சிறக்கும் போதத் துயிர்க்கும்
கலையார் வேடன் வடிவாகிக்
காணக் களிக்கும் மாணத் தளிர்க்கும்
கருத்தால் மணங்கொள் முருகோனே
வேதந் தழைக்கும் அயனார் பிழைக்க
மிகவாய்ப் படைக்கும் திறலோடு

மேகம் செழிக்கும் போகம் வளர்க்கும்
விழைவார் காஞ்சிப் பதிமேவி
சேதம் தகர்க்கும் குமரா புவிக்கண்
சிறுதேர் செலுத்தி யருளாயே
சேவைக் களிக்கும் குகனே விளக்கும்
சிறுதேர் செலுத்தி யருளாயே 100

**காஞ்சிபுரம் திருக்குமரகோட்ட முருகன் பிள்ளைத்தமிழ் முற்றிற்று**



உ

# காவை முருகன் பிள்ளைத்தமிழ்

## கலைவாணன்

### விநாயகன்

1

பழனமலி காவிரிப் பைங்கரையில் ஒருபெரும்
பண்ணைவைத்து, ஆன்ற தருமப்
பைங்கூழ் வளர்க்கஉட் பொங்கிவரும் ஆவலாற்
பழையஎரு தோடொர் கிழவன்
உழவருகை யில்,விதைக்கு ஓர்நாழி நெல்அளந்து
ஊக்கமுடன் ஆக்கம் ஊட்டும்
உள்ளத்தொடு உதவவே மெள்ளத் தொடர்ந்துவரும்
ஒருபெருங் கரிய வண்ணக்
கிழவிதன் கோயிலிற் கீழ்த்திசையின் வாயலிற்,
கேட்பார் இலாதிருக்கும்
கிம்புரிக் கன்றின்இரு பங்கயத் தாள்கள்என்
வெம்பும்நெஞ் சத்துஅலர்கவே—
குழவியுரு வாய்வந்த குருமூர்த்தி யாம்எனது
குமரதண் டாயுதன், உளக்
கோவிலில் இருந்துவிளை யாடும்அத னைச்சொலிக்
கும்மாளி போடுதற்கே!

### முருகன்

2

பேயாய் வலிந்தெம்மை ஓயாது உசுப்பிடப்
பித்தாகி விட்ட நெஞ்சம்
பிடர்பிடித்து உந்தலால், இடர்வழியி லேஆசை
தொடர, ஓர் நாதி யற்ற

நாயாய்த் திரிந்துபன் னாட்களும் கழியவே
நைந்துடல் தொய்ந்த நேரம்,
நமனாரும் ஆசையொடு தமது ஏவ லாளர்எனை
நண்ணிக் கவர்ந்து கொள்ள

நோயுருவி லேவந்து வாயிலரு கேசமயம்
நோக்கிநிற் கப்பணிக்க,
நொந்தழியும் இந்தநாள், வந்துனது புகழ்பாடும்
நோக்கமுற் றேன், அருளுவாய்!

தாயாக உலகெலாம் தாங்கும்அகி லம்மையருள்
தண்தமிழர் தம்தெய்வமே!
தண்ணார் செழுங்கழனி வெண்ணாவ லீசர்தரு
தண்டபா ணிக்கடவுளே!

## பரமசிவம்

### 3

எப்பா லதற்கும் அப்பாலாய்
எல்லா உயிர்க்கும் உள்ளுயிராய்,
இயங்கும் ஆற்றற்கு எழுகளமாய்,
என்னுள் இதயப் பரவெளியில் —

தப்பா இசையில்—தனித்துவலத்
தாளை ஊன்றிக் கூத்தாடும்
தன்னே ரறியாத் தனித்தலைவா!
தமிழாம் பழைய தனம் தரும்என்

அப்பா! உனைஇங் கழைக்கின்றேன்.
ஆசை இழுக்க, எங்கள்திரு
ஆனைக் காவின் சேயோனை
அடியேன் பிள்ளைக் கவிபாட

ஒப்பாது அறிஞர் உலகம்எனும்
உண்மை அறிவேன். ஆகையினால்,
உதவற்கு உன்றன் அபயகரம்
உடனே நீட்டி அருளுகவே!



## அம்மை

### 4

நீயே கருணை நிறைந்துஎனையும்
நினைந்து கொடுத்த பனுவல்இது;
நின்னிற் கிளைத்த நெடியோனில்
நீண்ட தமிழின் படையல்இது;

நாயேன் கொடுப்ப தாயிடினும்,
நாற்றச் சேற்றின் மிசை அலரும்
நளின மலர்அர்ச் சனைஎல்லாம்
நாளும் புனைந்து நலம் அருளும்

தாயே!—நின்றன் அடிமலர்ஈ
தினையும் தாங்கி, என்உளத்தே
தண்டா யுதனாய்த் தனித்திருக்கும்
தன்னே ரறியா இன்னழகுச்

சேயான் தனது சீர்புகலச்,
சித்தத் தெளிவைத் தந்தருள்வாய்!
சிற்றம் பலத்தான் இடப்புறத்தே
செழித்துக் கிடக்கும் செழுங்கொடியே!

## சண்டேசர்

### 5

உற்ற இரும்பைப் பொன் ஆக்கி
உலகை மயக்கும் சித்தரெலாம்
உள்ளம் துடிக்க, மெய்சிலிர்த்தே
உவகைக் கடலில் ஆழ்ந்திட,ஓர்
குற்றம் அதனைக் குணம் ஆக்கிக்,
கூத்தன் அடியார்.குழாத்தலைமை
கொண்டான் சண்டே சுவரன்' எனக்
கும்பிட் டிருக்கும் பெருந்தலைவா!
மற்றை யுலக மானுடத்து
மதலை யரைப்போல் மாயாத
மாண்போடு, அழகுச் சேயோனாய்
மருதக் காவை மாநகரத்து

உற்றே இருந்த பெருந்தமிழன்
உயிரோ வியத்தைப், பாவில்வடித்து
உதவத், தனக்கோர் துணைக்குஅலையும்
உன் ஆள் எனக்கும் இரங்காயே!

## 1. காப்புப் பருவம்

### காரைக்கால் அம்மை

6

தம்முட் கனிந்த தாபம்மிகத்,
தமக்கென்று ஒருதாய் இல்லாத
தன்னந் தனிய ராயபெருந்
தலைவர், திருவாய் மலர்விரிய
'அம்மே!' என அன்று அழைத்திடவே,
அலகை யுருவோடு அவர் அடியை
ஆடிப் பாடி அடைந்தணையும்
ஆலங் காட்டுத் தமிழ்த்தாயே!
எம்மை யுடையான்; எழிலுடையான்;
இளமை கொழிக்கும் வளமுடையான்;
எளியார்க்கு இரங்கும் அருளுடையான்;
இனிய காவைப் பதியுடையான்;
மும்மைப் புவனம் முழுதாளும்
முதல்விக்கு இனிய புதல்வன் எனும்
முருகச் சேயை, அவன் குடும்ப
மூதாட் டியள்நீ முன்காக்க!

### நாவரசர்

7

வெப்புமனப்பசியொடு அருள் வீட்டைத் தேடி
விரைகையிலே, பிறப்பிலிதன் விரலாற் சுட்டி
அப்பர்' எனக் கூவிட; முன் ஆண்மை யோடே
அறச்சமரிட்டு, அரசனும்தோற்று அடியான் ஆக,
மெய்ப்பொடுமுன் னாள்'இவன்ஓர் மேதை'என்று
மேதினியே போற்றியநா வரசன் காக்க—
கப்புமழைக் கருமுகில்கள் கைகோத்து ஆடும்
காட்டேரிக் கூட்டம்போல் கவிந்து சுற்றி,



எப்புறமும் எதிரொலிக்க இடித்து மின்னி,
இன்னெழில்வெண் முத்திறைக்கும் இயல்பைக் காணப்
புப்புதுப்பல் கோடிமலர் குறிஞ்சி பூக்கும்
பொருப்பினைவிட்டு, இந்நாவற் பொழிலுள் தங்கும்
இப்பெரிய சிறுமகவை; இமயப் பாவை
எடுத்தளித்த வேல்சுழற்றி எதிர்த்தோர் எல்லாம்
குப்புறவீழ்ந் திடத்தளிர்க்கை கொட்டி ஆடிக்
கும்மாளம் போடுகின்ற குமாரத் தேவை!

### மெய்கண்டார்

8

ஆதி முதற்கல் லால்அடியில்
அமர்ந்து,ஓர் நால்வர்க்கு அறமுறையை
அறியப் புகன்ற சிவகுருவும்
ஆசா ரியன்என்று ஏத்திட,முன்
போதித் திருந்த சிவஞான
போதக் குருவைப்; புலவர்குலம்
போற்றிச் சொரியும் கவிமலர்கள்
பூண்ட குருவைப் புரந்தருளப்—
பேதித்து எழுந்த பேதைமையால்
பெரும்போர் புரிந்து, பின்நகரும்
பித்தர் பலர்சொல் தத்துவநூற்
பின்ன லிடைப்பட்டு உழல்மனிதச்
சாதி உயரச், சன்மார்க்க
சைவம் அளித்த மெய்கண்ட
சந்தா னத்து முதற்குரவன்
சன்னிதி புகுந்து வேண்டுவனே.

### சிவஞான முனிவர்

9

பூபாலர் போற்றுபல பூர்வாசி ரியர்வழிப்
புனிதமுறும் ஒருமொழியதைப்
போன்றதெளி வுரைஎதும் தோன்றாமை யால், மனப்
புண்ணோடு நின்றிருந்த
காபாலி ஈன்ற ஒரு மாபாடை யாம்தமிழ்க்
காசினியி லேநிமிர்ந்து,

கண்ணிய முறப்பண்டு வெண்ணெய்நல்லூரின்மெய்
கண்டார் அளித்த நூற்கு
மாபாடி யம்தந்த மாதவச் சிவஞான
மாமுனிவர் வந்து காக்க—
மயிலேறி, வண்பொன்னி பயில்கின்ற வெண்ணாவல்
மாமரத் தடியை நாடி,
சீபாத மீதொளிர்மெய்ஞ் ஞானச் சிலம்பின்ஒலி
சித்தாந்த சைவம் ஓதும்
சிறுவனாய் உருமாறி ஒப்பற்று நிற்கின்ற
சிவபால குருபரனையே!

### வள்ளலார்

### 10

முதிய சழக்குஅத் தனையையும்மண்
மூடிமறைக்க, மொய்த்தபழ
முறையின் குறைகள் முடிந்தொழிய,
மூப்பற் றிருக்கும் மோகத்துப்
புதிய முறுவல் பூத்தலரும்
பொற்பில், தமிழைப் புதுக்கிஅருள்
புரியும் வடலூர்ப் புண்ணியனார்
போதம் துணையாய்ப் புரந்தருள்க—
நதியி னிடைப்பட்டு உயர்ந்தஒரு
நாவற் காட்டில், நாதியிலா
நங்கை யவள்தன் செங்கரத்தில்
நளின மலர்போல் தாங்கும்அருள்
நிதிய மதனைப், பழஅடியார்
நெஞ்சக் களத்தில் நிலையாக
நித்தம் குதித்து விளையாடும்
நெடிய தமிழ்க்குஓர் தலைவனையே!

## 2. செங்கீரைப் பருவம்

### 11

அன்னையின் மார்பின தாரமு திற்பசி
யாறி, அவள்மடிவிட்டு,
அள்ளுடன் எஞ்சிய பால்—அழ காய்எழுந்
தாடி வரும்பொழுதில்—



புன்னகை சிந்திய மெல்லிய செவ்இதழ்
பூத்து வழிந்தொழுகப்,
பொங்கிய சுந்தரத்து எங்கள் தமிழ்க்குலப்
புண்ணியம் முற்றிலும்ஓர்
இன்னிளஞ் சேயுரு எய்திஇக் கோயிலின்
சன்னிதி யில்உளதோ!'
என்றுஉல கேபிர மித்துஒரு கற்சிலை
என்னமுன் நின்றிடவே,
மின்ஒளி வேலொடு மன்னிய சண்முக!
மென்மெலச் சாய்ந்தாடு!
மெய்ப்புடை எங்களின் அப்ப னருள்குக!
மென்மெலச் சாய்ந்தாடு!

### 12

பந்த விலங்கற என்னுடை இந்தியப்
பண்டைய தொண்டர்குழாம்
பற்றும் வலக்கரம் உற்றஓர் கோலினிற்,
பார்முழு தும்பரவ
வந்து தவழ்ந்திடு தென்றல் அசைப்பினில்,
வானுற ஓங்கிஒளிர்
வண்ண மதில்தன தெண்ணம் விளங்கிட,
வல்லமை காட்டிடவே
அந்தர மீதினில் ஆடி யசைந்திடும்
ஆன்ற கதர்க்கொடியின்
ஆட்டத்தை மீறிய நாட்டியம் செய்மன
மாம்மயில் மீதில், அருட்
சந்தக் கவிதரும் செந்தமிழ்த் தெய்வமே!
சண்முக! சாய்ந்தாடு
சம்பு வனத்துறை அம்பிகை பாலனே!
சண்முக! சாய்ந்தாடு!

### 13

தன்உளம் மீறிய காதலொடு இன்னிசை
தாங்கி வரும்தமிழில்
தான்அல ரும்கவித் தாமரை மத்தியில்
தங்கிய தேன்பருகி,

மன்னிய போதை மயக்கினில் ஆடிடும்
மாதவர் நெஞ்செனவும்;
மாமல யத்தி லிருந்து முகிழ்த்திடும்
மல்லிகை வாசமொடு
புன்னகை சிந்து குறிஞ்சியின் மாமணம்
பூண்டசைந் தாடிஇவண்
போந்திடும் மாருதப் பூங்கரம் தீண்டலின்,
புன்னகை சிந்தும்ஒரு
சன்னல் திரைத்துகில் என்னவும் அழகொடு
சண்முக! சாய்ந்தாடு!
சம்பு வனத்துறை அம்பிகை பாலனே!
சண்முக! சாய்ந்தாடு!

## 14

சேணுறு வானவர் சேனை முதலி;எம்
செந்தமிழ் தந்தமுதல்;
சிவகுரு; பண்டுயர் சித்தர்கள் பூசனை
செய்திடும் ஞானஉரு;
ஆணொடு பெண்ணும தான சிவத்தினது
ஆறுமு கப்படிவம்;
ஆற்றல் அனைத்தும்ஒன் றாகிய வேற்படை
யாளி; மலைக்கிழவன்;
பேணும் மனக்குகை மத்தியிற் பூத்தொளிர்
பேரருட் சோதிஎனும்
பேச்சினர் யாவரும் ஆச்சரி யிக்கஓர்
பிள்ளை உருவினில்நான்
காணும் வகையினிற் காட்சி தரவரும்
கந்தனே! சாய்ந்தாடு!
காவிரி யின்கரைக் காவையில் மேவிய
கந்தனே! சாய்ந்தாடு!

## 15

அள்ளிச் சுவைக்கஓர் ஆயிர நாவுடன்
ஆடி வரும்தழலை
ஆதவன் செங்கரம் பூதலத் தேபொழி
அக்கடுங் கோடையிலும்,



தெள்ளிய பூம்புனற் பொன்னி மணற்கரை
தேடி வரும்தென்றல்
தீண்டத், தளிர்விரல் நீண்ட கிளைக்கரம்
திக்கெட் டிலும்பரவ,

வள்ளன்மை காட்டி அழைத்திடும் மாமரம்
வாரி வழங்கிடவே,
வாய்த்த கொழுங்கனி காம்பெனும் ஊசலில்
வாட்டமற் றாடுதல்போல்,

சள்ளை மறந்தஎன் உள்ள மடியினிற்
சண்முக! சாய்ந்தாடு!
சம்பு வனத்துறை அம்பிகை பாலனே!
சண்முக! சாய்ந்தாடு!

# 3. தாலப் பருவம்

## 16

இருந்தும் தந்தை எந்நாளும்
இரந்த குடிக்கும் இயல்புடையான்;
ஈன்றாள் என்னைப் போல்எங்கும்
எண்ணற் றிருக்கும் ஏழைகளின்

வருந்தும் குரல்கேட்டு உதவிடவே
வாழும் குணத்தாள் எனஇரங்கி,
வாரிக் கரத்தில்எடுக்கும்ஒரு
வாஞ்சை யுடன்யான் வருகையிலே,

பொருந்தும் அலைக்கைப் பூக்களொடு
பூசை முடிக்கும் ஆசையுடன்
போந்த புனல்தண் பொன்னிதொழும்
பொழில் ஆனைக்கா வின்நடுவில்,

கருங்கல் அறைக்குட் கண்வளரும்
கந்தா! தாலோ தாலேலோ!
கருத்தன் மகனாய் வந்தசிவக்
களிறே! தாலோ தாலேலோ!

## 17

குடகுஅங் களிக்கக் கொணர்ந்து, அழகு
குறையா முல்லை மணம்கமழக்
குறுகும் பொன்னி குறைவில்வளம்
கொழிக்கும் மருதப் பண்ணையிடைப்
படர்கூ விளப்பைங் காவினில்,ஓர்
பசுங்கொம் பினிலே பூங்கொடியாம்
..........................................
..........................................
வடமிட்டு இணைத்த தொட்டிலிற்கண்
வளரக் கிடத்தி வைத்து,என் உள
வயலிற் கிளைத்து வளர்பாச
வகையாம் களையைக் களையஅருள்—
மடமோ டிறங்கும் அகிலம்மை
மைந்தா! தாலோ தாலேலோ!
மயில்மேல் ஏறி வரும்சுப்ர
மணியா தாலோ தாலேலோ!

## 18

உள்ளத் தெளிவற்று ஓயாமல்
உறுமிச் சமரிட்டு, ஓஓஎன்று
ஊளை யிடலே உயிர்வாழ்வின்
உண்மைக் குறிக்கோள் என்னும் இளம்
பிள்ளை; அவனைப் பெற்றிடவே
பிறந்த பேதைப் பெண்;வயிற்றுப்
பிழைப்புக்கு எதையும் பிரியமொடு
பிழையென்று உணர்ந்தும் மறுக்காமல்,
கள்ள மனத்தி னொடுசெய்து
காலம் கழிக்கும் ஆண்,இவர்கள்
கப்பிக் கிடக்கும் காசினியைக்
காணில், கடிந்து அக் கணம்எடுப்பாய்
துள்ளும் வேல்என்று அஞ்சிஉனைத்
துயிற்று விக்க விழைகின்றோம்.
துணைவா! தாலோ! தண்காவைத்
தோன்றால்! தாலோ தாலேலோ!



''நிசம்.கள்'' என—எம் நெஞ்சத்தே
நிறைந்த அறிவு கரைந்தொழிய—
நின்று முழக்கும் கவடர்குலம்
நெடுகத் தீட்டிக் காட்டிவரும்
இசங்கள் பலவும் இழித்திடலால்,
இயல்பை இழந்தது எம்இனமே.
எத்திச் சுரண்டும் எத்தர்கள்கை
இயக்கும் பாவை எனத்,தங்கள்
வசம்கெட்டு உளையும் வாழ்வு.இதனால்
வதங்கிக் கிடக்கும் வையத்து
வாட்டத் தேஉன் நாட்டமுற,
வடவைத் தீப்போல் கனன்றுனது
புசம்தாங் கியவேல் சீறிஎழின்
பொறுக்கத் திறன்ஏது எமக்கையா!
பொன்னித் துறைவா! தாலேலோ!
பொன்மயிற் பாகா! தாலேலோ!

## 20

வாய்த்துக் கிடக்கும் வளமையெலாம்
வன்பா லையிலே நிலவாக,
வறுமைப் பெரும்பேய் வழிமறித்து
வாயைப் பிளந்து விழுங்கவரத்
தீய்ப்புண் டிருக்கும் மண்ணுலகில்,
தெருநாய் போலத் தீனர்களாய்த்
திக்கற் றலைந்து திரிந்தாலும்
திரும்பித் திருந்தும் தெளிவிலராய்,
ஏய்த்துப் பிழைக்கும் இழிதொழிலே
ஏற்ற தெனக்கொண்டு எப்பொழுதும்
ஏங்கிக் கிடக்கும் எம்நாட்டை
இன்று காணில், எழும்சினத்தால்
சாய்த்துச் சழக்கை மாய்த்திடவேல்
சடக்கென் றெடுப்பாய் எனப்பயந்தோம்.
சண்முக! தாலோ தாலேலோ!
சம்பு வனத்தாய்! தாலேலோ!

## 4. சப்பாணிப் பருவம்

**21**

நீண்டதோர் பட்டியலை
நீட்டி. அவற்றையெலாம்
நீ அளித் தால்இதனை
நினக்களிப் போம்' எனவே
வேண்டும்அப் பக்தர்குழாம்
வீரிடும் ஓசையிலே,
விற்கப் படும்பொருளாய்
விட்ட நினதருளுக்கு
ஈண்டும் அடியவரும்
எண்ணத்தை நஞ்சாக்கி
ஏய்க்கும் தரகர்களும்
எங்கணும் சூழ்ந்து,அறிவை
ஆண்டு வரும்மடமைக்கு
ஆலயத் துள்ளிருந்தே—
ஆனையங் காஅழகா!—
ஆர்த்தங்கை கொட்டுகவே!

**22**

கள்ளம் கபடமிலாக்
காந்தச் சிரிப்பதனால்,
காண்பவர் நெஞ்சையெலாம்
கைக்குள் அகப்படுத்தும்
உள்ளம் படைத்துஉலகத்
துள்ள சிறார்களெல்லாம்
உன்னுரு மாற்றம்எனும்
உண்மை தனைஅறியாக்
குள்ள மனத்தினராய்க்,
குன்றுகள் தோறும்உனைக்
கூக்குர லிட்டுநிதம்
கும்பிடும் மானுடரை
எள்ளும்எம் தெய்வதமே!
இன்னெழில் நாவலடி
ஈசன் இளமகவே!
இருகரம் கொட்டுகவே!



**23**

பொன்னும் நவமணியும்
பூவொடு பூந்துகிலும்
பூட்டிப் பலவிதமாய்ப்
புத்தெழில் கண்டுமகிழ்
அன்னையர் போல்,நிதமும்
ஆசை உலுக்கிடலால்
ஆளுக் கொருவிதமாய்
ஆன விதத்தினில்நீ
இன்னெழிற் கோலமுற
இச்சையுடன்முயலும்
இவ்வுல கோர்க்கெதிரே
எள்ளிச் சிரித்திடும்—எம்
அன்னையும் தந்தையுமாம்—
ஆறு முகச்சிவமே!
ஆனையங் காவுடையாய்!
அருட்கரம் கொட்டுகவே!

**24**

ஈனம் அழிக்கவரும்
ஈடறி யாமறமே!
இளமை வளமையெலாம்
ஏற்றெழும் இன்னெழிலே!
ஞானம தோர்உருவாய்
நாடிய வேலுடையாய்!
நாவலங் காஅகில
நாயகி தன்குமரா!
வானவர் சேனைகொள
வந்த தனித்தலைவா!
வண்தமிழ் ஈந்துதவக்
கொண்ட முதற்குரவா!
தீனர்க ளுக்குதவும்
தேவர்கள் தெய்வதமே!
திக்குகள் கெக்கலிக்கச்
சப்பாணி கொட்டுகவே!

**25**

பொருளறி யாச்சடங்கிற்
போது கழிப்பவர்கள்
புந்தியிற் சிந்தனையின்
போக்கை மறித்திடலால்,—
இருளிடை யேகுருடாய்
ஏங்கி அழும்குழவி
இன்னும்ஒன் றுக்குவழி
ஈதென ஓதுதல்போல்—
மருளொடு வாதமிடும்
மதமெனும் பேருடைய
மானுடர் தங்கள்மன
மடமை தனைஇகழ்ந்து—
குருபர னே!முருகா!—
கொட்டுக சப்பாணி!
குளிர்பொழிற் காவையினாய்!
கொட்டுக சப்பாணி!

## 5. முத்தப் பருவம்

**26**

சீதக் கடல்நீர் முழுவதும்ஓர்
சிறங்கைக் கடங்க உறிஞ்சிடினும்,
சிறிதும் குறையாத் தாகமொடு
சீடமை கொண்ட குறுமுனிவன்
போதம் அடையச் செழுந்தமிழைப்
பொதியத்து அமர்ந்து புகட்ட,முனம்
போந்துஅங் கிருக்கும் முதற்குருவே!
பொன்னிக் கரையில் வாழ்சம்பு
நாதன் எடுத்துச் சீராட்ட,
நாகம் அணைத்த தோள்கள்எனும்
நளிர்குன் றேறி விளையாடும்
ஞானக் குழந்தாய்! இன்னருளாம்
காதல் மணக்கத் தான்மலரும்
கனிவாய் முத்தம் தருகவே!
காவை யதனுள் மேவும்அருட்
கந்தா! முத்தம் தருகவே!



**27**

கத்திக் குதித்துவெண் முத்துக்கள் ஆயிரம்
கைகளால் வாரி வந்து,
காசினிப் பெண்மடியில் வீசிக் களித்திடும்
கடல்அலைப் பாம்பின் உச்சி
புத்தழகு காட்டிடப் புத்தொளிசெய் கீட்டிசைப்
புலரிஎனும் மயிலின் மீது
பொற்புடைய செம்பொனொளி அற்புதக்கோலமொடு
போந்துகதிர் வேலை ஏந்திச்
சித்தம் சிலிர்க்கநீ சேண்வெளியில் எழுகையிற்,
செந்தமிழ்க் கவிதை யுள்ளம்
சீர்கொள்அலை வாயிலே தான்கண்ட காட்சியில்
செம்மாந்து சிம்புளிக்கப்,
பக்தியால் நக்கீரர் பாட,மென் முறுவல்புரி
பவளவாய் முத்த மருளே!
பாவைகுற மகள்நேச! காவைவரு குமரேச!
பவளவாய் முத்த மருளே!

**28**

நிரவலே அறம்' என்று நித்தலும் பேசியும்
நெடுங்கொடிகள் ஏற்றி வைத்தும்
நெஞ்சினை மயக்கிவிடும் வஞ்சக முடன்பழைய
நிலையைக் குழப்புதற்கே
சரசமிடு வார்கள்தம் சன்மார்க்க சமதர்ம
சத்தமெல் லாம்,உலகுதம்
சாகச மயக்கிலே மோகமிக ஆகையிற்
சதிசெய்து வீழ்த்தி விடும்ஓர்
கரவென்று உணர்ந்தநீ, கதியற்ற மானுடம்
கைப்பாவை யாகி அந்தக்
கவடர்அடி யில்வீழ அபயம்என ஓடுதல்
கண்டுபுன் னகைகாட்டுவாய்!
பரதெய்வ மே!காவை அரன்ஈன்ற செல்வமே!
பவளவாய் முத்த மருளே!
பாலமுரு கையனே! கோலஉரு செய்யனே!
பவளவாய் முத்த மருளே!

## 29

வாய்க்கினிய பேச்சினால் வாக்காளர் நடுவிலே
வந்து, பின் தலைவர் ஆகும்
வாய்ப்புற் றதும்தங்கள் ஏய்ப்புத் திறத்தினால்
வல்லரசர் போல வாழும்
பேய்க்குணப் போதையால், பேதுற்ற நாட்டைப்
பெரும்பாலை யாக்கி விட்டுப்
பித்தக் கிறுக்கினிற் கத்திக் குதித்திடும்
பெற்றியைக் கண்டு, நெஞ்சம்
தீய்க்கும் சினத்தொடுஅத் தீயர்மேல் ஏவிடத்
தீட்டுவடி வேலொளியுடன்,
தீயொத் திருக்கும்ஒளி மேயசெவ் வாய்இதழ்
தெறிக்கும் சினச்சிரிப்பின்
தூயஅற ஒளிகொண்டு சேயென விளங்குவாய்!
துவர்வாயின் முத்த மருளே!
சுடரயிற் கையனே! காவைமுரு கையனே!
துவர்வாயின் முத்த மருளே!

## 30

உரிமையை நினைந்துதம் கடமையை மறந்திடும்
உழைப்பாளர் கூட்டம் எங்கும்
ஓலமிட் டலைகின்ற கோலத்தை நோக்கலின்
உதிக்கின்ற புன்சிரிப்பும்,
புரியாத வகையில்இப் புவியைச் சுரண்டவே
போந்தமுத லாளர் கூட்டப்
புனைசுருட் டால்உலகர் அனைவரும் கெடல்கண்டு
பொங்கிடும் புன்சிரிப்பும்,
நரியொப்ப இங்கிவர்தம் நடுவிற் புகுந்துஇனிய
நயவஞ்ச கப்பேச்சினால்
நாடாள முன்வரும் நஞ்சரைக் காண்டலால்
நண்ணிடும் புன்சிரிப்பும்
விரிகின்ற உதயத்து வெயிலொத்த இதழ்குவிய
மெல்வாயின் முத்த மருளே!
வெண்ணாவ லடியிலுறு தண்ணார் கடம்பனே!
மெல்வாயின் முத்த மருளே!



# 6. அம்புலிப் பருவம்

## 31

கண்டார் பயங்கொள்ள அண்டாண்ட வெளியிலே
காற்பந்து விளையாடிடும்
கடவுட் குழந்தைகால் படலாற் சொலித்தெழும்
கதிர்மணிப் பந்தாகிய

வெண்திங்க ளே! உன்னை விளையாட வேண்டிவடி
வேலவன் அழைக்கும் வேளை,
வீணாக முகிலினுட் காணாம லேஒளிய
விரைகின்ற விந்தை ஈதென்?

அண்டாண்ட மேட்டில்நின்று ஆனந்த நடமாடும்
அமுதலிங் கேசர் மகிழ,
அகிலாண்ட நாயகிமுன் ஆசையுடன் ஈன்றஓர்
அற்புதச் சேய்இவன் காண்!

தண்டாயு தம்கையிற் கொண்டமுரு கேசனோடு
தண்மதீ! ஆட வாவே!
தண்ணார் தடங்காவை வெண்ணாவல் நிழலிலே
தண்மதீ! ஆட வாவே!

## 32

மானிடம் மயங்கிஉனை மண்என்று தேறாது
மாழ்கிக் கிடந்த தெல்லாம்,
மாண்டகதை யாகியபின் வீண்கருவம் ஏன்? உன்னை
மனையாக்கி விடநினைந்த
நானிலத் துயிர்களே பெருவெற்றி காண்கின்ற
நாளில்வீண் பிடிவாதமோ?
நாங்கள்அன்று. அன்புடன் ஈங்குஅழைக் கின்றவன்,
நமையெலாம் முன்படைத்துச்
சூனியப் பரவெளியின் மேல்நின்றுஓர் அகிலாண்ட
சோதிமா மயில்மீதிலே
சுத்தமெய்ஞ் ஞானம்எனும் முத்துவேல் ஏந்திவரு
சுப்ரமண் யக்கடவுள்காண்!

பால்நில வெறிக்கின்ற மேனியுடை யாய்! இவண்
பனிமதீ! ஆட வாவே!
பரிவுடன் அழைக்கின்ற காவைமுரு கேசனொடு
பனிமதீ! ஆட வாவே!

33

மதியற்ற நாளில்நீ விதியற் றலைந்திடும்
மருமத்தை ஓர்ந்திடாமல்,
மானுடக் கைக்குட் படாய்' என்று அயர்ப்பினால்
மாழ்கிக் கிடந்துவிட்டோம்
கதியற்ற மனம்இன்று புதியவிஞ் ஞானக்கை
காட்டும்ஒரு வழிவிரைந்தே,
ககனவெளி மீதில்உன் சகசநிலை ஈதுஎனக்
கண்டுஇனிது விண்டுரைக்கும்
புதியஒளி பெற்றபின், பண்டைவீண் கௌரவப்
போலிப் பகட்டில் வாழும்
பொருளாளர் போல,நீ எட்டிஏ காந்தமாய்ப்
போவதால் பயன்ஏதுகாண்!
விதியினைச் சிறையிட்ட வேலவன் அழைக்கிறான்.
வெண்மதீ! ஆட வாவே!
வெண்ணாவல் நிழலிலே கண்ணான முருகனொடு
வெண்மதீ! ஆடவாவே!

34

கவிராயர் பலர்உனைக் கற்பழித் திட,நீஓர்
கடைகேடி ஆன தறிவோம்.
காலம்உன் மேனியில் தொழுநோயை வீசிடக்
கரைகின்ற அதுவும் அறிவோம்.
குவியாத காமவெறி கொண்டுநீ செங்கதிர்க்
குமரனைச் சுற்றி வந்து,
கும்பிட்டு நிற்பதனை அம்புவியும் வான்உடுக்
கூட்டமும் நன்கறியுமே.
அவியா மயற்சுரத்து அவசமாய் விட்டநீ
ஆடையில் லாதுஅலைவதால்
ஆத்திரங் கொண்டுஉனைப் போர்த்தும்வெண்
முகில்களின்



ஆதுர மெலாம்அறிகுவோம்.
தவியாய்த் தவிக்கும்நிற்கு இன்னமும் அகந்தைஏன்?
தண்மதீ! ஆட வாவே!
தண்காவை முருகன்உனை அன்போடு அழைக்கிறான்.
தண்மதீ! ஆட வாவே!

35

பெண்எனக் கொண்ட ஒரு பிரமையாற் பலர்பண்டு
பித்தாய்ப் பிதற்றியதுவும்,
பிஞ்ஞுகன் சடையில்முன் அஞ்சிப் புகுந்தஆண்
பிள்ளை என்று உன்னியதுவும்
உண்மையன்று; அன்று உனது வெண்மைநிற உருவுகண்டு,
'ஒன்றுக்கும் உதவாமலே
உயரத்து இருக்கின்ற கற்பாறை தான்' என்று
உணர்த்தி, விஞ் ஞானம் எங்கள்
கண்ணைத் திறந்திட்ட பின்னரும் ஏய்ப்பதேன்?
கதியற்று அகண்ட வெளியில்
காய்கதிர வன்வீட்டு வாயிலிற், பிச்சைக்குக்
காத்துக் கிடக்கின்றஉன்
எண்மையை அறிந்துகதிர் வேலவன் அழைக்கிறான்.
இந்துவே! ஆட வாவே!
எழிற்காவை வாழ்முருகன் ஏவல்செய்து உய்திபெற
இந்துவே! ஆட வாவே!

## 7. வருகைப் பருவம்

36

உரிமை தனைத்தம் ஆட்சிவெறிக்கு
உணவாக் கிடுவோர் ஒருசிலரும்,
உற்ற கடமை முற்றிலும்விட்டு
உரிமைக்கு அலறும் மிகப்பலரும்,
பிரிய முடன்தாம் கீழ்இறங்கிப்
பீடு பெறப்பின் தொடர்வோரும்,
பேச்சொன்று அன்றிச் செயல்அறியாப்
பென்னம் பெரிய தலைவர்களும்,

புரியாக் குழப்பம் பொதிந்தபல
போதம் உரைக்கும் மேதைகளும்
புகட்டும் அறிவே திகட்டிடலால்,
போதைக் கிறுக்கில் பொன்றிடுவோர்

வரிசை வளரும் வையத்தின்
வலக்கை பிடித்து மடைமாற்ற
வருக! திருநா வற்காட்டின்
வள்ளால்! வருக! வருகவே!

**37**

இயக்கும் கடவுள் எங்குற்றான்?
இயற்றப் புகுந்த தனைத்தும்மிக
இழிந்து கிடக்கும் இந்நிலையில்
எழுந்தே இதனைத் திருத்தாமல்,
மயக்கத்து அயர்ந்து மாழ்கிடுதல்
மாண்போ?' எனஇம் மண்ணுலகின்
மாந்தர் குலமே மறுகையிலே
மறைந்தோ இருப்பது? அறிவனைத்தும்
வியக்கக் கரத்தில் விஞ்ஞான
வேலோடு எழுந்து, விழிக்கெதிரே
விந்தை விளைக்கும் விருப்புடனே
வேட்கை மயில்மீ தேறி,நலம்
பயக்கும் படிசீர் திருத்திவிடும்
பரிவால் வருக! வருகவே!
பழனக் காவை வாழ்தண்ட
பாணீ! வருக! வருகவே!

**38**

அழுகிக் கழுகிற்கு உணவாக
அடக்கம் செயஆள் இல்லாமல்,
ஆற்றங் கரையிற் கிடந்திடும்ஓர்
அனாதைப் பிணத்தில் எழும்அற்பப்
புழுவிற் கடைய புன்குரம்பை
புனைந்து திரியும் மானுடத்துட்
பொதிந்து கிடக்கும் பொல்லாங்கால்,
புவனம் கரிந்து பெருநரகாய்



விழுமுன், காக்க வேண்டுகிறேன்.
வேலா யுதத்தை வீசி,அருள்
வேண்டிக் கிடக்கும் தொண்டர்களின்
வேட்கை மயில்மேல், விரைவுடனே
எழுக! செழுநீர் எழிலுருவம்
ஏற்றான் மகனே! வருகவே!
இயல்சேர் ஆனைக் காஅமர்ந்த
எழிலோ வியமே! வருகவே!

**39**

வறுமை மலிந்து, வாழ்க்கைஒரு
வறண்ட பாழாய் விட்டதனால்,
வாடிக் கிடக்கும் நாட்டினர்தம்
வருத்தம் தோய்ந்த நெஞ்சகத்தில்
உறுவீண் பிணக்கி னுட்புகுந்தே,
உயரக் கொடிகள் உயர்த்தி,அருள்
உபதே சங்கள் ஓதி,மனம்
உளையக் குழப்பித், தம்முடைய
சிறுமை விளங்க ஏமாற்றிச்,
சிம்மா சனத்தைப் பெறச்சூழ்ச்சி
செய்யு மவர்பால் சிக்குண்டு
சீர்கெட் டழியும் குடியரசால்,
பொறுமை இழந்துஉன் பொன்னடியே
புகல்என்று அடைந்தோம். வருகவே!
பொன்னார் காவை நகரின்நறும்
புகழே! வருக! வருகவே!

**40**

அடங்கி ஒடுங்கும் ஆற்றல்மிகும்
ஐம்பூ தங்கள் பின்தொடர,
அணுவைப் பிளந்தும் அகிலாண்டம்
அனைத்தும் அளந்தும் அடிமைசெயத்,
திடம்கொண்டு உலகத் தெருவழியே
தென்போடு உலவும் திறனுடைய
தேவ குமார னாம்மனிதன்
திரங்கி மனத்துத் தென்பிலனாய்,

முடங்கிச் சாவின் சன்னிதியின்
முன்ஏ குங்கால்,உன்னி—அதோ!—
முருகா!' எனக்கை கூப்புகிறான்.
மூடச் செருக்கின் முடிவிலுள
தடம்கண்டு அடையத் தாவும்அவன்
தனக்குஉன் அருளைத் தருகவே!
தமிழுக்கு இரங்கும் தண்காவைத்
தண்டா யுதனே! வருகவே!

## 8. சிற்றிற் பருவம்

### 41

திரண்டு கிடக்கும் தேசத்துச்
செல்வம் தமக்கே உரித்தாகத்,
திருவிக் கிரமன், போல்ஓங்கித்
தீய்க்கும் ஆசைப் போக்கினிலே
சுரண்டத் தொடங்கி, நித்தம்ஒரு
சூழ்ச்சி யதனால் ஆட்சியைஓர்
சுமையாய்த் தாங்கி, வஞ்சனையால்
சோர்ந்துஇவ் உலக மானுடமே
மிரண்டு கிடக்க, மிகமகிழும்
மிண்டர் அடைந்த மேல்பதவி
மிடுக்குஈ தல்ல, சிறுமியர்தம்
மென்கை இழைத்த மணல்வீடே!
இரண்டு கரமும் குவித்தோம்.நீ
எங்கள் சிற்றில் சிதையேலே!
எழிலார் காவைப் பூவைதரும்
இளையாய்! சிற்றில் சிதையேலே!

### 42

புகட்டும் அறநூற் போதமெலாம்
பொய்யென்று இகழ்ந்து புதியதொரு
புரட்சிப் பாதைப் போக்கெனவீண்
போலி வழிபோய், அழிவுமலை
முகட்டின் உயர்ந்த முடிமிசையே—
மூண்ட கிறுக்கால் நாகரிக



முற்போக் கெனக்கொண்டு அற்பரொடு—
முனைந்து குதிக்க முனைபவர்வீண்
பகட்டன்று இது யாம் வாலையர்கள்
பரிவோடு அமைத்த மணல்வீடே!
பாலும் தேனும் பழச்சாறும்
பாகும் கலக்க எழும்சுவையில்
கதிட்டும் புனற்கா விரித்துறையின்
செல்வா! சிற்றில் சிதையேலே!
திருவானைக்கா நகர்உறையும்
தேவா! சிற்றில் சிதையேலே!

### 43

சீர்திருத் திடமுன் உலகுதொழும்
செந்நாப் போதார், சீகாழிச்
செம்மல், நாவுக் கரசுஇவர்கள்
செய்த தனைத்தும் பாழாக,
யார்திருத் திடினும் தம்பழைய
யதார்த்த நிலையில்,—முன்சீவ
யாத்திரை முதல்நாள் போல்—இன்னும்
யாண்டும் நடக்கும் மானுடத்துப்
பார்இருப் பதனைப் பார்த்து, உளத்தில்
பரவும் சினத்தீ மிகப்,—'பகையின்
படைவீ டிது'எனப் பதைப்புடனே
பட்டென்று இடது பதம்தூக்கி,
ஓர்உதை கொடுத்தே ஒழித்துவிட
உதவாச் சமூகம் ஈதல்ல.
ஒளிசேர் காவை யாய்! எம்நெஞ்சு
உளையச் சிற்றில் சிதையேலே!

### 44

ஏய்த்துஇவ் உலகின் ஏழைகள்பால்
எத்தும் பசப்பால், தாம்அவர்தம்
ஏவற்கு அடிமை' எனப்பேசி,
ஏற்ற தலைவர் எனச்சிரத்தைச்
சாய்த்திட் டதுமே, சடக்கென்று
சனநா யகத்தின் திருப்பெயரால்,

சாட்டைக் கரத்தோடு அமர்ந்து,உலகைச்
சவாரிக் குதிரை யாக்கி,அறம்
தேய்த்து,ஆ ணவத்தால்—அரசாளும்
திமிரா சையினால்—இப்பெரிய
தேசந் தன்னைப் பாழாக்கிச்
செருக்கித் திரியும் தீம்பருக்கு
வாய்த்த தவிசன்று இது மணலால்
வனைந்த சிற்றில் சிதையேலே!
வயல்சூழ் ஆனைக் காஅமர்ந்த
வாழ்வே! சிற்றில் சிதையலே!

**45**

உதவாப் பழமைக் கதைபலவும்
ஓயாது உரைத்தே ஊளையிடற்கு
உரிய இடம்என்று, எரிவிழியோடு
உறங்கும் கிழட்டுக் கோட்டான்கட்கு
இதமாய்ச்; சுவர்கள் இடிந்துஉயரும்
எருக்கோடு இணைந்த கள்ளிகளால்
இருண்ட புதராய், இன்றுளதோர்
இழிந்த பாழ்இல் ஈதன்றே.
மதமாச் சரிய மாசுபடா
மலர்க்கை வருந்த,—மனதார—
மணலைக் குவித்து விளையாடி
மகிழ்தற்கு அமைந்த சிற்றில்இது.
அதம்ஈ தேன்?தென் ஆனைக்கா
அழகா! சிற்றில் சிதையேலே!
ஆறு முகத்துப் பெருங்கருணை
அரசே! சிற்றில் சிதையேலே!

## 9. துயிலெழற் பருவம்

**46**

மானசப் பூம்பொய்கை மத்தியில் அரும்பி,மறை
மதுகரம்ஓர் நான்குஇசைத்த
கானயாழ் இசையிலே தான் அவச மாகியுட்
கட்டவிழ்ந் திட்ட தால்,மெய்ஞ்



ஞானமலர் மீதில்அறு நங்கையர் வளர்த்திடவும்
நம்தமிழர் நாடு புக்கு
மோனம்விளை யும்காவை யின்நடுவி லேதுயிலும்
முத்துக் குமாரையனே!
கூனல்இள மதிதேய்ந்து கொண்டே நகர்ந்திடக்
குணகதிர் எழுந்து விட்டான்.
போனதுஇருள்.போனதே புவிஇன்னல் யாவுமே.
பொழுதோ விடிந்தது, இன்பம்
ஆனது.'இனி யாவுமே ஆனந்தம்! ஆனந்தம்!
ஆனந்தம்!' என்ற புதுமைக்
கானகச் சேவல்ஒலி காதில்விழ வில்லையோ?
கந்தா! விழித்தெழுகவே!

**47**

கானி லிருந்துஎழும் தென்இளங்
காற்றவள் கூட்டிப் பெருக்கிட,
வானின்ற மாரிஉன் கோயிலின்
வாயிலில் நீரைத் தெளிக்கிறாள்.
மேனின்று எழுந்திடும் பொன்னியும்
மெல்லஉன் நாமம் இசைக்கிறாள்
தேன்நின்ற பூந்துணர் வஞ்சியர்
தெய்வக் குரவை பயின்றிடச்,
சூனியக் காவினிற் பூத்தொளிர்
சோதி மலர்களைத் தூவிடப்,
பூநிறை கூடைய ளாய்உஷை
பூதலம் தேடி விரைகிறாள்.
மாநிலத் தாய்இதைக் கண்டதும்,
வாழ்த்தி மலர்க்கை குவிக்கிறாள்.
ஏன்இன்னும் தாமதம்? காவையின்
எம்பெரு மானே! எழுந்திராய்!

**48**

குடத்தினில் தேனும் கூடையில் கனியும்
கோணியில் சீனியும் கண்டும்
திடத்தினில் சுமந்த கொல்லியங் குறவர்
தெருவெலாம் கூடிநிற் கின்றார்

சுடச்சுடப் பொங்கற் சோறும்ஆன் பாலும்
சுவைபடக் காய்ச்சிய நெய்யும்
அடக்கிய கலம்பல் லாயிரம் கொண்டே
அந்தணர் வந்துநிற் கின்றார்.
கடப்பமா மலரும் கூவிளந் தளிரும்
கட்டிய சரம்பல குவித்து, இவ்
இடத்தினைத் துறவோர் இனம்பல நிரப்ப,
இன்னிசை வீணையர் பாட,
நடத்தினில் வல்ல நங்கையர் பரத
நாட்டியம் புரிந்திடு கின்றார்.
அடத்தினுக்கு இனியும் துயில்வதோ? காவை
ஆறுமு கா!விழி மலராய்!

**49**

கங்கை யாதிநதி மங்கை மார்எழுவர்,
கைவ ளை'கலக லீர்'எனத்
தங்க நீர்க்கலசம் பொங்கும் ஆவலொடு
தாம்சு மந்துவிரை கின்றனர்.
செங்க திர்க்கடவுள் ஆதி யோர்எழுவர்,
சேண கப்பொழிலி னூடுஅலர்
கொங்கு லாவுமலர் கொண்ட கூடைபல
கொண்டு முண்டிவரு கின்றனர்.
தங்கள் தோளின்மிசைத் தங்கு காவடிகள்
தாங்கி, மானுடரும்—ஈங்கிதோ!—
மங்க லப்பொருள்க ளோடு கோவிலின்முன்
மண்ட பத்தில்நிறை கின்றனர்.
எங்கள் காவைவளர் தெய்வ மே!தமிழர்
ஏத்தும் ஞானகுரு பண்டிதா!
இங்கு வந்தருள ஏற்ற காலைஇதில்,
இன்ன மும்துயில லாகுமோ?

**50**

மோக முற்றழகு முத்த மிழ்க்கிளிகள்
முருகன் வாழ்கெனமு ழக்கிடும்.
யூகம் மிக்கஉப நிடத குக்குடமும்
ஓம்ஓ லித்துவல மாய்வரும்.
பாகெ னக்குழறும் மாமறைக்குயில்கள்
பாடி உன்பெயர்கள் ஓதிடும்.



யாக வேதிகளில் ஆகு திப்பொருள்கள்
வேகும் அங்கி'அர கர'எனும்.
போக சுந்தரியள் ஆன தாரணிவி
பூதி வேண்டிஉனை வாழ்த்தினாள்.
ஏக நாயக!நீ ஏறு மாமயில்தன்
எழுநி றக்கலவம் ஆயவான்,
மேக மாமலையின் மீது கீழ்த்திசையில்
மேவு கின்றதொளி யாய்இதோ!
ஆக மாதிபதி யான காவைநகர்
ஆண்ட வா!துயில லாகுமோ!

## 10. சிறுபறைப் பருவம்

**51**

பிளவற்ற வாஞ்சை,கை பின்னிப் பிணைத்திடப்
பேதமெல் லாம்மறந்து
பெய்அன்பு மழையினில் மெய்ஞ்ஞானம் ஓங்கிடப்
பீறிட்டு நெஞ்சில் உறுதி
அளவுடன் அமைந்ததால், அமரர்பெறும் இன்பெலாம்
அவனிக்கு இறங்கி வந்தே,
அனைவர்பணி யும்செய்யும் நினைவொடு புகுந்துநம்
அகவாச லிற்கிடக்க,
தளர்வற்ற கல்வியும் அளவற்ற செல்வமும்
தன்னே ரிலாத் தலைமையும்
தக்கஒரு தாரமும் மிக்கஉயர் சேய்களும்
தாழ்விலா நண்பர் உறவும்
வளர்கின்ற வாழ்வில்'இவ் வையத்து மானுடம்
வளமுற்று வாழ்க!' என்றே
வண்தமிழ்க் காவைகண் கண்டசிவை பால!சிறு
வண்பறை முழக்கி யருளே!

**52**

''காலத்தை யொட்டியதொர் கதியிற் செலாமதக்
கட்டளைகள் கருதி வீழும்;
கண்டிப் புடன்மனக் கருணைஇல் லாஅரச்சு
கவுரவம் இழந்து தாழும்;
கோலமொடு நற்குறிக் கோளிலாச் சமுதாய
குடிகெட்டு அழிந்து போகும்;

குணமற்ற ஞானமும் தெளிவற்ற கல்வியும்
கொள்கையில் லாதஅரசும்
ஞாலந் தனக்குநோய்; சீலமில் லாவாழ்வு
நஞ்சம் கலந்த உணவே;
நாகரிகம் ஈதெனப் போலிவாழ் வினையுற்ற
நாடுகெடும்'' எனும்வாய்மைநீ
ஓலமிடும் மானுடத்து ஒவ்வொருவர் செவியிலும்
ஒலித்திடச் செய்வதற்கே,—
உயர்காவை வேல்முருக! உமையாள் குமார!குக!
உனதுசிறு பறைமுழக்கே!

53

அதம்செய எழும்புதிய அக்ரமத் தால்நீண்ட
ஆசைஆ ணவமயக்கில்,
அறமுறை மறந்தோடி ஆடிக் குதிப்பவர்தம்
அவலநிலை யதனை,மூடிச்
சுதந்தரம் எனும்இனிய சொல்லிற் பதுக்குவது
சூழ்ச்சி'என உலகம் அறியச்,
சொல்லித் திருத்திவிடும் வல்லாண்மை கொண்டவர்கள்
சோர்விலாப் போத மொழிபோல்,
இதம்தர எழும்தொனியில் எண்திசையு மேசிலிர்த்து
இருகை குவித்து நிற்க,
இனியதமிழ் உருவில்ஓர் புனிதநாதந்தனை
எழுப்பிஎம் மைக்காத்து அருட்
பதம்தரச் சமயம்இது, பன்னிருகை வேலவா!
பைம்புனற் பொன்னி பரவிப்
பாதபூ சனைசெயும் காவைஅகி லம்மையின்
பால!சிறு பறைமுழக்கே!

54

''அழியட்டும். மானுடர்க்கு ஆகாத தாய்எழுந்து
அக்கிரம வழியில் நின்றே
ஆளும்அர சாட்சியும் அனியாய முறைகளும்!
அடிவேர் அறுந்து கடிதிற
கழியட்டும் ஒவ்வாத கதைகள்பல கூறிக்
கருத்தைக் குழப்பி விட்டுக்



கைவரிசை காட்டியே வையத்தை ஆள்கின்ற
கபடசம யங்கள் எல்லாம்!
ஒழியட்டும் உலகத்தில் ஒருவர்மற் றொருவர்தம்
உழைப்பைச் சுரண்டி இன்ப
உச்சத்தை எட்டிடும் பச்சைத் திருட்டுவாழ்வு!
ஓயட்டும் இழிவனைத்தும்!
இழியட்டும் மண்ணுலகை ஏய்த்துப்பல் வேடமிடும்
எத்தர்தம் தலைமை!'' என்றே
எண்திசையும் ஒலியெழத், தண்தமிழ்க் காவையாய்!
இனியசிறு பறைமுழக்கே!

55

சகவாழ்வி லேயுறும் சங்கடப் பாலையைச்
சகலரும் தாண்டி விடுக!
சந்தோடம் எனும்அரிய விந்தைக் கொழுங்கனிச்
சாற்றைச் சுவைத்தனைவரும்
இகலோக வாழ்வையே இந்திரா தியர்பெறும்
இன்பமய மாக்கி விடுக!
ஈடிலாப் பேரறிவு தேடாமல் வந்துஇவண
எல்லோ ருளத்தும் 'மலர்க!
திகழ்கின்ற புத்தொளித் தீபச் சுடர்க்குளத்
தீக்குளித்து இழிவு மாய்க!
தெய்வீக முற்றுமே எய்திமா னுடமெலாம்
தேவைகள் கடந்து வாழ்க!
உகமுடிவு கண்டுபுது சுகவாழ்வு பூக்கஎன
உலகெலாம் கேட்டு மகிழும்
ஒலிஎங் கணும்பரவ—ஒளிர்காவை யின்குமர!—
உனதுசிறு பறைமுழக்கே!

## 11. சிறுதேர்ப் பருவம்

56

தாழ்ச்சியொடு உயர்ச்சிபல
தந்தமனு தருமம்
தாங்கியமை யாற்,புதிய
தீங்குகள் அனைத்தும்

வீழ்ச்சியுற, விந்தைபல
சிந்திவரு கின்ற
வீறுடைய மக்கள்சன
நாயகம தென்னும்
ஆட்சியென வேஉலகில்
அற்புதம தான
அழகியம ணிச்சிறுதே
ராம்அதனை,—எம்முன்
காட்சிதரு நாவல்அடர்
காவைமுரு கா!—நின்
கைம்மல்ர்சி வந்திட
உருட்டிவரு வாயே!

**57**

சுத்தாத்து விதம்என்ற
சொற்பொருள் உணர்த்திச்
சோதியில் மறைந்தவட,
லூரர்மொழி காட்டும்
சித்தாந்த சன்மார்க்க
வித்தார வழியே,
சீவகா ருண்யமாம்
சிறுதீபம் ஏந்தி,
இத்தா ரணிசிங்க
ஏறாய்முன் னேற
எண்ணும் கவிச்சித்ர
வண்ணங்கள் யாவும்
ஒத்துஆன் றெழும்புதிய
கற்பனைச் சிறுதேர்—
உயர்காவை வேலவ—
உருட்டிவரு வாயே!

**58**

கொடிய நசையின் கொடுங்கரங்கள்
கூட்டிக் குவித்துப் பதுக்கியதால்,
கொழிக்கும் திருவின் தெரிசனமே
கூடாது ஒழிந்து குமைந்துவரும்



மிடியர் குடியை மேலேற்ற,
மெய்ம்மை எனும்வன் படைதாங்கி,
மெச்சி உலகே கைகூப்பும்
மிடுக்கோடு எழுந்த காந்திமுனி
படியில் எழுப்பப், பன்னாளும்
பரிவோடு உழைத்த பயன்என்னும்
பஞ்சா யத்துப் பேரரசாம்
பைம்பொற் சிறுதே ராம்இதனை—
வடிவேல் அழகா! திருக்காவை
வள்ளி கணவா!—உருட்டுகவே!
வட்வான் இமய மடப்பாவை
மைந்தா! சிறுதேர் உருட்டுகவே!

**9**

திடமான குரலில்தாம் தெய்வமாக் கவி,முனம்
தெளிவாக்கி விட்ட குறளால்
தீந்தமிழர் மரபதனை ஆய்ந்து அறிந்திட்டவழி
தேசத்தை முன்நடத்தக்,
குடவோலை முறையிலே குடிகள்பல தாம்தம்
குழுத்தலைவ னைப்பொறுக்கிக்
கொணர்ந்தவர்கள்,புரிகின்ற இணையிலாப் பணியில்ஓர்
குறையும்இல் லாத அரசுக்கு
இடமான செந்தமிழ்த் தடமே உயர்ந்துமுன்
ஈடிலாப் பீடில் நிற்க,
இவ்வுலக மேதொழும் செவ்வியது வாகிய
இராசரா சன்தன் ஆட்சிச்
சுடரொளி பரப்பும்ஒரு சொற்பனச் சிறுதேர்
சுடர்க்கரம் தொட்டுருட்டே!
சோபைதரு மெய்யனே! காவைமுரு கையனே!
தூயசிறு தேருருட்டே!

**60**

ஒப்பற்ற அற்புதக் கற்பனைச் சிற்பத்தின்
உயிரோ வியம்தீட்டியே,
உலகத்து மானுடவர் உய்யக் கொடுப்பதற்கு
உற்பவித் திட்ட மேதை;

செப்பரிய குணசீல னாம்காரல் மார்க்ஸ்அன்று
செங்கொடி உயர்த்தி வந்து,
செம்மைநல மேஒன்று சேர்த்திட, அமைந்தஒரு
சித்தாந்த சமதர்மமாய்
மெய்ப்பொடு நிமிர்ந்துவரும் அப்புத் தமைப்பதுமுன்
மெல்லடி தொடர்ந்து, மண்ணின்
மீதெலாம் சுற்றிச் சுழன்றுசிறு தேருருவில்
மின்னொளிப் பரப்புவதுபார்!
அப்ப!உனை அன்புடன் அழைக்கிறோம். அகிலாண்ட
அம்மையுடன் அமுத லிங்கத்து
அருளுருவ மாகிவரும் ஆறுமா முகவனே!
அச்சிறிய தேருருட்டே!

## 12. தகர் அடக்கு பருவம்

### 61

திருவெனப் பணிந்து தேசம்ஒவ் வொன்றும்
தினம்தினம் அஞ்சலித் திருக்கும்
தெய்வமா சக்தி திகழ்ந்திட, நன்று
தீதெனும் கொம்புஇரண் டேந்திப்,
பொருளெனும் பெயரிற்புகுந்து, வீண் பேதப்
பொங்கழற் சினத்துடன் எங்கும்
போக்கிலாது அலறும் மாக்களைத் துரத்திப்,
பொருதுஅலைந்து இருமையிற் புகும்ஓர்
கருநிற ஆட்டுக் கடாவினை அஞ்சிக்,
கைவலி யற்றுஅழுது அலறிக்,
கதியென நினையே மதியினுள் வைத்துக்
கண்ணில்நீர் மல்கிடக் கதறி
வரும்அடி யவர்தாம் தொழுகையிற் காக்க
வரத்தயங் கிடுவதேன்? ஐயா!
வளர்திருக் காவைமுருகனே! கலியின்
வலங்கெட இன்னருள் புரிவாய்!

### 62

அரியதன் சீர்த்தி அதைவிளக் கிடவே
ஆன்றெழும் அறிவழல் நடுவே,
ஆர்த்தெழுந்து இந்த அகிலமே நடுங்கி
அச்சமுற் றிடவளர்ந் துயர்ந்து,



பிரிவினை என்னும் பேருடன் ஆடிப்,
பீதியுற்று அறிஞர்கள் ஒளியப்
பெருந்துயர் விளைத்து வரும்மறிக் கடாவைப்
பிடித்துஅடக் கிடுபவர் இலையால்.
பரிவொடுஉன் பாதம் பணிந்துஅழைக் கின்றோம்
பயந்துமா னுடத்தொகை முழுதும்
பாயும்அவ் ஆட்டால் மாயும்'என்று அலறும்
பகுத்தறி வாளரைப் பாராய்!
விரிபுனற் பொன்னி சொரிமலர்க் குவையுள்
விளங்கிடும் நாவலங் காவின்
விமலைதன் மடியில் அமரும்ஓர் குமரா!
விளம்பும்எம் வேண்டுகோட்கு இரங்காய்!

### 63

ஆக்கமாம் மகத்தின் அழலிடை, முன்னாள்
அவனியோர்க்கு அன்பளிப்பாக
அளித்தநா ரதனார் விரும்பிய படியே
அருளுருத் தாங்கி இவ் உலகைக்
காக்குமாறு அமைந்த கடமையை மறந்து,
கலியெனக் கனன்று,உயிர்க் குலமே
கண்டுஉளம் கலங்கப் பண்டெழுந்து அலைந்த
கரியசெம் மறிக்கடா, புதிய
ஊக்கமோடு உலக அரசியல் உருவில்
உட்புகுந்து உளத்தருக் குடனே
உறுமுகின் றதுகாண்! உளம்குலைந்து உன்னை
உதவிக்குப் பரிந்துஅழைக் கின்றோம்.
தேக்கம்ஏன்? அதைஉன் திருக்கரம் தொட்டுத்
திமிர்அடங் கிடப்பிணித் தருளாய்!
திருவளர் காவை வரும்அருட் கடலே!
தேவ!எம் வேண்டுகோட்கு இரங்காய்!

### 64

மனமெனும் குண்ட மத்தியில் எழுந்து
மதியெனும் கதிரொளி பரப்பும்
மானுடச் சித்தம் எனும்மகத் திடைச்,செம்
மறிஎனத் தோன்றும்விஞ் ஞானம்,

தனதருந் தாயும் தந்தையும்ஆன
தாரணி மானுடந் தனையே
தாக்குதல் கண்டு சகிக்கமாட்டாது
தருமமே,இருகரம் கூப்பி
நினதடித் தலத்தை நெருங்கிஉன் எதிரே
நெடுங்குரல் எடுத்துநின் றலறும்.
நீதிதே வதையின் வேண்டுகோட்கு இணங்கி,
நிலைகுலைந் தாடும்அக் கடாவின்
சினம்கெடப் பிடித்துச் செருக்கினை அடக்கிச்
சேவகம் காட்டிடத் தடைஏன்?
செழும்புனற் காவைச் சேவலங் கொடியாய்!
திருவுளம் நீசிறி திரங்காய்!

**65**

திடம்படும் உலகம் தெளிவுடன் வாழ்க்கைத்
தேவைஎன்று ஆற்றிய பணிகள்
திறம்பி,இன்று "அறிவுத் தெளிவிலார் புரியும்
திரங்கிய கிரியைகள்,பயன்இல்
சடங்குகள்,மூடச் சழக்குகள், மனம்சஞ்
சலித்தவர் செயல்கள்"என்று அறிஞர்
சாடிடப் புகுந்து,எம் சமூகமே குலைந்து
சாம்பிடத்,தாம்எழுந்து உழப்பி
அடம்பிடித்து அடங்காது அலைந்திடும் கொணடி
ஆடுகள்,தம்எதிர்ப் பட்ட
அறிவினைத் தடுக்கும் ஆணவத் திமிரை
அடக்கிட ஆள்கிடை யாமல்
முடங்கினோம். காவை முத்துவேல் ஐயா!
முட்டுமுன் கட்டியே அவற்றின்
மூர்க்கமுற் றிலுமே தீர்க்க,மெய்ஞ் ஞான
முறைதிரும் பிடஅருள் செய்வாய்!

## 13. வேலோச்சு பருவம்

**66**

ஆதிக்கு முன்னம் அதுவான ஈசன்
ஆசித் தணைத்த அதனால்,
அகிலாண்ட கோடி அவையாவும் ஈன்ற
ஆதார சக்தி யவளே,—



பதித்தொர் கோடி பிரிவுற்ற தாய
பேயாட்டம் ஆடி உலகைப்
பீடித்து நிற்கும் வெஞ்சூரன் ஆவி
பின்ஓடி வீழ்ந்து மறையப்,
பீதிக்குள் ளாய பெரியோர்கள் கூடிப்
பிழையற்ற வாழ்வு காண்பான்
பின்நின்று தூண்ட—உன்னைக்கைந் நீட்டிப்
பெருவாஞ்சை கொண்ட ழைத்தும்
ஏதிற் கருத்தை ஏவித்,தனித்த
இடம்இங் கிருக்க நினைவாய்?
எழில்கொண்ட காவை முருகைய! வேலை
இன்னே சுழற்றி எழுவாய்!

**67**

"தருமம் குலைந்த தருணத் தெழுந்து,
தன்னே ரிலாமல் உலகில்
தலைசுற்றி ஆடும் நிலையில் தொடர்ந்த
கலிஓட,—மீண்டும் அறமே
வருமாறு செய்ய—வடிவேல் சுழற்றி
வருவேன்"எனும்த்ன் ஒருசொல்
வாய்மைக்கு மாறு படஞாயம் ஏது?
வையத்து வாழ்வு குலைய,
இருள்உற்ற கோயில் அறையிற் புகுந்திவ்
இழிவைத் தடுக்க மனமே
இல்லா திருத்தல்,—வல்லாண்மை கொண்ட
இறைவா!—நினக்கும் அழகோ!
திருவோ டெழுந்து வருபொன்னியின்கைத்
திரையாயிரங்கள் தழுவித்
திகழ்காவை வாழும் முருகைய! வேலைத்
திரும்பச் சுழற்றி வருவாய்!

**68**

ஓயாத இன்ன லதுவாக இந்த
உலகத்து வாழ்வு முடிய,
ஒருகோடி பேதம் அவைசூழ மீண்டும்
உயிர்பெற்று வந்து நிற்கும்

பேயாற்ற லோடு வெஞ்சூர னின்கை
பின்னின்று தள்ளி விடலால்,—
பித்துற் றெழுந்து, மொத்துற் றயர்ந்து
பேதுற்று நின்று மடியும்
நாயாக—மக்கள் அலைகின்ற காட்சி
நயனத்தில் ஏற விலையோ?
நாசம் தவிர்க்க நஞ்சுண் டிருந்த
நாதன்கை தொட்ட அதனால்,
தாயான எங்கள் அகிலாண்ட வல்லி
தரவந்த காவை முருகா!
தருமத்தை மீண்டும் உருவாக்க, உன்கைத்
தனிவேல் சுழற்றி எழுவாய்!

69

தன்ஆற்ற லான தனையோர்பொன் வேல
தாகக் கொடுத்த தலைவன்—
''தறிகெட்டலைந்து நரியொத் துலைந்து
தாழ்வுற்று வீழ விரையும்
இந்நா னிலத்தின் இதயத்தில் ஏறி
இழிவிற் செலுத்தி விடவே,
இடையீ டிலாது முயல்கின்ற சூர
பன்மாவின் ஆவி யதனை
முன்நாளில் ஆன முறையிற் கிழித்து
முழுவென்றி காண்க!'' எனவே—
மோனச் சிரிப்பொ டொருலிங்க மாய்எம்
முன்னே முளைத்து நின்றான்.
உன்னால்அல்லாமல் உய்வில்லை' என்றிவ்
உலகேங்கி ஓல மிடவும்,
ஒய்வேது? காவை அழகா! உன் வேலை
உடனே சுழற்றி வருவாய்!

70

அச்சக்தி தன்னுள் முச்சக்திரூபம்
அதுவான தெய்வ வலியால்
ஆக்கிட்ட வேலை ஆர்வத் துடிப்பின்
அந்நாள் அளித்தது,—உயிர்கள்



அச்சத்தை நீக்கி, அறிவோ டெழுந்த
ஆண்மைக்குள் அன்பு சொரியும்
ஆயாசம் அற்ற பேரின்ப வாழ்வில்—
அழியா திருக்க அலவோ?
நச்சுக்கை நீட்டி நாசத்தை மூட்ட
நாடோறும் வந்து நிற்கும்
நவமான கிரௌஞ்ச மலையான துன்பின்
நடுமார்பி னூடு பாய்ச்சிச்
சிட்சித்து, மண்ணை ரட்சித்து வாழ்வு
சிவமாக—நாவல் அடவிச்
சிவசக்தி பால!—வடிவேல் சுழற்றிச்
சேணின்று இறங்கி வருவாய்!

**கவித்துவம் வாழ்க!**

71

இழந்ததனை மீண்டும்அடைந்து
இன்பமுறத்,தன் அருளாம்—
என்கைக்கு எட்டும்—

பழம்கனிய, வெண்ணாவல்
பைம்பழனத்து அமர்ந்தவள்கை
பரிவோடு ஏந்தும்

குழந்தையுரு ஆகியநம்
குமரனுக்குப், பாமாலை
கோலம் செய்து.

வழங்கிடவந்து என்உளத்தே
வளர்கின்ற கவித்துவத்தை
வாழ்த்து வேனே!

## வாழ்த்து

72

வேதனைச் சகதி நாற்ற
வீச்சம்ஓய்ந்து, அமைதி வாசம்
விரிந்தெழ என்னுட் பூத்து
விண்ணெழில் பரப்ப வந்த

பாதபங் கயங்கள் வாழ்க!
பாசவேர் அறுக்க நீண்ட
பன்னிரு தடந்தோள் வாழ்க!
பகுத்துணர்ந்து அறியும் ஞான
போதமெய் யுருவாம் வேலும்
புள்அமை கொடியும் வாழ்க!
போற்றும்என் மனக்கண் முன்னே
புன்னகை வதனம் காட்டும்
நாதனாம் முருகன் வாழ்க!
நானும்என் தமரும் வாழ்க!
நற்றமிழ் மணக்கும் இந்த
நானிலம் வாழ்க! வாழ்க!

**காவை முருகன் பிள்ளைத்தமிழ் முற்றிற்று**



உ

# கீழ்வேளூர் முருகன் பிள்ளைத்தமிழ்

## காப்பு

பொன்னுலகு மின்னுலகு முகில்பொழியு மகிலமும்
பூங்கமல மலரோனுமென்
பூவைவண் ணத்துவண் ணத்துவனும் வச்சிரப்
புருகூத னாதியெவரும்

உன்னுபெரு வாழ்வுபெற விமையா சலத்துவளர்
உமைபாகன் முன்னமுதவும்
உயர்வார ணத்துமுக னருவார ணக்கடவுள்
உபயபத மலர்பணிகுவாம்

கன்னன்மொழி வன்னமுலை வாரணம் விரும்புறு
கரும்பினைய ரும்புநகைசேர்
கானவர்கள் வானவர்க ளாகவரு வல்லிபடர்
கனகவர் கற்பதருவை

மன்னுகதிர் வேலவனை மாலவனை மாமனென
மகிழ்கருணை மகமேருவை
வாலசுப் பிரமணிய சுவாமியைப் பரவுமென்
மதுரமிகு தமிழ்தழையவே.

## 1. காப்புப் பருவம்

### திருமால்

சீர்கொண்ட பகிரண்ட கோடிபல பெற்றுநிறை
செவ்வி தளராத உமையாள்
சீதமதி வேணியர னிருவர்கண் மணியையுயர்
தேவர்பெரு வாழ்வை மலிதேன்

நீர்கொண்ட தண்டலைக ளெண்டிசையு மண்டியெழில்
நிலவு கீழ்வேளூ ரில்வாழ்
நித்தியனை வாலசுப் பிரமணிய சுவாமிதனை
நிருமலனை இனிது காக்க

வார்கொண்ட செங்கமலை யென்னுமின் னினைமருவி
மகிழ்க ருணைமா ரிபெய்து
மன்னுமூ வுலகெனுங் கழனியிடை யுயிரென்ன
வருபெரும் பயிர்வ ளர்த்தே

ஏர்கொண்ட மார்பின்மணி பைந்துளவு தந்தவொளி
யென்னும்வான வில்லை மருவி
இயன்முல்லை மாதரென வருதோகை யோகையுற
எழில்பெற்ற நீல முகிலே 1

## சிவபெருமான்

(சந்தவிருத்தம்)

பாலார் தேன்மொழி நீள்க ரும்புயல்
போலார் மைக்குழல் பங்கரைக் கூர்த்திடு
பானா ளாரிரு ளாய்வ ளைந்தெழும்
ஆலா லத்தொளிர் கண்டரைச் சீர்ப்பெறு
பாவான் மூவர்மு னாளி யம்பிய
தேவா ரப்பொரு ணம்பரைப் பாற்பொலி
பாரா வாரச மான வின்பம
தானா வற்புத விம்பரைத் தேக்கிய

கீலா லாதிப னாதி யெண்டிசை
ஆள்வார் சக்கர மங்கையிற் சேர்த்தவர்
கேழார் தாமரை மீதி ருந்திடு
வேதா மெய்த்தவ ரம்பரத் தீர்த்தர்கள்
கீழேழ் பாதள லோக ரம்புவி
மேலோர் நித்தமு மன்புவைத் தேத்திய
கீழ்வே ளூருறை யோக சுந்தர
வாழ்வா மட்சய லிங்கரைப் போற்றுதும்

நாலா காரண நூன்மொ ழிந்தருள்
கோமா னைச்செய துங்கனைப் பாட்டியல்
நானா பேதவி ராக வண்டிமிர்
தேனீ பத்தொடை மொய்ம்பனைப் பாற்றிகழ்



ஞானா காரவி லாச சம்ப்ரம
லீலா நற்பிர சங்கனைக் கார்த்திகை
நாண்மா னார்தரு பால லர்ந்தசெவ்
வாயா ரக்கொளு மைந்தனைப் போர்த்தொழில்

மாலார் சூரொடு நேரெ திர்ந்திகல்
வேலால் வெற்றிசெ யெந்தையைத் தேற்றமில்
மாசார் கானவ ராய்வ ரும்பல
மால்யா னைக்கொரு சிங்கனைப் பாக்கிய
வானா டேகுடி யாக வும்பரை
யேதா பித்திடு நண்பனைச் சேட்செலும்
மாமே காரந டாவி வந்தருள்
சீரார் பொற்புறு கந்தனைக் காக்கவே. 2

## உமை

வலஞ்செய் துளத்தருள் பெறுபரி பாகர்கள்
மாசறு பரசுக மருவக் கொடுத்தவள்
வணங்கு சிரத்தினர் மகபதி நான்முகன்
மால்பத முறவருள் வரத கரத்தினள்
வயங்கு வனக்கிளி புரிதவ மியாதுகொல்
வாவென மதுர நன்மொழியைப் பயிற்றுவள்
மகிழ்ந்த வனித்தொகை பெறுமொரு தாயென
வாழ்வருள் கருணைமெய் வடிவுற்ற சிற்பரை

இலங்கு விழிக்கயல் குழையணி காதினி
லேதமில் குவளையி னுலவப் படைத்தவள்
எழுந்த மதிக்கிணை யிதுவென மான்மத
மேர்பெற வெழுதிய திலகத்து நெற்றியள்
இருண்ட களிற்றிடை மதனலர் வாளிகள்
ஏயும தெனமல ரளகத்தில் வைத்தவள்
இலந்தை வனத்துறை வனமுலை நாயகி
ஈசுவரி பதமலர் இணையைப் பழிச்சுதும்

குலங்கொள் தயித்திய இருள்கெட வேலிடு
கோழியோர் வனமகனைப் பெருத்திடு குரும்பை
முலைத்துணை வனிதை புலோமசை கோமகள்
தழுவியணைச் சுகத்தனை குழைந்த கருத்துடன்
வழிபடு சீரியர் கூறிய முறைதரு வைப்பரப்பிய

முடியதில் முத்து முடியதைச் சூடி
முருகனே வந்து முகங்காட்டி
முழந்தா ளிட்டு முளரியாம் திருக்கை
முன்பதாய் மகிழ்ந்தே ஊன்றியுமே

வடிவழ கோடு வந்தருள் கூட்டி
வனப்புட னாடாய் செங்கீரை!
வளமிகு குமர கோயிலின் தலைவா
வந்துட னாடாய் செங்கீரை! 13

கன்னித் தமிழின் கவின்சார் நாஞ்சில்
கடல்தன் முத்தின் களிசிரிப்பும்,
காரிகை நல்லார் காட்டும் முறுவல்
கலந்தே கலக்கும் கடுஞ்சிரிப்பும்

நன்னீர்ப் பொய்கை நற்றா மரையின்
நளினச் சிரிப்பும் நாடெங்கும்
நறுமலர் முல்லை நகைக்கும் நகையும்
நதிபாய்ந் தார்க்கும் நற்சிரிப்பும்

பின்னல் ஒழித்த பெரிதாம் கருணைப்
பெரியார் சிந்தும் புன்சிரிப்பும்
பிறவுயிர் காத்துச் சிறப்பாய் வாழ்வோர்
பெய்யும் சிரிப்புங் கண்டிங்கே

கன்னல் சுவையே கருதும் அமுதே
களித்தா டிடுக செங்கீரை!
கதிதரு குமர கோயிற் குமரா
கவினா டிடுக செங்கீரை! 14

ஓங்குபு கழ்பெறும் ஒப்பறு பரங்கிரி
உறைபவ ஆடுக செங்கீரை
ஒருகனி யஃதினால் பழனியில் மேவிய
ஒளியே ஆடுக செங்கீரை

தீங்கறச் செந்திலின் திரைகட லமர்ந்திடு
தீரனே ஆடுக செங்கீரை
திருவுடை ஏரகம் ஒருபொரு ளுரைத்துமே
திகழ்ந்தவர் ஆடுக செங்கீரை



ஏங்கிடும் அடியவர் இதயமே குளிர்ந்திட
எழில்மிகு குன்றுகள் தோறமர்ந்தே
எமக்கினி தாகவே இன்னருள் செய்திடும்
இறைவனே ஆடுக செங்கீரை

தீங்குலைப் பழமுதிர் சோலையின் தலைவனே
திருவுடன் ஆடுக செங்கீரை!
திருப்பதிக் குமரகோ யிற்கும ரேசனே
தேவனே ஆடுக செங்கீரை! 15

**பன்னிருசீர் ஆசிரிய விருத்தம்**

அலைபாய்ந் தொளித்த அரக்கனையும்
அறுத்தாட் கொண்ட அதைநினைந்தோ,
அறுசீர் உருவாய்ச் சரவணத்தில்
அழகாய் ஆன திறங்குறித்தோ,

மலைச்சேய் அணைக்க ஒருருவாம்
மகனாய் ஒளிர்ந்த தனைநினைந்தோ
மதுரக் காதல் வள்ளிதனை
மணக்கக் கொண்ட உருக்கண்டோ,

தலைத்தாய்க் கணவன் சிரங்குட்டி
காவல் வைத்த துளங்கொண்டோ,
கறைக்கண் டனுமே களிகூர்ந்த
கருவாம் பிரணவப் பொருள்நினைந்தோ

இலைவேல் விடுத்தே இடர்களையும்
எம்மான் ஆடாய் செங்கீரை!
இணையில் லாத வேள்விமலை
இளையோய் ஆடாய் செங்கீரை! 16

புன்மை காட்டும் புல னைந்தைப்
புறத்தே தள்ளும் விறல்கொண்டோர்
பிணியாம் ஆறாம் உட்பகையைப்
பிரித்தே ஓட்டும் பெரியோர்கள்

இன்மை தனையே இலதாக்கும்
இணையில் தவத்தோர் அறுதொழிலோர்
இறைவன் புகழை எஞ்ஞான்றும்
ஏற்றித் திரியும் இதயத்தோர்

நன்மை அறவோர் இணக்கமதை
நாளும் போற்றும் நல்லோர்கள்
நலமாம் அடியார்த் தொண்டதையும்
நாதன் தொண்டும் புரிவோர்கள்

வன்மைப் பக்திப் பெருக்கோடு
வாழ்ந்தார் ஆடாய் செங்கீரை!
வளரும் குமர கோயிலுறை
வரதா ஆடாய் செங்கீரை! 17

யாமே செய்தோம்' என்போர்கள்
யாண்டும் உளரே, இந்நிலத்தில்
எமக்கோர் செயலும் உளதோகாண்
இதனை யறிய வல்லேமோ

தாமே செய்தாற் போலாக்கித்
தனித்தே நின்று கடவியெங்கள்
தலைநின் றார்க்கும் வினையொழித்துத்
தருவாய் அருளைத் தற்பரனே

பூமே லயனின் சிரங்குட்டிப்
பொறிகள் கலங்கச் செய்தவனே
புகழ்சார் பகழிக் கூத்தனிடர்
போக்கப் பிள்ளைத் தமிழ்கொண்டோய்

ஈமே வுஞ்செம் மாலையணி
இறையா டிடுக செங்கீரை!
இனிய குமர கோயிலுறை
இதமா டிடுக செங்கீரை! 18

அரனார் அரவம் அசைந்தாட
அம்பாள் உமையும் அகமகிழ
ஆனை முகத்தன் குதித்தாட
அமரர் துள்ளி இசைபாட

சரவ ணத்தாய் அறுவருமே
சண்மு கத்தைக் கண்டாட
சதங்கை தண்டைக் கழலுடனே
'சலசல' வென்றே ஆர்த்தாட



உரவார் சூரன் உயிர்கொண்ட
உறுவேல் துள்ளி உவந்தாட
உவகை கொண்டே மயிலாட
உயரே சேவற் கொடியாட

கரத்தை ஊன்றிக் கழுத்தசைத்துக்
கதியா டிடுக செங்கீரை!
கவினார் குமர கோயிலுறை
களிப்பா டிடுக செங்கீரை! 19

மானின் மருளல் குதிகண்டு
மறப்போர் வேடன் மயங்கிடவும்
மருங்கே வந்த மனையாளும்
''மான்தான் சிறப்போ, நானிலையோ''

தேனின் மொழியில் அவள்கூறித்
திரும்பி ஊடி நின்றிடவும்,
திகைத்த வேடன் இன்சொல்லால்
''தீர்வாய் கோபம்'' எனக்குழைய

மீனின் கண்ணாள் மனம்மாறி
மிடுக்காய்ச் சிரிப்பொன் றுதிர்த்திடவும்
மகிழ்ந்தே அவனும் துள்ளியதால்
மோதி வீழ்த்த தேனடையைக்

கானின் ஆறாய்த் தேன்பாய்தல்
கண்டா டிடுக செங்கீரை!
கவினார் குமர கோயிலுறை
களிப்பா டிடுக செங்கீரை! 20

## 3. தாலப் பருவம்

### பன்னிருசீர் ஆசிரிய விருத்தம்

சுழலுறுங் கோள்கள் பிணங்கியும் மோதியும்
சுழல்கே டாகாமே
சுற்றிலும் ஒலிக்கும் திரைகடல் எழுந்துமே
சூழா தேயுலகை

அழலென அவுணர் அவனியில் புகுந்துமே
அழிவைச் செய்யாமே
அருந்தவ சீலர் அவர்தவப் பயன்தனை
அடையா துழலாமே

முழவென ஆர்த்து முறையொரைத் தீவினை
மொய்த்தே அணுகாமே
முழுவிருள் மலமும் மூண்டெழுந் தறிவினை
மூடி மறைக்காமே

கழலொலி காட்டிக் காத்திடுங் கடம்பனே
தாலோ தாலேலோ!
தண்பொழில் குமர கோயிலின் குமரனே
தாலோ தாலேலோ! 21

ஒருமொழி யாமொரு பிரணவங் கேட்கவே
உம்பரும் உருகிநிற்க
உனதடி பணிந்துமே ஊனினை உருக்கியே
உயர்ந்தவர் சூழ்ந்தேற்ற

அருமறை ஓதியே அந்தணர் ஏற்றிட
அடியவர் இசைபாட
அலகறு அவுணரும் அரண்டுமே ஓடிட
அற்புத வேல்கண்டே

வருமொரு பண்ணொலி வாச்சியம் யாழ்வகை
வாழ்த்தொலி முழக்கிடவே
வள்ளிதெய் வானையை வகையுடன் கூட்டியே
வாகுடன் மயிலேறி

தருமொரு காட்சியாய் தவத்தினர் மாட்சியாய்
தாலல தாலேலோ!
தண்பொழில் குமரகோ யில்வதி குமரனே
தாலல தாலேலோ! 22

அழிதொழில் அவுணர் அமரரை வாட்டவும்
அயன்மால் முதலானோர்
அங்கயற் கண்ணி அம்பிகை பாகனை
அணுகி முறையிடவும்



விழிமலர் விரித்தே அறுமுகம் கொண்டுமே
விழிகள் தழல்கொட்ட
விரிவெளி காற்றும் வியன்மிகு கங்கையை
விரவி சரவணத்தே

எழில்மலர் மீதே இலங்கிட இனிதுடன்
எடுத்தே கார்த்திகையார்
இன்சுவை அமுதம் இட்டுமே வளர்த்திட
இணைந்த சண்முகனே

பொழில்கொழி குமார கோயிலின் செல்வனே
தாலோ தாலேலோ!
பொங்கருள் வழங்கும் எங்குலத் தெய்வமே
தாலோ தாலேலோ! 23

### பதினான்குசீர் ஆசிரியர் விருத்தம்

அருள்சார் குமர குருபரன் ஆனவர்
ஐந்து வயதை அடைந்திடலும்
அம்மா' என்னும் அருமொழி இன்றியே
அலைவாய் அமர்ந்தே உன்பாதம்

தெருள்சார் மனத்தில் திடமதைக் கொண்டுமே
தியானம் பெற்றோ ருடன்செய்ய
தீய்த்தாய் வினையே திருவருள் பாய்த்துமே
திருவார் கவியும் கொடுத்தனையே;

பொருள்சார் நின்தாள் புகழ்ந்துமே பாடிய
புகழ்சார் அருண கிரிதனக்கே
பொன்றாப் புலவன் வில்லியை வென்றிடப்
பெரும்பே றீந்தாய்; இன்றைக்கும்

இருள்சார் உள்ளம் இலங்கிட அருள்மழை
இறைத்தே நிறைவாய் தாலேலோ!
எழிலார் குமர கோயிலின் அழகனே
எந்தாய்! தாலோ தாலேலோ! 24

அகிலம் படைத்த அரனார் அவர்தம்
அருகில் அமரும் அம்பிகையும்
அருமைப் பெற்றோர் எனிலோ அதற்கோர்
அளவுப் பெருமை உண்டோசொல்?

முகிலை அனையான் மூன்றாம் உலகை
மூன்றாம் அடியால் அளந்தவனாம்
முறைமை மாமன் முறுவல் முகிழ்க்க
முந்துங் குறைகள் உண்டாமோ?

உகிரைப் பவளம் எனக்கொண் டேபுள்
உடனே எடுக்கப் பாய்ந்திடவும்
உள்ளந் துடித்தே ஓல மிடவும்
உவகை இளைஞர் சிரித்தார்க்க

சகித்தல் இழந்த சவியார் பெண்கள்
சாரும் நாஞ்சில் நாட்டொளிரும்
சந்தக் குமர கோயி லுறையும்
சத்தா தாலோ தாலேலோ! 25

திரைகட லுதித்த திருமகள் அழகது
திருவே உனக்கே உரித்தாகும்
திசைமுகன் நாவில் உறைந்திடும் நாமகள்
தெய்வக் கலைகள் உனதன்றோ

விரைவுடன் காக்கும் விறல்மிகு கண்ணனின்
வீரம் விளங்கும் நின்னிடமே
விமலவன் பாகம் விரவிய உமையவள்
விரும்பும் அருளே நீயன்றோ

உரையுடன் மனத்தை உருவியே கடந்திடும்
உருவொன் றில்லா உரவோனே
உணர்ந்திடும் அடியார் உளத்தில் ஒளிர்ந்திடும்
உறுவேல் முருகப் பெருமானே

பரையுடன் பரமன் பார்த்து மகிழ்ந்திடு
பவனே பாலா தாலேலோ!
பருவரைக் குமர கோயிலின் குமரனே
பரனே தாலோ தாலேலோ! 26

மணமிகு சாந்தின் மரமதில் செய்திடு
மனிதப் பொம்மைத் தனையேந்தி
மனங்கவர் நறுநீர் மகிழ்ந்துமே ஆட்டியே
மதியால் நீரைத் தான்துடைத்துக்



குணமிகு அகிலின் குவிபுகை காட்டியே
கோதும் முடியில் அணிபுனைந்து
குறுகிய பிறையாம் குளிர்நுத லதனிலே
குங்குமத் திலகம் தீட்டியதன்

உணக்கறு காயம் உடையினை அணிந்துமே
உணவாய்ச் செழுந்தேன் ஊட்டியபின்
உவரியின் முத்தின் உறுபணித் தொட்டிலில்
உறங்க வைத்தே உனைப்பாடும்

கணக்கறு சிறுமிகள் களித்திடுங் குமரியில்
ஈவினாய் வந்தோய் தாலேலோ!
கழிமல மறுக்கும் குமரகோ யிற்குக
கந்தா தாலோ தாலேலோ! 27

**பன்னிருசீர் ஆசிரிய விருத்தம்**

மணிக்குள் ஒளியே மாமருந்தே
மாயோன் மருகா தாலேலோ
மறைகள் போற்றும் மயிலோனே
மலைவைத் தீர்ப்போய் தாலேலோ

பிணிக்கும் பாசம் அறுத்தெறியும்
பிறப்பில் குமரா தாலேலோ
பிடியைப் பிடித்த பெரியோனே
பிரணவ முரைத்தோய் தாலேலோ

அணிவேல் குமரா தாலேலோ
அழகின் அழகே தாலேலோ
ஆறு முகனே தாலேலோ
அமுதச் சுவையே தாலேலோ

பணிவார் உள்ளக் கோயிலன்றிப்
பாங்கார் குமர கோயிலுறை
பரமன் உருவே தாலேலோ
பாலா குமரா தாலேலோ! 28

தெளிந்த மனத்துத் திருத்தொண்டர்
திருப்பாட் டோதிக் களித்தாடி
தெய்வத் தமிழின் இசையினிலே
தேவா ரத்தைத் தினம்பாடிக்

குளிர்ந்த அன்புச் சாற்றினிலே
குன்றா ஆர்வ அமுதிட்டுக்
குணங்கள் தம்மைக் கலந்திட்டுக்
குறியாய்ப் படைத்தே உனைஎண்ண

ஒளிர்ந்த மனத்தர் உவந்திடவே
ஒளியாம் ஞான விளக்கீந்தே
உலகில் காத்தும் உலவாத
உண்மைப் பதமும் தந்தருளும்

துளிர்ந்த கருணைப் பெருங்கடலே
துணைவா தாலோ தாலேலோ
துதிசெய்க் குமர கோயிலுறை
தூயா தாலோ தாலேலோ! 29

பயனொன் றறியாப் பல்லாசைப்
பாழுங் குழியில் வீழாமல்
பக்தர் எமையே தடுத்தாண்டு
பாடிப் பரவ அருள்காட்டி

அயனும் மாலும் அறியாத
அமுத இன்பம் எமக்கீந்தே
அடியேம் அகமே வந்தொளிரும்
அன்பே அரசே தாலேலோ

நயனாம் நாஞ்சில் நாடென்னும்
நஞ்சை நாட்டை நாடிவந்து
நல்லோர் இதயம் நிலைகொண்டும்
நலிந்தோர் உய்ய நலம்தந்தும்

வியனார் வேளி மலையமர்ந்த
வேலா யுதனே தாலேலோ!
வெகுளும் அசுரர் விழச்செய்யும்
வீரா தாலோ தாலேலோ! 30

## 4. சப்பாணிப் பருவம்

சீரார் சிவனார் முகமைந்தும்
சிவையின் முகமும் சேர்த்தனையோ
சிறப்புற் றோங்கும் திசையாறைச்
சேர்த்தே முகமாய்க் கொண்டனையோ



பாரார் பரவும் படைவீட்டைப்
பளிங்கு முகமாய்க் காட்டினையோ
பக்தர் பகுத்த மதமாறும்
பரமா ஆறு முகமாச்சோ

தேரார் அறியா ஆதாரம்
தெரிய ஆறாய்க் கொண்டனையோ
தெவிட்டா யின்ப முழுமதியே
தேனே பாலே தெள்ளமுதே

ஆரார் அடிமை அவர்க்காகும்
அன்பே கொட்டாய் சப்பாணி!
ஆரல் அடர்கு மரகோயில்
அரசே கொட்டாய் சப்பாணி. 31

மலையை வளைத்த மறையோனை
மதனை எரித்த நுதலோனை
மறிமான் கையில் உடையோனை
மதியை அணிந்த சடையோனை

அலைசெய் ஆற்றைச் சுமப்போனை
அரையில் புலித்தோல் புனைந்தோனை
அரவின் அலங்கல் அணிந்தோனை
அணங்கை அரையில் பதித்தோனைத்

தலைமைப் பூணும் தற்பரனைத்
தக்கன் தலையைக் கொய்தோனைத்
தரணி போற்றுந் தாயவனைத்
தந்தை யாகக் கொண்டவனே

குலைசாய் குமர கோயிலனே
கொட்டி யருளாய் சப்பாணி!
குறைதீர் வேளி மலைக்கரசே
கொட்டி யருளாய் சப்பாணி! 32

விதியன் வெதிரச் சிரங்குட்டும்
விறல்கை யதனால், விரையுடனே
வீர நிசிதர் வெருண்டோட
விடும்வேல் கையால், வேழமுகன்

துதிக்கை பற்றி ஊசலெனத்
துள்ளி ஆடும் சிறுகையால்,
தூய அன்பர் துயர்யாவும்
துடைத்துக் காக்கும் திருக்கையால்,

கதியை யிழந்த அருணகிரி
களிக்கக் காத்த திருக்கரத்தால்
கவிவாழ் ஒளவைப் பசிதீரக்
கனியை ஈந்த கரத்தாலே

கொதியார் உள்ளம் குடிகொள்வோய்
கொட்டி யருளாய் சப்பாணி
குறைதீர் குமர கோயிலனே
கொட்டி யருளாய் சப்பாணி! 33

**பதினான்குசீர் ஆசிரிய விருத்தம்**

அமராப தியிழந்த ஆயிரங் கண்ணவன்
அயிராணி தன்னைப் பெற்றே
அகமது பாய்ந்தாட அங்கையைக் கொட்டிட
அசுரர்கள் அச்சங் கொட்ட

தமராயு னைக்கொண்ட தவசீலர் தம்மனத்
தண்ணீரை யுனக்குக் கொட்ட
தண்குல வும்கண்ணில் தண்ணருள் கொட்டிடத்
தான்பல்லி யங்கள் கொட்ட

விமலனே யுனதன்பர் விழியிலே நீர்கொட்ட
விழுமழை நீரைக் கொட்ட
விம்மித மாகியே வேணாட்டு வேதியர்
விரைவுடன் மறைகள் கொட்ட

சமனிலாக் குமரகோ யில்தனின் கொற்றவா
சப்பாணி கொட்டி யருளே!
சற்குண சீலர்கள் அற்புதத் தெய்வமே
சப்பாணி கொட்டி யருளே! 34

மடக்கொடி யாளொரு மான்வள்ளி தெய்வானை
மாதர்கள் மறுகி டாமே
மாந்திடும் அடியவர் மனமது நோவாதே
மணிமாலை துவண்டி டாமே



தடக்கையில் பிடித்திட்ட தனிவேலும் தவறியே
தாழவே வீழ்ந்தி டாமே
தளிர்மேனி அப்பிய திருநீறு வேர்வையில்
தாக்கிய ழிந்தி டாமே

இடரறு திருப்புகழ் இன்னிசை கேட்கின்ற
இருசெவிக் குண்ட லங்கள்
இரைச்சலுடன் மோதி இற்றிடா வண்ணமே
இருகைகள் சிவந்தி டாமே

சுடர்விடு ஞானகு மாரகோ யிற்குக
சப்பாணி கொட்டி யருளே!
சற்குண சீலர்கள் அற்புதத் தெய்வமே
சப்பாணி கொட்டி யருளே! 35

கேட்டவர்க் கேவரம் கேட்டவா றேநல்கும்
கெழுமிய கருணைக் கந்தா
கிடைத்தவுன் னருளாலே கீழ்மையை வீழ்த்திட்டுக்
கிளரொளி ஞானம் பெற்றே

நாட்டவர் நன்மைக்கு நாளுமு ழைத்தனர்
நன்னெறி நாட்டு 'கின்றார்
நாடியே மக்களும் நல்வழி கொண்டனர்
நாசத்தை விட்டு வந்தார்

கூட்டமாய் மொய்த்துமே கும்பிட்டுக் கூத்தாடிக்
குரவையோ டாடிப் பாடிக்
குரைகழல் சேவித்தார் குமரனைக் கூவிட்டார்
குறையாத அன்பைக் கண்டே

கோட்டம தறுத்திடும் குமரகோ யிற்குக
சப்பாணி கொட்டி யருளே!
கொண்டல்த வழ்கின்ற குமரிநன் னாட்டினாய்
சப்பாணி கொட்டி யருளே! 36

ஈசனும் உலகினில் இருப்பதும் உண்மையோ
எந்நிறம் கொண்டு நிற்பன்?
என்றுமே கேட்டிடும் இறுகிய மனத்தரை
இன்னுரை கூறிப் பின்பு

தேசனும் உன்னுடைத் தெள்மனத் துள்ளனன்
தேடியே காண்நீ என்க
திடுக்குற அவர்மனம் தேடவே உன்னுடைத்
திருவடி யார்சி ரித்தார்,

வாசனை மாலைகள் வாங்கிடுந் தோளினாய்
வருத்தந்து டைக்கும் வேலா
வளமயில் ஏறியே வந்திடும் வள்ளலே
வள்ளியை ஆளுங் கந்தா

மாசதை மாய்த்திடும் குமரகோ யிற்குக
சப்பாணி கொட்டி யருளே!
மாமழை சூழ்கின்ற மலைவேளி வந்தவா
சப்பாணி கொட்டி யருளே! 37

**பன்னிருசீர் ஆசிரிய விருத்தம்**

திருப்பரங் குன்றமும் திருநகர்ச் செந்திலும்
திருவளர் பழனிமலை
தீவினை யகற்றிடும் திருத்தணித் தலமதும்
திருப்பழ முதிர்சோலை

அருவினை அழித்திடும் அரனிடம் பிரணவம்
அருளிய திருத்தலமும்
அணிமலை யாம்திரு மலையிலும் பிறவுடன்
அற்புத வெள்ளிமலை

ஒருபுனல் சரவணம் ஓங்கிய உளத்திலும்
உயர்ந்தொளிர் கந்தகிரி
ஒளிவளர் சிவநெறி குமரகோ யில்தனை
உறைவிட மாய்க்கொண்டு

குருபர னாகவே குவலயம் ஆள்பவ
கொட்டுக சப்பாணி!
குரைகடல் முத்தெறி குமரியின் குழவியே
கொட்டுக சப்பாணி! 38

செந்தளிர் மேனியள் சீறடி நொந்திட
சேடிய ருடன் கூடி
செங்கம லம்நிறை செழிகுள மிறங்கியே
செறிமதி முகந்தாழ்த்தி



சிந்தனை யின்றியே சென்றுமே காட்டிடச்
சிறுகயல் மீன்கண்டு
சிறியவன் பதறவும் சேடிகை கொட்டியே
செவ்விழி நிழல்என்க

சந்தமி குந்திடு சற்குண வதியவள்
'சரவண' வெனக்கூறி
சலசல என்றிட சலமதைக் குடைந்திடும்
சவிமிகு நாஞ்சிலதின்

கொந்தும ணங்கமழ் குமரகோ யிற்குக
கொட்டுக சப்பாணி
குரைகடல் முத்தெறி குமரியின் குழவியே
கொட்டுக சப்பாணி! 39

முத்தொடு பவளம் முதலாம் ஒளிமிகு
முழுமணிப் பொருள்யாவும்
முனைகடல் பெற்றும் முழுதும் நிறைந்திடா
மூடரைப் போலெழுந்து

கொத்தொடு கொத்தாய்க் கொழித்தே யிலங்கிடும்
கோதறு விண்மீனைக்
குதியெனக் குதித்துக் கொள்ளத் திரையது
குரைக்கரம் நீட்டிடினும்

சித்தம திரங்கி சீராய் அலைக்கரம்
சிறைப்படா நிலை கண்டு
சீறியெ ழும்ப சிறுகல் மோதியே
சிதறியே சாய்ந்துவிடும்

கத்துக டலுடை கன்னி நாட்டவா
கொட்டுக சப்பாணி!
கார்வதி குமர கோயில் கந்தனே
கொட்டுக சப்பாணி! 40

## 5. முத்தப் பருவம்

**பதினான்குசீர் ஆசிரிய விருத்தம்**

ஆடிப் பாடி அன்பர் கையை
அகங்கு ளிர்ந்து தட்டவே

அறுவர் அன்னை அகம லர்ந்தே
அங்கண் நீரைக் கொட்டவே

நாடி கோளம் நரம்பு யாவும்
நன்கு சிலிர்ப்புக் கொள்ளவே
நான்கு மறையும் நாலு நிலமும்
நாவ லிக்கச் சொல்லவே

சூடிக் கொண்ட கடம்பில் மொய்க்கும்
சுரும்பு சுற்றி ஒலிக்கவே
சுத்த நீறு சுடரை வீசி
சூழ யின்பங் கலிக்கவே

கூடி னோரின் குறைத விர்க்கும்
குமர் முத்தந் தருகவே!
குருகு மொய்க்கும் குமர கோயில்
குழந்தை முத்தந் தருகவே! 41

சங்கு முத்தம் சிப்பி முத்தம்
சாரும் செந்நெல் முத்தமும்
சண்டி யானைத் தந்த முத்தம்
சீறும் நாக முத்தமும்

இங்கு மூங்கில் முத்தம் எதற்கும்
இனிது விலையுங் கூறலாம்;
இன்ப மேக வண்ணன் தங்கை
ஈன்றெ டுத்த செல்வமே

பொங்கு மன்பில் நீவ ழங்கும்
பொற்பு முத்தந் தனக்குமே
புவியில் கூற விலையும் ஏது?
புன்மைச் சொல்லும் ஆகுமோ?

கொங்கு மாலைக் கொண்ட செல்வக்
குமர முத்தம் தருகவே!
குருகு மொய்க்கும் குமர கோயில்
குழந்தை முத்தம் தருகவே! 42

சுருதி போற்றும் சுப்ர மண்யச்
சுடரே முத்தம் தருகவே



சுத்த ஞான சிவனார் பெற்ற
சேயே முத்தம் தருகவே

கருதும் போது காட்சி நல்கும்
கந்தா முத்தம் தருகவே
கலியு கத்தின் கடவுள் நீயே
களிப்பு முத்தந் தருகவே

வருத்தும் ஆசை வசையொ ழிக்கும்
வள்ளல் முத்தம் தருகவே
வளருந் தொண்டு தனையு கக்கும்
வடிவ முத்தந் தருகவே

குருளை மாதர் இருவர் கொண்ட
குமரா முத்தம் தருகவே!
குருகு மொய்க்கும் குமர கோயில்
குழந்தை முத்தம் தருகவே! 43

**பன்னிருசீர் ஆசிரிய விருத்தம்**

பூவின் நறவில் ஈகுளிக்கப்
புனிதத் தீர்த்தம் புகுந்தாடிப்
புகழும் அடியார் குழாம்குளிக்கப்
புதிய சுவைசார் பழச்சாற்றில்

தாவிப் பாயும் அணில்குளிக்கத்
தாயிற் சிறந்த உன்னருளாம்
ததும்புங் கடலில் தவமக்கள்
தாவித் தாவிக் குளித்தனரே

ஆவி யனைத்தும் ஒளித்து நின்றே
அதனைக் கடவும் அற்புதனே
அடியார் அகமே அமர்ந்தங்கே
அற்பு தங்கள் புரிவோனே

வாவி செழிக்கும் வளநாஞ்சில்
வனப்பே முத்தந் தந்தருளே!
வளரும் குமர கோயிலுறை
வடிவே முத்தந் தந்தருளே! 44

சிரித்துச் சிலிர்க்கும் செழும்பழனச்
செந்நெல்கதிரை அறுத்தெடுத்துச்
சிறந்த எருது தமைப்பூட்டிச்
சிறுகச் சிறுகப் போரடித்தே

அரித்தே அணியாய்ப் பதர்வீசி
அசலம் அன்ன மணிகுவித்தே
அவனி வாழ அறஞ்செய்யும்
அழகுக் குமரி நாட்டினரின்

உரித்தே யாகும் ஒண்தலைவா
உலகோர் நாடும் உத்தமனே
ஒன்றாம் 'ஓமின்' உட்பொருளை
உடையார் உவக்கத் திருச்செவியில்

விரித்தே விளக்கும் திருவாயால்
விரும்பி முத்தம் தந்தருளே!
வியனார் குமர கோயிலுறை
விமலா முத்தந் தந்தருளே! 45

தவத்தில் மானும் பெண்மகவைத்
தனியாய்க் காட்டில் ஈன்றிடவும்
தகைசார் வேடன் அதைக்கொண்டு
தக்க முறையில் வள்ளியென

உவத்தல் உறவே உருவாக்கி
ஒருநாள் தினையைக் காப்பிக்க
உயர்ந்த மரமாய் வேடனுமாய்
உணக்குச் சடலக் கிழவனுமாய்

தவனங் கொண்டே தளிர்வள்ளி
தனையே கைபற் றிட்டாண்ட
தனிவேற் குமரா தடுத்தாளும்
தவமே தேவே தழல்வண்ணா

புவனம் போற்றும் பொற்போனே
புகழே முத்தம் தந்தருளே!
புனிதக் குமர கோயிலுறை
புலவா முத்தம் தந்தருளே! 46



நெஞ்சு மகிழ பூந்துணரில்
நெடிதாம் பண்ணை வண்டிசைக்க
நின்றே கேட்டுக் கவிமயங்கும்
நிறையக் கனியின் சாறருந்தி

கொஞ்சுங் கிளிகள் மதிமயங்கும்;
குலவுந் தென்றல் குளிரூட்டும்
கோதை நல்லார் குமிண்சிரிப்பில்
குணத்தில் மயங்கும் காளையர்கள்;

தஞ்சம் உனையே தான்கொண்ட
தவத்தார் தமிழில் நீமயங்க
தண்ணார் முருகா உன்சிரிப்பில்
தவித்து மயக்கம் கொண்டேன்யான்

மஞ்சு தவழும் மலையோனே
மழவா முத்தம் தந்தருளே!
மகிழுங் குமர கோயிலுறை
மைந்தா முத்தம் தந்தருளே! 47

**பதினான்குசீர் ஆசிரிய விருத்தம்**

அன்பினுக் கரசியர் அணி நடைக் கோபியர்
ஆடைகள் கவர்ந்தும் அருள்தந்தும்;
ஆயரின் பாடியில் ஆச்சியம் தயிரதை
அள்ளியே திருடி அமுதுண்டும்;

துன்பினைப் புரிந்திடத் துகள்மிகு கம்சனும்
தொடங்கிய சூழ்ச்சி வென்றழித்து
தூள்பட இருமரம் உரலதை இழுத்துடே
தூக்கிய குன்றால் ஊர்காத்தே

என்பினை ஒடித்துமே இரணியன் பட்டிட
இளஞ்சிறு வனையும் எடுத்தாண்ட
இருமுகில் வண்ணனாம் இடரறு கண்ணனும்
எழிலுறக் கொஞ்சும் மருகோனே

வன்பினை யுடையிலை வேல்விடு வீரனே
வந்துமே முத்தம் தந்தருளே!
வளமிகு குமரகோ யிற்கும ரேசனே
வனப்புடன் முத்தம் தந்தருளே! 48

அழகினில் இமயம் ஐம்மலர் மதனனும்
ஆயிரங் கோடி சேர்ந்தாலும்
அத்தனே உன்தாள் அழகினை ஒப்பிட
அருகதை அவர்கள் ஆவாரோ?

குழல்மொழி அரம்பை குழுமியே நடம்புரி
கோநகர் அமரா பதிபோலே
கோடியாம் அமரா பதிகளைக் கூட்டினும்
குமரனே உன்கோ யிற்காமோ?

குழகனே அழகா குமரனே எனவுளம்
குழைந்துமே குளறிக் கூறிடிலோ
கொடுப்பதுன் இன்பம் கெடுப்பதெம் துன்பமே
குகபவ யிதுவுன் குணமன்றோ?

பழமுதிர் சோலை பல்கிய குமரியின்
பாலனே முத்தம் தந்தருளே!
பவமறு குமர கோயிலின் பரமனே
பசியற முத்தம் தந்தருளே! 49

மாங்கனி வாழை மணமிகு பலாவுடன்
மனங்கவர் மதுரப் பழவகைகள்
மண்டிடும் பொழிலில் மலையெனுங் கரியுமே
மரக்கிளை யொடிக்கக் கரம்நீட்ட

தூங்கலைக் கலைக்கா துணையுடைக் குரங்குமே
துதிக்கையை மலைப்பாம் பெனவெண்ணித்
தொங்கிடுங் கனியைத் துணிவுடன் பறித்துமே
தும்பியைத் தொடராய் எறிந்திடவும்

வாங்கியே பிடிக்குத் தீங்கனி ஈந்துமே
வயிற்றினை நிரப்பும்வள நாடாம்
வயல்மிகு குமரி வளமிகு நாட்டுடை
வரமருள் குமர கோயிலிலே

தீங்கொழிப் போனாய்த் திருக்குடி கொண்டவ
துவரிதழ் முத்தந் தந்தருளே!
திரைகட லொழித்த தீரனை வென்றவா
திருவருள் முத்தந் தந்தருளே! 50



## 6. வருகைப் பருவம்

### பன்னிருசீர் ஆசிரிய விருத்தம்

கந்தா வருக கார்த்திகேயக்
கடவுள் வருக கவின்வள்ளிக்
காந்தா வருக காங்கேயக்
கடம்பா வருக கற்பகமாம்

எந்தாய் வருக எல்லோர்க்கும்
இறைவா வருக இதயத்தின்
இருப்பே வருக யானைமுகன்
இளவல் வருக எறிபவளச்

சந்தா வருக சேந்தனெனும்
செவ்வேள் வருக செவ்விழியாம்
சிவனார் விழியில் சிவக்கொழுந்தாய்
சண்முக னாகச் சரவணத்தில்

வந்தாய் வருக வாகுலேய
வரனே வருக வருகவே!
வளஞ்சேர் குமர கோயிலுறை
வாழ்வே வருக வருகவே! 51

மண்ணை பொன்னை மற்றுள்ள
மாயைப் பொருளை மதித்தேயான்
மயக்கங் கொண்டு மலைந்திட்டேன்
மாளாத் துயரில் உலைந்திட்டேன்

அண்ணை யாகி அகக்குற்றம்
அனைத்துஞ் செய்தே அலைந்ததனால்
அத்தா உனையே அடிபரவும்
அகமே யில்லா விலங்கானேன்

உண்மை யின்றே உணர்ந்தலறி
உருகி உள்ளங் கசிந்திட்டேன்
உயிரும் உடலும் உனக்காக்கி
உயர்த்தும் பக்திப் பசிகொண்டேன்

தண்மைத் தருஆர் புனல்நாஞ்சில்
தலைவா வருக வருகவே!

தவம்சேர் குமார கோயிலுறை
தமிழே வருக வருகவே! 52

இண்டை தொடுத்து முடிபுனைய
இலங்கும் திலகம் நுதலணிய
ஈர்க்கும் ஒளிசார் குழைகளதை
இதமாய்க் காதில் இணைத்தணிய

அண்டை அயலார் அகமகிழ
அடுக்காய்க் கழுத்தில் முத்தணிகள்
அரையில் கிண்கிண் அணிஞாணும்
அரிய பட்டும் அணிந்துவிட

தண்டைச் சிலம்பு சதங்கைதான்
தஞ்சம் ஈயும் தாளணிய
தாயன் பொழுக உனைவாரித்
தாளைக் கண்ணில் அணைத்திடவே

பண்டைப் பொருட்கும் பழையோனே
பரமா வருக வந்தருளே!
பதியாம் குமர கோயிலுறை
பவனே வருக வந்தருளே! 53

அழைக்குங் குரலுக்(கு) அசையாயேல்
அன்பே! அணிசேர் திருமேனி
அழுக்கைப் போக்க நீராட்டேன்
அழகாய் முகத்தைத் திருத்திவிடேன்

இழைகள் பூட்ட இசைந்துவிடேன்
இனிதாய் நறுஞ்சாந் தணியேனே
இலங்கும் திலகம் இடமாட்டேன்
இருகை கொட்டிக் காட்டுகிலேன்

குழைத்த அமுதைக் குளிர்ந்தூட்டிக்
குரவைக் கூத்தும் இனியாடேன்
குரலை நீட்டி உனையழையேன்
குடும்பம் பாரேன் குறைசொல்வேன்

புழைக்கை முகவற் கிளையோனே
புகழே வருக வந்தருளே!



புனிதக் குமர கோயிலுறை
புதல்வா வருக வந்தருளே! 54

**பதினான்குசீர் ஆசிரிய விருத்தம்**

ஆவல் மோதவொரு யானை நீர்மடுவில்
அள்ளி நீரினைப் பருகிட
ஆங்கு வந்தவொரு ஆற்றல் முதலையதும்
அடியைப் பற்றவும் அஃதுமே

காவல் கொள்ளுமொரு கடவுள் பேரினையே
கடுகி அழைக்கவும் கண்ணனும்
கருட வாகனத்தில் ககனம் தோன்றிஅதைக்
காத்த வண்ணனும், அமுதினைத்

தேவர் பெற்றிடவே தீய சூரருளும்
திசைதி ருப்பிய மாலவன்
தேடி வந்தேதன் திரண்ட தோளினிலே
தாங்கிக் கொஞ்சிடும் வேலவா

சேவற் கொடியுடைய செம்மை வண்ணனேநீ
சிரித்துச் சீருற வருகவே!
சீர்மை கொண்டிலங்கு குமர கோயிலனே
சிரித்து வருகநீ வருகவே! 55

ஆய கலைகளறு பத்து நான்கினையும்
ஆளும் வாணியின் வாழ்த்தொலி
ஆதி சிவனுடைய அருமை நேசனொரு
அகத்தி யமுனிவர் ஏற்றொலி

சீயம் போலவரு சினக்கும் வில்லியுடை
சிறப்பில் ஆணவம் அடக்கியே
சிறந்த பண்பினொடு சிறுமை மன்னித்த
சீர்மை அருணகிரிப் புகழொலி

நேயம் கொண்டுமேநீ நெடிது கேட்பதனால்
நேசன் என்னுடைப் பாட்டொலி
நினது காதினிலே நில்லா தொழிந்ததுவோ
நீங்கா அன்பினைப் பழிப்பரோ?

தீய யாவையுமே தீய்க்குந் தூயவனே
திருவ ளர்குகா வருகவே!
திரைக டற்குமரிக் குமர கோயிலனே
திரும்பி வருகநீ வருகவே! 56

இடரில் மூழ்கியென் இதயந் திணறுற
இறைவா இன்னமும் பொறுப்பையோ?
இரங்கி இரங்கியே இதனைக் கூறினும்
இரக்கங் கொண்டிடா திருப்பையோ?

அடரும் அன்புடன் அடியைப் பற்றியே
அழைக்க அப்புறம் செல்வையோ?
அருளின் கடலென அன்பர் அறைவதும்
ஆகி விடுவதோ பொய்யதாய்!

தொடரும் வெவ்வினை தொலைத்து நீயெனைத்
தொழும்பன் ஆக்குதல் முறையலோ!
தொண்டர் குழுவினில் அண்டச் செய்யவே
தூண்டிக் காப்பதுன் கடனலோ!

நடனம் பயில்தனி நாதன் பயந்திடு
நளினக் குமரனே வருகவே!
நாஞ்சில் குன்றதின் குமர கோயிலை
நாடுங் கந்தனே வருகவே! 57

**பன்னிருசீர் ஆசிரிய விருத்தம்**

பணியணைத் துயிலும் பரமனின் திருக்கண்
பாய்நீர் அதில்தோன்றி
பதியென வரநீ பலயுகம் அவர்கள்
பரவித் தவமியற்ற

மணியென ஒளிரும் தனியுருக் காட்டி
மண்ணும் விண்ணிலுமாய்
மானிடர் தேவர் மகளதாய் வளர்க
மணந்தே அருள்வனென

அணியிழை இவர்கள் அவ்விதம் வள்ளி
அழகார் தேவானை
ஆகியே வளர அவர்தமைக் கொண்டே
அருளும் முருகோனே!



தணிவிலா ஆர்வத் தவத்தினர் குருவே
தமிழே வந்தருளே!
தனிநகர்க் குமர கோயிலில் குடிகொள்
தலைவா வந்தருளே! 58

பகைநிசி சரர்கள் பதறிட வேல்விடும்
பாலா வந்தருளே!
பயமதை யொழித்தே பக்தரைக் காத்திடும்
பரமா வந்தருளே!

நகைபல புனைய நாடியே வந்தனன்
நயந்தே வந்தருளே!
நறுமலர் சூட்ட நாடுசாந் தணிந்திட
நலமே வந்தருளே!

வகைவகைக் கனிகள் வாங்கியே வந்தனன்
வடிவே வந்தருளே!
வளத்தினை தேனும் வனப்புடன் பிசைந்தனன்
வாங்க வந்தருளே!

நகைத்துமே நாளும் நான்வள மெய்திட
நண்பா வந்தருளே!
நடலைகள் துடைக்கும் நன்மலை வேளியின்
நாதா வந்தருளே! 59

முறுவலை நெளித்திடும் மூரியி தழ்ப்பெண்
முகத்தைக் கண்டுமதி
மூடிய மேகமாம் போர்வையி லொளிக்கும்
முன்காண் குறை காக்க

உறுமணித் தோட்டினை உற்றுமே நோக்கி
உறுத்தும் கண்களதை
உடனடி மூடியும் திறந்துமே மூடும்
உயர்மீன் உழன்றழிந்தே

நறுங்களி போலவர் நன்மொழி கேட்டே
நாணும் அஞ்சுகமே
நடையதை மயிலதும் விழியதை மானும்
நயப்பாய்ப் பயில் வண்ணம்

சிறுநடைச் செவ்வியர் செறிந்திடும் நாஞ்சில்
செல்வா வந்தருளே!
சிறப்புடைக் குமர கோயில்வதி செவ்வேள்
சிவமே வந்தருளே! 60

## 7. அம்புலிப் பருவம்

### சாமம்

#### பதினான்குசீர் ஆசிரிய விருத்தம்

பேரிருள் நீக்குவை பாதியு லகத்தினில்
பெய்யருள் இவன்ம னத்தின்
பேயிருள் ஆணவப் பேரிருள் மாற்றுவன்
பெருவெளி பரவி நின்றே,

பாரினைச் சுற்றியே பவனியே வந்துநீ
பட்டொளி வீசி நிற்பை,
படைத்தநல் அண்டங்கள் பாய்ந்திவன் நொடியிலே
பவனிவந் திட்ட மேதை;

வாரிவ ழுங்கியே வளரமு தக்கதிர்
வாழ்த்தினைப் பெற்று யர்வை,
வாரியெ னத்திரு வருளமு தீந்திவன்
வானுற ஓங்கி நிற்பன்;

சீரியர் போற்றிடும் சிறப்புள குகனுடன்
அம்புலீ ஆட வாவே!
செல்லினம் தவழ்மலை வேளியின் செல்வனோ(டு)
அம்புலீ ஆட வாவே! 61

உலகினர் ஏற்றுவர் உன்னொளி போற்றியே
உலப்பிலா ஞான ஒளியாம்
உளமதன் பேரொளி ஒருதனி முருகனை
உள்கலார் உண்டோ சொல்வாய்;

புலமையோர் போற்றிடும பேற்றினைக் கொண்டனை,
பெரியவன் இவன்த னைத்தான்
பேசிடார் உள்ளரோ? பெருமலை ஏறிநீ
பெருமையில் மிளிர்ந்து நிற்பை,



குலவுவ லிக்கொளும் குமரசெவ் வேளிவன்
குன்றினில் ஓங்கு வன்காண்
கொள்குவை பலமனை கொள்ளுவன் இவனுமே
கொண்டுநீ மனத்தில் இஃதை

அலகிலாப் பேரொளி அழகனாம் இவனுடன்
அம்புலீ ஆட வாவே!
அருள்தரு வேளிம லைக்குக னோடுநீ
அம்புலீ ஆட வாவே! 62

அழகொளி முகமது அடைந்தனை, இவனுமே
அறுமுக அமுதன் கண்டாய்;
அரனுடைச் சிரந்தனில் அமர்ந்துமே இலங்குவை,
அமலனாம் இவனோ என்னில்

கழலொலி கொட்டிடக் கறைமிடற் றண்ணலின்
கவினுடை மேனி யெங்கும்
கறங்கியே வருவனே கண்டிடு தினந்தினம்
கந்தனின் பெருமை யெல்லாம்;

அழல்நிற மாம்இவன் அம்புலீ உனையுமே
ஆகியே விஞ்சி நின்றான்
அரனிடம் வந்தநீ அவனிடம் வந்தயெம்
அப்பனை அண்டி வந்தே

அழகுறக் கூடியே அவன்புகழ் பாடியே
அம்புலீ ஆட வாவே!
அருள்தரு வேளிம லைக்குக னோடுநீ
அம்புலீ ஆட வாவே! 63

### பேதம்

#### பன்னிருசீர் ஆசிரிய விருத்தம்

வருந்தி அழைத்தால் எரிவாயோ?
வடிவேல் பெருமை அறிவாயோ?
வட்ட நிலவே இவன்பெருமை
வடித்தால் வார்த்தைக் கேபெருமை!

இருந்தே ஒளிர்வை இரவில்நீ
எங்கும் ஒளிர்வன் எம்மிறைவன்;

இளைத்துத் தேய்வை குறைமதியே!
இவனே நிலைக்கும் நிறைமதியே!

பொருந்துங் கறைநீ உள்சுடரே
பொய்தீர் இவனோர் அருட்சுடரே!
பொழியுன் கதிரை மஞ்சறுக்கும்
பொலிவன் யாண்டும் பொன்றாதே!

மருந்தாம் மழலைக் குமரனுடன்
மகிழ்ந்தா டிடவா அம்புலியே!
மதில்சூழ் குமர கோயில்வன்
மகிழ்ந்தா டிடவா அம்புலியே! 64

நிலையாகக் கோட்டை நீகொள்வாய்
நிசிரர் கோட்டை இவன்கொள்வான்;
நிறையக் கோள்கள் நினைச்சூழும்
நீங்கும் அவையே அடியாரை!

அலைவாய் அபயம் நீதேடி
அலைவாய் அமர்ந்தான் சூர்த்தேடி!
அண்டம் சுற்ற ஓர்நொடியே
அதைநீ சுற்றில் குழப்படியே!

கலைகள் உனக்கோ ஒருசிலவே
கலைகள் போற்றும் கலையிவனே!
கங்கை அருகில் நீவருவை
கங்கை சுமந்த சீருடையான்!

நிலைகள் சிறக்க நினையழைத்தோம்
நினைந்தா டிடவா அம்புலியே!
நீர்சார் குமர கோயிலனை
நினைந்தா டிடவா அம்புலியே! 65

தக்கன் மாமன் தனைக்கண்டு
தவித்தே திரிந்தாய் வினைகொண்டு
தக்கன் தாதா வேதனையே;
தலையில் செய்தான் வேதனையே

கக்கல் உருண்டைக் காசினியின்
கவளத் தெறிப்பே நீயாகும்



ககனத் தியங்கும் அகிலமெலாம்
கவினாய்ப் படைத்த திவனன்றோ?

சிக்கல் உற்றாய் மனிதரினால்
சிதைத்தார் காலால் உன்தலையைச்
சிந்தைக் கெட்டா திடம்நின்றும்
சிந்தை வளரும் சேயிவனே!

பக்கம் வந்தே பலகாலம்
பணிந்தா டிடவா அம்புலியே!
பவந்தீர் குமர கோயிலனைப்
பரிந்தா டிடவா அம்புலியே! 66

**தானம்**

**எண்சீர் ஆசிரிய விருத்தம்**

அழிமதிசார் தக்கனவன் அளித்திட்ட சாபம்
அரைநொடியில் அகற்றிடுவன் அறிந்தேநீ வாராய்
இழிகுணத்துச் சூரனையும் இருகூறாய்ப் பிளந்தே
இன்னருளால் கொடியாக இருப்பிடமாய்க்
கொண்டான்

பழியகற்ற தினந்தினமும் படிந்துகடல் எழுந்தும்
பயனேதும் அறியாதே பரிதவித்தாய், அதனால்
எழிற்குமர கோயிலனை ஏற்றிகறை யகற்ற
இனிதுடனே ஆடிடவே அம்புலிநீ வாவே! 67

அகமதிலும் புறமதிலும் அருஞ்சீலர் ஆகும்
அடியவர்கள் கைதொழவும் ஆறுமுகன் வந்தே
அகமகிழ அன்னவர்க்கே அபயகரங் காட்டி
அவப்பிறப்பை அறுத்தாள ஆவலுடன் விரைவன்

இகத்துளவர் எய்திவிடும் இன்பமெலாம் தந்தே
இமையவர்கள் பதவியையும் இனிதுடனே ஈவன்!
மகத்துவத்தை நீயுணர்ந்தே மகிழ்குமர கோயில்
மன்னனுடன் ஆடிடவே அம்புலிநீ வாவே! 68

**தண்டம்**

இனிதழைத்தும் வருகிலைநீ இவன்சினந்தால் நீயே
இருக்குமிடம் தெரியாமல் உருக்குலைந்து போவாய்

பனிமுடியர் தலையேறிப் பறித்துவுனை ஆற்றில்
பாறஎறிந் திட்டிடுவன் பரமசிவன் காண

குனிந்திழிய பிரமனையே குட்டிசிரம் பிடித்தே
கொடுஞ்சிறையில் பூட்டியதைக் கொள்கமனத்
துள்ளே

இனியதனால் இன்குமர கோயிலுறை இளவல்
இடம்வந்தே ஆடிடவே அம்புலிநீ வாவே! 69

வானகத்தில் வையகத்தில் வளர்பகையை அழித்தே
வந்தடையும் வேல்விடிலோ வாழ்குவையோ மதியே
ஈனமிகு சூரனையும் இளவலொடு கிளையை
எளிதாவேல் எறிந்தழித்த இவன்பெருமை
எண்ணாய்

கூனமதி கொண்டவனே கூறுபெயர் மதியோ?
குவலயத்தில் ஆற்றலிலே குமரன்போல் உண்டோ?
ஆனதனால் அருங்குமர கோயிலுறை குகனாம்
அழகனுடன் ஆடிடவே அம்புலிநீ வாவே! 70

## 8. சிற்றில் பருவம்

### பன்னிருசீர் ஆசிரிய விருத்தம்

கருமைக் குமரிக் கடல்மண்ணும்
களியாம் நாஞ்சில் வளமண்ணும்
கலந்தே பன்னீர் தனில்பிசைந்து
கட்டிக் காக்கும் சிற்றிலிதே;

அருமை அரும்பு மலராலே
அழகாய்க் கோலம் அமைத்திட்டே
ஆவல் மோத அணியாக
ஆடும் சிறுமி எமைப்பாராய்;

பெருமை துள்ளும் புனிதோனே
பெரும்பேர் முருகப் பெருமானே
பிரமன் தலையை உடைத்தேயுன்
பிதாவும் கோதும் மெய்ப்பொருளே

இருமை வினைகள் எரிப்போனே
எளியேம் சிற்றில் சிதையேலே!



எழிலார் குமர கோயிலுறை
எம்மான் சிற்றில் சிதையேலே! 71

சிறியேம் சிற்றில் சிதைப்பதற்கே
சீர்சார் அமரர் சிறையல்ல,
சினக்கும் அவுணர் அரணல்ல,
சீறும் கிரௌஞ்ச மலையுமல,

நெறியாய் வாழும் நேசரையே
நெருக்கும் பிணியோ அதுவல்ல
நிமலன் உனையே பாடிமனம்
நிறையும் புலவர் மிடியல்ல,

பொறிகள் கலங்க பிரம்மனுக்குப்
போட்ட குட்டுக் கிலக்கல்ல
பொன்னின் வண்ணத் தெம்மானே
பிறவா யாக்கைப் பெம்மானே

செறிமும் மலத்தைச் சிதைப்பதுபோல்
சிறியேம் சிற்றில் சிதையேலே
செழிப்பார் குமர கோயிலுறை
செல்வா சிற்றில் சிதையேலே! 72

ஆண்டி முதலாய் அரசீறாய்
அகத்தே பளிங்காம் அடைவெய்தி
அடுக்கும் உயிரை அருள்மோத
அணைக்கும் பண்பு மிகக்கொண்டு

வேண்டி வேண்டிப் பொருளினையே
வீணே காலங் கழிக்காமல்
விரதங் கொண்டு வினையாற்றி
விளைவை யுனக்கே அர்ப்பணித்து

தூண்டில் புழுவாம் மாயையினைத்
துச்சம் எனவே தாண்டிவரும்
தூய அடியார் சிரந்தனிலே
துலங்கும் பூமன் எழுத்தினையே

தீண்டி அழிக்கும் திருவடியால்
சிறியேம் சிற்றில் சிதையேலே!

திகழும் வேளி மலைக்குமரா
சேயெம் சிற்றில் சிதையேலே! 73

நீரில் மூழ்கி நின்நினைவாய்
நீற்றைப் பூசி, நின்புகழை
நித்தம் பாடி, சிந்தையதில்
நிறையும் அன்பு நீராட்டி

ஊரில் உயர்ந்தோர் இயற்றிவரும்
உண்மை நோன்பு தமைச்செய்தே
ஒன்றாம் உனது படைவீடாய்
ஒளிருங் குமர கோயிலதில்

நேரில் வந்துன் தாள்பணிவோம்
நேசம் மிகவே பணிசெய்வோம்
நிலத்தில் சிறக்கும் வேளிமலை
நின்றே வேங்கை ஆனவனே

ஏரில் மிளிரும் இடங்கொண்டோய்
எளியேம் சிற்றில் சிதையேலே!
இலங்கும் வேலா யுதப்பெருமாள்
எமதாம் சிற்றில் சிதையேலே! 74

ஆணி னிடமாய் ஆகியதால்
அடைந்த செருக்கு மிகையாலோ
அருளும் முகமா றானதனால்
அகத்தே மூண்ட செருக்காலோ

வாணி தனக்கும் வழங்குகின்ற
வளஞ்சேர் ஞானச் செருக்காலோ
வந்த செருக்கு வேதாவை
வாட்டிக் குட்டும் செருக்காலோ

வேணித் தலையர் விருப்பமுற
விளக்கும் மூலப் பொருளாலோ
விரையும் கால இடம்பொருளும்
விளக்கா இளமைச் செருக்காலோ

நாணிக் குனியும் நெல்விளையும்
நாட்டாய் சிற்றில் சிதையேலே!



நாடும் குமர கோயிலுறை
நாதா சிற்றில் சிதையேலே! 75

நீலக் கடலில் விடந்தோன்ற
நிருதர் அமரர் நிலைகலங்க
நினது தந்தை நீள்சடையன்
நிலைமை மாற்றி அதையுண்டான்;

கோலக் கொடியாள் உன்தாயார்
கொழிக்கும் கருணை அறிவாய்நீ;
கொம்பன் ஆனை முகத்தண்ணன்
கொடிதைச் சாய்க்கும் குணமுடையான்;

ஞாலம் உண்டோன் உன்மாமன்
நாட்டைக் காக்கும் மனமுடையான்;
நல்ல அருளார் குடும்பமதில்
நற்பேர் முருகா வந்துதித்தாய்

சீலச் சிறுமி யாம்கண்டாய்
சிறியேம் சிற்றில் சிதையேலே!
சீரார் வேளி மலைக்குமரா
சேயெம் சிற்றில் சிதையேலே! 76

தேடி அவுணர் குலம்யாவும்
தீய்த்த இரக்கம் இல்லாதான்
திகழும் திருவார் உளங்கவரும்
திருடன் எனவே இழித்தோமோ!

தாடிக் கிழவன் உருவாகித்
தவித்தாய் வள்ளிக் கென்றோமோ?
தண்ணார் அருளைத் தானிறைக்கும்
தனித்த பித்தன் என்றோமோ?

பீடில் இடையன் மருமகனே
பெற்ற ஆறாம் முகத்தானே
பிணிக்கும் ஆண்டி என்றோமோ?
பெரியோய் சிற்றில் சிதையேலே!

ஆடிக் காற்றில் அலைபோல
அலைந்தே ஆடும் செந்நெல்சார்

அழகார் குமர கோயிலுறை
அன்பே சிற்றில் சிதையேலே! 77

ஆசை மோத அன்பரனும்
அருட்கண் உமையும் அன்புடனே
அப்பா உனையே அள்ளியெடுத்(து)
அணைக்கில் தூசோ அவர்க்காகும்!

ஓசை யிலதாய்த் துதிக்கரத்தில்
உனையே தூக்கி உனதண்ணன்
உரவார் புயத்தே வைத்தாட
உன்கால் புழுதி புரளாதோ?

மாசை நிறத்து மலர்மன்னா
மடவார் இருவர் மறுத்திடுவர்!
மணியே மலரே மாமருந்தே
மதித்தே யிதனை மனங்கொண்டு

தூசை நனைத்தே ஈரமுடன்
தொழுவார் குமார கோயிலுறை
செல்வா சிற்றில் சிதையேலே!
சிறியேம் சிற்றில் சிதையேலே! 78

காணும் பொருளும் காட்சிபடா
ககனப் பொருளும் மற்றுமுள
கரணம் ஆதி எமக்கீந்து
கழியச் செய்வாய் கருமலமே;

மாணும் தலைமைச் சிறப்போரும
மதிக்கும் தலைமை நினதன்றோ?
மயங்கும் உயிர்க்குச் செயலுண்டோ?
மன்னே யாவும் நீயன்றோ?

தாணும் விரும்பப் பொருளுரைத்த
தனிவேல் ஞானப் பெருஞ்சுடரே
தவழும் தண்ணார் முகில்பாயும்
தடங்கல் வேளி மலைக்கரசே

பேணுங் குணத்துப் பெருமாளே
பெருக உனையே சரணடைந்தோம்



பெம்மான் சிற்றில் சிதையேலே!
பெரியோய் சிற்றில் சிதையேலே! 79

எண்சாண் உடம்பில் ஏற்றமுறும்
எமது தலையை வணங்கவைத்தோம்;
எழிலாய் நினது புகழ்பேச
இனிதே வைத்தோம் வாய்தனையே,

கண்காண் பொருளே நின்வடிவீாம்,
கால்கள் சூழும் நின்கோயில்,
கருத்தை ஈர்க்கும் திருப்புகழைக்
காதும் விழைந்து கேட்டுவரும்;

தண்டா யுதனைத் தொழுவதற்கே
தாங்கி யுள்ளோம் கரங்களையே;
தாவும் மனத்தை நினக்காக்கித்
தரணி வாழ்க்கை சிறப்பிப்போம்

வண்டார் சோலை வளங்காட்டும்
வனப்பார் குமர கோயிலுறை
வடிவே சிற்றில் சிதையேலே!
வளமே சிற்றில் சிதையேலே! 80

## 9. சிறுபறைப் பருவம்

### பதினான்குசீர் ஆசிரிய விருத்தம்

அறுமு கத்தடை அன்பைக் காட்டி
அழகு முடியுங் காட்டியே
அணிந்த வேலை அங்கை காட்டி
அவுணர் அஞ்ச ஆர்த்திடும்

உறுவ லிக்கொள் உருவம் காட்டி
உள்ளம் ஈர்க்கும் அழகதை
உடலி லெங்கும் ஒளிரக் காட்டி
உவகை கொள்ளத் தாளினை

சிறுகத் தூக்கி சிரம சைத்து
செகத்தி லுள்ளோர் வாழ்த்தவே
சீர்த்த பறையை செங்கை தொட்டு
சிரித்துச் சிரித்து மகிழ்ந்துமே

செறுந ருக்கும் கருணை காட்டும்
சிறப்பு ளாய்மு ழக்குக!
சீர்கு மார கோயில் செல்வ
சிறுப றைமு ழக்குக! 81

காம குரோத கடிய குற்றம்
கருத்தை விட்டே ஓடிட
காத லோடு கசிந்து போற்றிக்
கந்தா உன்னைப் பாடிட

வீமங் காட்டும் வினைகள் ஓட
வேந்தர் ஆண்டி நாடிட
விறப்பு மிக்க வெளியி டர்கள்
விலகி ஓடி மறைந்திட

சேமங் கொல்லும் சிறுமை பஞ்ச
செயல்கள் யாவும் நடுங்கிட
சினம டக்கி சிவத்தை நாடும்
சீலர் உள்ளம் ஒடுங்கிட

ஏமங் காட்டும் இன்ப மேனி
இளவ லேமு ழக்குக!
எழிற்கு மார கோயில் செல்வ
இசைப்ப றைமு ழக்குக! 82

குமரி சூழும் குரைக டல்தன்
குரலெ ழுப்பிக் கூவுது
கொண்மூ சூழ்ந்து குளிரைப் பாய்ச்சி
கொட்டும் மாரி பாயுது

சமரில் வெல்லும் சக்தி வேலும்
சழக்கர் வீழ்த்தித் துள்ளுது
சமமில் லாத சரண பாதச்
சதங்கை வீரம் தெள்ளுது

அமர யின்பம் அருந்தும் தேவர்
அன்பர் இசையை வழங்கினர்
ஆழ்ந்த பக்தி அடியர் கூட்டம்
அதிர நாமம் முழங்கினர்



குமர கோயில் குமர னேநீ
சிறுப றைமு ழக்குக!
குரவர் ஏற்ற குரவை ஆட
சிறுப றைமு ழக்குக! 83

அருவ மென்பர் உருவ மென்பர்
அறியொ ணாத சொருபமே
அவனி யெங்கும் ஆக்கிக் காத்தே
அழித்து நிற்கும் சருவமே

உருகு வோர்க்குப் பெருகு வாழ்வை
உவந்த ளிக்கும் உண்மையே
உலப்பி லாத உறுதி யின்பம்
ஊட்டிக் காக்கும் ஒண்மையே

முருகு காட்டி முறைமை கூட்டி
முத்தி காட்டும் முதல்வனே
முனைப்ப கற்றி முதிரு ஞானம்
முற்று மீயும் புதல்வனே!

குருகு மொய்க்கும் குமர கோயில்
குமர னேமு ழக்குக!
குரவர் ஏற்ற குரவை ஆட
சிறுப றைமு ழக்குக! 84

**பன்னிருசீர் ஆசிரிய விருத்தம்**

தேய்த்த மதியைத் தியாகேசன்
திருவார் சடையில் தரித்திட்டான்
தீரச் சூரன் இரண்டாகத்
திகழும் இருக்கை கொடிகொண்டாய்!

பாய்த்த அன்புக் குறத்திக்காய்ப்
பாழுங் காட்டில் தினையுண்டாய்
பக்தர் அன்பர் என்றிடிலோ
பரமன் உந்தை மண்சுமப்பான்;

வாய்த்த அன்பர் தமிழுக்கோ
வளமை காட்டி வந்திடுவை
வளமார் தமிழும் வண்சிவனால்
வளர்ந்த தன்றோ? அதனாலே

ஆய்தல் செய்தால் அரனாம்நீ
அழகார் குமர கோயிலுறை
அன்பே முழக்கு சிறுபறையே!
அரசே முழக்கு சிறுபறையே!. 85

ஆறு முகத்தால் அறுமுகனாம்
அரனுக் குரைத்த ஆசானாம்
ஆறாம் கங்கை சுமந்ததனால்
அழகுப் பெயராம் காங்கேயன்

ஊறு செய்த தாருகனை
உலைத்த தாலே தாருகாரி
உளமாம் குகையில் உறைவதனால்
உரைப்பர் உனையே குகனென்றே

கூறும் இளமைச் செழிப்பாலே
குழகன் குமரன் ஆனாய்நீ
கொண்ட கார்த்திகைப் பெண்கள்
கொஞ்சி வளர்த்த கார்த்திகேயன்

வேறும் வேலன் வேள்எனவே
விளங்கும் வேலா யுதப்பெருமாள்
விரைந்து முழக்கு சிறுபறையே!
விசாகா முழக்கு சிறுபறையே! 86

தண்ணார் குமரிக் கடலெழும்பித்
தரையில் எறியும் மணிமுத்தே,
தகைசார் கல்வி வளங்கொண்டே
தாக்கி எறிவர் நாஞ்சிலரே,

பெண்ணார் எறிவர் பெருங்குழையைப்
பெரிதும் கோழி விரட்டிடவே;
பிரியத் தோடு ஏருழவர்
பழனம் எறிவர் விதைகளையே

கண்டோர் மயங்கும் கவின்சிறுவர்
களிப்பால் எறிவர் நெல்மணியைக்;
கையின் கரும்பு வில்லாலே
காமன் எறிவன் ஐமலரே;



மண்ணோர் மதிக்கும் மதியொளியே
முழக்கி யருளாய் சிறுபறையே!
மலைசார் குமர கோயிலனே
முழக்கி யருளாய் சிறுபறையே! 87

வீட்டில் இலங்கும் நினதுருவே
வீதி முழக்கும் திருப்புகழை,
வியன்மார் பெங்கும் விரைசாந்தம்,
வேலின் பெருமை பறைசாற்றும்,

கூட்டில் வாழும் தத்தையதும்,
கூவும் குமரன் திருநாமம்,
குளிரன் புடைய தொண்டருளம்
கொள்ளும் உனது தொண்டினையே

பாட்டின் இசையாய்ப் பழச்சுவையாய்ப்
பரவும் இயற்கை எழிலாகப்
படரும் மலரின் மணமாகப்
பாயுங் காற்றின் ஊறாகக்

காட்டிக் கலந்த தனிமுருகா
முழக்கி யருளாய் சிறுபறையே!
கார்சூழ் வேளி மலைக்கரசே!
முழக்கி யருளாய் சிறுபறையே! 88

**பதினான்குசீர் ஆசிரிய விருத்தம்**

காளியாம் தீயவை காயமு னைவாளை
கற்றவர் நெஞ்சம் புக்கு
கலைமகள் என்றுக ளிப்பருள் செய்வாளை,
கடுகியே பொருட்கு விக்க

பாளிதம் கட்டியே பாடுபட் டாரகம்
பார்த்திடும் திருவின் பெண்ணை;
பல்கோடி சீவர்கள் பாவந்தொ லைத்திடும்
பார்வதி தேவி யாளை

மாளிகை மட்குடில் மானிடர் உய்ந்திட
மாணறம் ஆகு வாளை;
மாண்புறப் போற்றியே மாந்திடும் நன்மைகள்
மன்னனே உன்னால் எய்தும்

வேளிம லைக்கொளும் வேலாயு தத்தனே
சிறுபறை முழக்கி யருளே!
வேணியர் மைந்தனே வேணாட்டுச் செல்வமே
சிறுபறை முழக்கி யருளே! 89

நாட்டிய மாடவே நன்மயி லுண்டிங்கு;
நாதமி சைத்து நிற்க
நற்குயில் வந்தது பொற்குரல் தந்தது
நாலாகும் திசையும் வெல்ல;

மீட்டியே யாழினை மென்குரல் வண்டினம்
மேவிமு ழக்கு துபார்;
மேளம்பி டித்திட மேதையாம் தவளைகள்
மொய்த்தன காண்க நீயே;

தீட்டிய தீந்தமிழ் திருப்புக ழோதிட
தேனொலிக் கிளிக ளுண்டு;
தீதறு தொண்டர்கள் காதுறக் கேட்டனர்
தேனென மாந்திக் கொண்டு

கோட்டம தறுத்திடு குமரகோ யிற்குக
கொட்டுக சிறுப றையே!
கொண்டல்த வழ்ந்திடு குமரிநன் னாட்டினாய்
கொட்டுக சிறுப றையே! 90

## 10. சிறுதேர்ப் பருவம்

### பன்னிருசீர் ஆசிரிய விருத்தம்

அளிகள் மொய்க்கும் ஆயிரமாம்
அணிசார் முளரி முகையவிழ,
அடுந்தீ மூண்ட தென்றலறி
அழகுக் குருகு பலவோட

களிகொண் டயர்ந்து கவினின்றிக்
கதைக்குந் தேரைக் கயம்பாய,
கயல்மீன் பதறிக் கரைதுள்ளும்
கணக்கில் பொய்கைக் கவின்காட்ட

தளிர்சார் தண்மைக் கிளைகளது
தழையப் பூத்துக் காய்த்திலங்கித்



தலையால் உணவைத் தானாக்கித்
தரணிக் கீயும் தருவோங்கும்

ஒளிசார் குமரி நாட்டிறைவா
உருட்டி யருளாய் சிறுதேரே!
ஓங்கும் குமார கோயிலனே
உருட்டி யருளாய் சிறுதேரே! 91

உன்னை அறியும் ஆர்வமிலேன்
உணர்வை அடக்கும் உறுதியிலேன்
உலகப் பொருளில் உழல்கின்றேன்
உய்ய வழியோ உணருகிலேன்

என்னை அறியும் அறிவுபெற
ஈசன் தமிழை இனிக்காட்டி
என்றும் அடியார் திருக்கூட்டம்
இடையில் இருக்க அருள்கூட்டி

முன்னை வினைகள் முழுதொடிய
முளரித் தாளை முன்னீட்டி
முகிழும் அன்புக் கடல்மோத
மூத்தோர் அடியார் தமைப்பேண

உன்னற் கரியாய் உளங்கொண்டே
உருட்டி யருளாய் சிறுதேரே!
ஓங்கும் குமர கோயிலனே
உருட்டி யருளாய் சிறுதேரே! 92

பொன்னின் முடிசார் தலையாறும்
புகழ்சார் விழிகள் மூவாறும்
பிரணவப் பொருளைப் பேசுமொரு
பெருமை மிளிரும் திருவாயும்

உன்னும் அடியார் குறைகேட்கும்
ஓரா றிரட்டைத் திருச்செவியும்
ஓங்கி ஒளிரும் நாசியதும்
உறுதிண் புயங்கள் ஈராறும்

தன்னே ரில்லாத் தனிக்கடம்ப
தாரைத் தரித்த திருக்கழுத்தும்

தரள மாலை தவழ்மார்பும்
தரணி காக்கும் கரங்களுடன்

பொன்னேர் முளரித் தாள்கொண்டோய்
உருட்டி யருளாய் சிறுதேரே!
பொய்யாக் குமர கோயிலனே
உருட்டி யருளாய் சிறுதேரே! 93

பிறப்பும் இறப்பும் அறியாத
பெரிதாங் குணங்கள் குறியாத
பிரிந்து சென்று புகுவதற்குப்
பிறிதோர் இடமே இல்லாத

சிறப்பில் சினமே புரியாத
சீறி அழிக்கத் தெரியாத
சிறிதும் துன்பம் பொழியாத
செறுநர் எவரும் அழியாத

மறப்பும் நினைப்பும் அடையாத
மறைக்க மறையே கிடையாத
மருளாம் காசும் அற்றவனாய்
மாயை உடம்பை எற்றவனாய்

உறக்கம் இலாத முருகோனே
உருட்டி யருளாய் சிறுதேரே!
ஓங்கும் குமார கோயிலனே
உருட்டி யருளாய் சிறுதேரே! 94

நிறைவாம் தவத்து நாரதரும்
நிலைக்கும் வேள்வி தனைச்செய்ய
நிசிரர் அஞ்சும் கிடாவொன்று
நிமிடம் தோன்றி நின்றார்த்து

பறையாய் முழங்கிப் பாய்ந்துவர
பதறி ஓட எல்லாரும்
பலம்சார் வீர வாகுவினால்
பணியச் செய்தே அதனையுமோர்

மறைகள் போற்றும் வாகனமாய்
முறையாய்க் கொண்ட மால்மருகா



மாந்தர் புரியும் சிறுமையினை
மாற்றி யருளும் வேல்முருகா

குறைகள் தீர்க்கும் குமரேசா
உருட்டி யருளாய் சிறுதேரே!
குமர கோயில் குருபரனே
உருட்டி யருளாய் சிறுதேரே! 95

**பதினான்குசீர் ஆசிரிய விருத்தம்**

உலகம் பற்பல உருள்சக் கரமதாய்,
உயர்ந்து பரந்த வான்வெளியை
ஒளிரும் நீலநல் தேராய்க் கொண்டுநீ
ஓட்டி இயக்கும் அஞ்ஞான்றே

அலகில் உடம்பினை அணிதேர் ஆக்கியே
அதில்சார் ஆன்மா தனிலேறி
அஃதின் பொறிகளும் அந்தக் கரணமும்
அடவிப் புலியாய் அதைவாட்ட

கலகப் புலன்வழி கடவித் தேரினைக்
கன்மம் மாயை தனையூட்டிக்
கரிய ஆணவம் கழித்தே கதியினைக்
காட்ட காயத் தேரோட்டும்

உலப்பை யறுத்திடும் உயர்வே லாயுதா
உருட்டி யருளாய் சிறுதேரே!
உறுவேல் துணைதரும் குமர கோயிலாய்
உருட்டி யருளாய் சிறுதேரே! 96

ஆணவக் கருவறை அழுந்திக் கிடந்தஎம்
அழுக்கை யகற்றத் தனுதந்தே
அதன்துணை யாகவே கரணம் புவனமும்
அதிகப் போகம் அளித்திட்டே

வேணநல் லறிவுடன் வேட்கைச் செயல்களை
விதவி தமாக எமக்கீந்து
வினைகளைப் பெருக்கியே விருப்பைச் சுருக்கியே
விளக்கி அறிவை வினைதாண்டிப்

பேணவே உன்றனைப் பெருஞ்சீர் தந்துமே
பிறவி தீய்க்க வழிகாட்டிப்
பித்தரைப் போல்எமைப் பத்தர் ஆக்கியே
பெருவாழ் வதனைப் பெருக்கமனக்

கோணம தகற்றிடும் குமர கோயிலின்
குகனே உருட்டாய் சிறுதேரே!
கொண்டனி தந்தவழ் குமரி நாடதின்
குரவா உருட்டாய் சிறுதேரே! 97

நீலக் கடலதில் நீந்தும் மீனினம்
நெடிதாம் திரைகுதித் தோடிவரும்
நீரார் நதியதன் நடுவே பாயவும்
நீண்ட ஆறதன் சினைவாளை

சாலப் பயந்துமே சட்டென் றார்த்துமே
சடுதி செழுங்கரை அதுபாய
சார்ந்தப் பசுவது விசுக்கென் றெழுந்துமே
சவியார் பழனமே பாய்ந்திடவும்

ஓலம் இட்டுமே ஓடிக் குருகினம்
ஓங்கும் தழைமரம் மோதிடவே
உறையுங் குரங்கினம் உயரப் பாய்ந்திட
உடையும் தேனடைச் சாறொழுகிக்

கோலம் கொழியொரு குமர கோயிலின்
குகனே உருட்டுக சிறுதேரே!
கொண்டல் நிதம்வரும் குமரி நாடதின்
குரவா உருட்டுக சிறுதேரே! 98

கூறும் அடியார் கூட்டமும் குடும்பம்
குலையா தோங்கிடக் குலம்வாழக்
குறுக்கும் எண்ணம் குடிபெயர்ந்தோடக்
குளிர்ந்து தழைத்திடக் குவலயமும்

நீறும் நின்தாள் நினைவதும் நிறைவாய்
நிலைத்து நின்றுமே வாழ்ந்திடவும்
நின்தண் ணருள்பாய் பன்னலக் கோயில்
நிலத்தில் என்றுமே ஒளிர்ந்திடவும்



பேறும் புகழும் பெற்றுமே வாழ
பிணிகள் நீக்கியே சுகங்காணப்
பெற்றோர் மற்றோர் பெருவுல கத்தில்
பெருமை வாழ்வது வாழ்ந்திடவும்

ஏறும் மயிலில் எழுந்தருள் செய்தே
எம்மான் உருட்டுக சிறுதேரே!
ஏர்சார் குமர கோயிலின் குகனே
எந்தாய் உருட்டுக சிறுதேரே! 99

கானமே வளர்கொடி கன்னி வள்ளியும்
கவினார் தெய்வநல் யானையொடு
கடுவினை யகற்றிடும் கடிவேல் வாழியே
கதியார் மயிலதும் வாழியவே

வானவர் வணங்கிடும் வனப்பார் சேவடி
வளமார் மார்பொடு திருநுதலும்
வாரிவ ழங்கிடும் வள்ளல் திருக்கரம்
வாழ்க என்றுமே வாழியவே

கூனலு ளத்தவர் குறைகள் தீர்த்திடும்
குளிர்கண் ஆறிரண் டும்வாழ்க
குவலயம் எங்குமே பவத்தை அறுத்திடும்
குறுந கைபுரி முகம்வாழ்க

ஊனம தொழித்திடும் உயர்வே லாயுதா
உருட்டி யருளுக சிறுதேரே!
உறுதுணை குமரகோ யில்வாழ் குமரனே
உருட்டி யருளுக சிறுதேரே! 100

அருள்மிகு வேலாயுதப் பெருமாள் பிள்ளைத் தமிழ் முற்றிற்று

# நூலாக்கம்

**பதிப்பாசிரியர்:** சித்தாந்தச் செம்மல், சைவசித்தாந்த மாமணி வித்துவான் இரா. அம்பை சங்கரனார் ஆசிரியர், ''சித்தாந்தம்'' சென்னை. **இணைப் பதிப்பாசிரியர்:** கலாநிதி நா. சுப்பிரமணியன் முதல்நிலை, மூத்தவிரிவுரையாளர், தமிழ்த் துறை, யாழ்ப்பாணப் பல் கலைக் கழகம், யாழ்ப்பாணம்; **நூல் தொகுப்பு சேகரிப்பில் உதவி, ஆலோசனை:** மயிலங் கூடலூர் பி. நடராசன், யாழ்ப்பாணம்; க. முத்துக் குமார சுவாமி, சைவசித்தாந்த நூற் பதிப்புக் கழகம், சென்னை; புலவர் வி. அண்ணாமலை முதலியார், பெங்களூர்; புலவர் த. கனகரத்தினம், வெள்ளவத்தை, கொழும்பு; எம்மெஸ். சுந்தரேச ஐயர், திண்டிவனம்; ரெ. ராமசாமி, அலோஸ்டார், மலேஷியா; ஐ. குலவீரசிங்கம், கோலாலம் பூர், மலேஷியா; மகாவித்துவான் சி. அருணைவடிவேலு முதலியார், காஞ்சிபுரம்; திருப்பழனஅடிகள், (பழனிசாமி படையாச்சி), ரோஸ் ஹில், மொரிசியசு; வித்துவான். வே.ரா. தெய்வ சிகாமணிக் கவுண்டர், வேலம் பாளையம்; ஐ. தி. சம்பந்தன், இலண்டன்; கவிஞர். ந. கந்தசாமி, மல்ல சமுத்திரம்; முனைவர் ஆ. கந்தையா, சிட்னி, ஆஸ்திரேலியா; மு. சு. சங்கர், திருநெல்வேலி; முனைவர் பொ. பூலோகசிங்கம், கொழும்பு; திருமதி சந்தனா நல்லலிங்கம், கொழும்பு; சுப. ஆவுடையப்ப தேசிகர், அம்பா சமுத்திரம்; டாக்டர் பழனிச்சாமிக் கவுண்டர், பிஜித் தீவு; பீக்கே நாயுடு, தென் இந்திய சன்மார்க்க சங்கம், நந்தி பிஜித்தீவு; கவிஞர் கலைவாணன், திருவானைக்கா; ஈ. வி. சிங்கன், சிங்கப்பூர்; வே. பேரம்பலம், மிக்சிகன், அமெரிக்கா; வி. எஸ். குமாரசாமி, இசுக்கார்பரோ, கனடா; ந. ஐயர்ாமன், மேலமாம்பலம், சென்னை; **நூலாக்கம், அகராதி, மெய்ப்பு, மேற் பார்வை:** புலவர். வெற்றியழகன், நங்கநல்லூர், சென்னை; கௌசல்யா சுப்பிரமணியன், மயிலாப்பூர், சென்னை; த. பஞ்சநாதன், பெசண்ட்நகர், சென்னை; அம்பை ச. பரமசிவம், மாம்பலம், சென்னை; **ஒளிஅச்சுக் கோப்பு, கணிப்பொறிப் பணி:** க. இரவி, க. சாந்தி, கோ. பார்த்த சாரதி, ம. இராசப்பா, மூவை ந. சுந்தரராசன், அ. ஜெயராஜசிங்கம், நா. உஷா, ச. செந்தில்குமார், சி. சண்முகம், சென்னை; **பக்கமாக்கல்:** ஓவியர்கள் அ. சந்திரஹாசன், ஜெ. பூவரசு, லோ. பாலமுருகன்; **வண்ண ஓவியங்கள்:** இரா. சிவக்கொழுந்து, வண்ணாரப்பேட்டை, சென்னை; **படச்சுருள் எதிர்மறை:** சக்தி வண்ண ஆய்வகம், சிந்தாதிரிப்பேட்டை, சென்னை; **அச்சிடல், கட்டு வேலை:** உதயம் ஆப்செட், சிந்தாதிரிப் பேட்டை, சென்னை; **தங்க அச்சு:** விநாயகா டைஸ்டாம்பு ரரயப் பேட்டை சென்னை; கிருஷ்ணன் கட்டாளரகம், வன்னியதேனாம்பேட்டை; செந்தில் கட்டாளரகம், திருவல்லிக்கேணி, சென்னை; **அலுவலக உதவி:** செ. நா. ஷோபனா, ச. பரமசிவம், கி. சரவணன், ச. முருகவேள், சென்னை; **நிதிக்கட்டுப்பாடு:** தெ. அருணாசலம், சென்னை; **பொதுத் தொடர்பு, இணைப்பு, மேற்பார்வை:** தெ. ஈஸ்வரன், கொழும்பு. **தயாரிப்பு:** க. சச்சிதானந்தன், மறவன்புலவு, சாவகச்சேரி.